*This e-book can be downloaded for free from*
*http://www.vallalar.org*

## வள்ளற்பெருமானாரின்

### சத்திய அறிவிப்பு

"ஊன உடம்பே ஒளிஉடம்பாய் ஓங்கிநிற்க
ஞான அமுதெனக்கு நல்கியதே-வானப்
பொருட்பெருஞ் சோதிப் பொதுவில் விளங்கும்
அருட்பெருஞ் சோதி அது"

"சுத்தவடிவம் சுகவடிவாம் ஓங்கா
நித்த வடிவாம் நிறைந்தோங்கு-சித்தெனும்ஓர்
ஞான வடிவம் இங்கே நான்பெற்றேன் எங்கெங்கும்
தானவிளை யாட்டியற்றத் தான்"

"உலகமெலாம் போற்ற ஒளிவடிவ னாகி
இலகுஅருள் செய்தான் இசைந்தே-தல்கன்என
நானேசன் மார்க்கம் நடத்துகின்றேன் நம்பெருமான்
தானே எனக்குத் தனித்து"

## இயல் ஒன்று

# சாகாக்கலை

உலகில் உள்ள உயினங்களில் அறிவில் உயர்ந்த நிலையினைப் பெற்று வாழும் மனிதன் இயற்கையை வென்று வாழத் தொடர்ந்து முயற்சி செய்து வருகின்றான். இயற்கையின் படைப்பாகிய காட்டைத் திருத்தி நாட்டை உருவாக்கி இருக்கின்றான்; கடலைக் கடக்க கப்பலை அமைத்து இருக்கின்றான்; வானத்தில் பறக்கத் தொடங்கி நிலவைத் தொட்டுத் திரும்பி வருவதற்குள் விண்வெளிக்கலனையும் படைத்து இருக்கின்றான். இயற்கை தந்துள்ள ஆற்றல்களாகிய மின்சாரம் ஒளி முதலியவற்றைத் தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்து பல புதுமைகளைப் படைத்து வருகின்றான்.

இயற்கையை வெல்ல தொடர்ந்து முயற்சி செய்துவரும் மனிதன் இயற்கையின் விந்தைமிகு படைப்பாகிய தன்னைப் பற்றியும்-தனக்கு நிகழும் பிறப்பு இறப்பு பற்றியும் சிந்திக்காமல் இருப்பானா! ஒவ்வொரு உயிரும் வாழ்வை

விரும்புகின்றது-இறப்பை வெறுக்கின்றது! பகுத்தறிவு இல்லாத உயிரினங்களும் வாழ்வை விரும்புகின்றன-இறப்பை வெறுக்கின்றன! மனிதனும் வாழ்வை விரும்புகின்றான் - இறப்பை வெறுக்கின்றான்! ஆனால் இறப்பு எவருடைய விருப்பு-வெறுப்பையும் பொருட்படுத்தாமல், எல்லா உயிர்களின் மீதும் தனது ஆதிக்கத்தை செலுத்திவருகின்றது. மனிதன் பகுத்தறிவு உடையவன். அவனுடைய பகுத்தறிவு. 'வெல்லவே முடியாது' என்று கருதப்படும் இறப்பையும் வெல்லுவதற்கு முயற்சி செய்து வருகின்றது. இறப்பைத் தள்ளிவைக்கவும் தவிர்த்துக் கொள்ளவும் அவன் பெருமுயற்சி செய்திருக்கின்றான். இம்முயற்சியே மருத்துவக் கலையாக உருவாகி இருக்கிறது. உலக நாடுகளில் வளர்ந்திருந்த தொன்மையான நாகரிகங்கள் அனைத்திலும் மருத்துவமும் ஒரு கூறாக இருந்திருக்கிறது. மிகத் தொன்மையான நாகரிகமாகிய தமிழர்தம் நாகரிகத்திலும் மருத்துவம் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய திருக்குறளில் 'மருந்து' என்னும் அதிகாரத்தில் அமைந்துள்ள,

**"அற்றா; அளவறிந்து உண்க அஃதுஉடம்பு**
**பெற்றான் நெடிதுய்க்கு மாறு"**

என்ற குறள், உடம்பு நீண்ட நாள் வாழும் நெறியைத் தெளிவுப்படக் கூறுகிறது. இந்தக் கருத்து இன்றைய மருத்துவ வல்லுனர்களும் ஏற்கும் உயர்வுடையதாக இருக்கிறது. உடம்பின் அழிவிற்கு-மரணத்திற்கு-பிணி ஒரு காரணமாக இருப்பதைக் கண்டறிந்து, அதற்கு அடிப்படைக் காரணங்கள் கழிவுப் பொருள்கள் உடம்பினின்றும் நீங்காமையும்-அளவோடு உண்ணாமையுமே என்று திருவள்ளுவர் கூறுகிறார். பிணியை நீக்கி இறப்பைத் தள்ளி வைக்கும் முயற்சியில் தமிழர் பெற்ற அனுபவ அறிவின் அடையாளமாக மேற்கூறப்பட்ட திருக்குறள் திகழ்கின்றது.

## அ.ஆயுள்நீடிப்பு - உடல் அழியாமை

உணவுக் கட்டுப்பாடு மூச்சுப்பயிற்சி (பிராணாயாமம்)தியானப் பயிற்சி ஆகியவற்றைக் கடைப்பிடித்து நோயற்ற நீண்ட ஆயுளைப் பெற்றமைக்கும் சான்றுகள் பல உள்ளன.

### 1.ஆழ்ந்த சுவாசத்தால்-நன்மனப் பண்புகளால் ஆயுள்நீடிப்பு

சீனாவில் நூற்று ஐம்பத்து ஒன்பது வயது வரை வாழ்ந்த யான்சுவாங் என்பார் தமது நீண்ட ஆயுளுக்குக் காரணம் கூறும்போது, "நான் உட்காரும் போது நிமிர்ந்தே உட்காருவேன். வேகமாக மூச்சை விடுவதில்லை. சினம் கொள்ளமாட்டேன். அச்சம் கொள்ளமாட்டேன்." என்று தெரிவிக்கிறார்.

### 2.உணவுத் தூய்மையால் ஆயுள் நீடிப்பு

பிரான்சு நாட்டில் நூற்று நாற்பத்து இரண்டு வயதுவரை வாழ்ந்த பெரியவர் ஒருவர், "தேநீர் காப்பி புகையிலை போன்ற மயக்கப் பொருட்களைத் தவிர்த்தல், பால் பழம் காய்கறி முதலியவற்றை உண்ணுதல், நாள்தோறும் நீண்ட தொலைவு நடத்தல் ஆகியவை நீண்ட ஆயுளைத் தரும்" என்று கூறுகிறார். நூற்று இருபத்து மூன்று வயதுவரை வாழ்ந்த அப்துல் கய்யூம் பாஸ்ரா என்பார் தாம் நாற்பது ஆண்டு

காலம் தண்ணீரையும் பேரீச்சம்பழத்தையும் மட்டுமே உண்டு வாழ்ந்ததாகத் தெரிவிக்கிறார்."

எளிய உணவு, அளவான உணவு, ஆழ்ந்த சுவாசம், அவா இன்மைப் போன்ற நன்மனப் பண்புகள்-ஆகியவற்றால் உலகியல் வாழ்வில் ஈடுபட்டிருந்தும் நோயற்ற நீண்ட ஆயுளைப் பெற்று வாழ்ந்தமைக்குச் சான்றுகள் சிலவற்றைக் கண்டோம். இனி அருள்நெறியில் ஈடுபட்டு வாழ்ந்த பெரியோர்கள் நீண்ட ஆயுளுடன் வாழ்ந்தமை பற்றிக் காண்போம். அருள்நெறியைப் பின்பற்றிய பெரியோர்களில் சிலர் நீண்ட ஆயுளைப் பெற்றதுடன் இறப்பை முழுவதும் வென்றுள்ள நிலையினையும் காண்கிறோம்.

## 3.**காய கல்ப மூலிகைகளால் ஆயுள்நீடிப்பு**

விஷ்ணுதாசர் என்ற வடநாட்டுத் துறவி தொண்ணூறு வயதுக்கும் மேற்பட்ட நிலையில் அசாமில் 'பரமகுண்டம்' என்ற இடத்தில் தவம் இயற்றிக் கொண்டிருந்தார். அவருக்கு முதுமையினால் கண்பார்வை மங்கி, பற்கள் அனைத்தும் விழுந்து, உடம்பு முற்றிலும் தளர்ந்து இருந்தது. இந்த நிலையில் விஷ்ணுதாசரை சாது ஒருவர் சந்தித்து மூலிகைகளாலான காயகல்ப மருந்தைத் தந்து, நாற்பது நாள்கள் அருந்தச் செய்தார். அதனால் அவருடைய உடம்பு முதுமை நீங்கி இளமை பெற்றது; கருமையான முடி வளர்ந்தது; புதிய பற்கள் தோன்றின. மூலிகை காயகல்ப முறையை சாதுவிடம் விஷ்ணுதாசர் கற்றறிந்தார். அதனை பல ஆண்டுகள் கழித்து முதுமை வந்தபோது மீண்டும் பயன்படுத்தி முதுமை நீங்கப் பெற்றார். இவ்வாறு இரண்டு முறை காயகல்ப மூலிகைகளைப் பயன்படுத்தி நூற்று எண்பத்து ஐந்து ஆண்டுகள் வாழ்ந்து தவம் செய்து 1955 ஆம் ஆண்டு மகாசமாதி அடைந்தார்.

காயகல்ப மூலிகைகள் மனதைக் குவியச் செய்யும் ஆற்றல் உடையவை. காயகல்ப மூலிகைகள் பற்றிக் கூறும் 'கோரக்கர் மலைவாகடம்' என்ற நூல் எருமைவிருட்சம் என்ற மரத்தின் பாலை அருந்துவதனால் மூர்ச்சை உண்டாகும் என்றும், பிறகு நரை திரை முதலான முதுமையின் சின்னங்கள் நீங்கி ஆயிரம் வருடம் வாழலாம் என்றும் கூறுகிறது. 'ஜோதி விருட்சம்' என்ற மரத்தின் பட்டையில் இருந்து கிடைக்கும் தைலத்தை அருந்துவதால் மூர்ச்சை உண்டாகி ஏழு நாள்கள் வரை மயக்கம் நீடிக்கும் என்றும், அதன் பிறகு மயக்கம் நீங்கி உடம்பு சோதிப்பிரகாசமாய் விளங்கும் என்றும் 'கோரக்கர் மலைவாகடம்' கூறுகிறது. மூர்ச்சை என்பதைத் தொடர் தியான அனுபவம் என்றே கொள்ள வேண்டும். காயகல்ப மூலிகைகளால் மனம் ஒடுங்கி, அதனால் கிடைக்கும் ஒருவகை ஆற்றல் முதுமையை நீக்கி இளமையைத் தருகிறது என்று கருதலாம்.

## 4.**தியானயோகத்தால் ஆயுள் நீடிப்பு**

திருக்கோவிலூர் ஞானானந்தகிரி சுவாமிகள் தமது வயது, நூற்று அறுபதுக்கும் அதிகமாக இருக்கும் என்று குறிப்பிடுகிறார். 1871 ஆம் ஆண்டில் வடலூரில் ஞானசபைக் கட்டிடம் உருவாகிக் கொண்டிருந்தபோது வள்ளற்பெருமானைச் சந்தித்ததாக அவர் கூறுகிறார். தமது நீண்ட ஆயுளுக்கான காரணத்தை யோகி சுத்தானந்த பாரதியிடம் விளக்கும் போது, தியானத்தால் மனம்

இலயமாகும் என்றும், அதனால் சுவாசம் அடங்கும் என்றும், சுவாசம் அடங்கினால் ஆயுள் பெருகும் என்றும் கூறுகிறார்.

முன் கூறப்பட்டவாறு மூலிகைகளால் உண்டாகும் மன ஒடுக்கத்தைத் தியானத்தின் வழியே பெற்று ஆயுளை நீட்டித்துக் கொள்ளலாம் என்ற உண்மையினை ஞானானந்தகிரி சுவாமிகளின் வாழ்வில் இருந்து அறிய முடிகிறது.

### 4.1.அரவிந்தரின் உடம்பில் தியானயோகத்தால் ஏற்பட்ட மாற்றங்கள்

தியானயோகத்தில் ஈடுபட்டு புதுவையில் வாழ்ந்திருந்த அரவிந்தர் மகாசமாதி அடைந்தபின் 5.12.1950 முதல் 9.12.1950 வரையிலும் எவ்வகையான அழிவின் சின்னங்களும் தோன்றாமல் ஐந்து நாள்களும் அவருடைய உடம்பில் ஒருவகை ஒளி கலந்திருந்ததைப் பலரும் கண்டனர். உடம்பு வைக்கப்பட்டிருந்த அறையில் ஒளியும் அமைதியும் சூழ்ந்திருந்தது. உடம்பு சிறிதும் கெடாமல் இருந்தது. ஐந்து நாள்களுக்குப் பிறகே ஒளி, உடம்பை விட்டு நீங்கத் தொடங்கியது. அதனால் உடம்பு சமாதியில் வைக்கப்பட்டது.

### 4.2.மகாசமாதியும் உடம்பு அழியாமையும்

தியானயோகத்தின் முதிர்ந்த நிலையே சமாதி என்று யோக நூல்கள் கூறுகின்றன. தியான யோகிகளின் உலக வாழ்க்கை முடிவடைந்து சமாதி அடைந்த பின்னும் அவர்தம் உடம்பு அழியாமல் இருப்பது உண்டு. உயிர் போனபின் மருந்துகளால் பக்குவப்படுத்தப்பட்டு அழியாமல் இருக்கும் உடம்புகள் எகிப்திய பிரமிடுகளில் வைக்கப்பட்டு இருக்கின்றன. ஆனால் தியான யோகிகளின் உடம்பு, மருந்துகள் வேதிப்பொருள்கள் ஆகியவற்றின் துணை இல்லாமலேயே அழியாமல் இருப்பது வியப்பிற்குரியதல்லவா!

நமது நாட்டில் தோன்றிய யோகானந்த பரமஹம்சர் என்ற யோகி, அமெரிக்காவில் யோகசங்கம் அமைத்து, ‘கிரியா யோகம்’ என்ற யோக நெறியினைக் கற்பித்துவந்தார். ‘பிராணன் என்னும் உயிர் ஆற்றல் உடம்பின் அழிவைத் தடுக்கும் வலிமை உடையது’ என்ற கருத்தை ‘ஒரு யோகியின் தன் வரலாறு’ என்ற தனது நூலில் அவர் தெளிவாகக் கூறி இருக்கிறார். இதனை மெய்ப்பித்துக்காட்டுவது போல் இவருடை மகாசமாதி அமைந்தது.

1952 ஆம் ஆண்டு மார்ச்சு ஏழாம் நாள் அமெரிக்க நாட்டில் லாஸ் ஏஞ்சல்ஸ் என்னும் நகரில் இரவு ஒன்பது மணி அளவில் யோகானந்த பரமஹம்ஸர் ஒரு சொற்பொழிவை முடித்தபின் புன்னகையுடன் தமது இருக்கையில் அமர்ந்து, மகாசமாதி அடைந்தார். இந்தியாவில் இருந்து அவருடைய அன்பர்கள் சிலரின் வருகைக்காகக் காத்திருந்து உடம்பைப் புதைக்காமல் இருபது நாள்கள் வரை வைத்திருந்தனர். உடம்பில் எவ்விதச் சிதைவும் உண்டாகவில்லை; முகத்தில் புன்னகை ஒளிவீசிக்கொண்டிருந்தது. இருபது நாள்களுக்குப் பிறகு இந்திய அன்பர்கள் வந்து சேர்ந்ததும், யோகானந்தரின் உடம்பை ஒரு பெட்டிக்குள் வைத்து, 1952 ஆம் ஆண்டு மார்ச்சு 28 ஆம் நாள் சமாதி செய்தனர். இவ்வாறு சமாதியில் வைக்கப்படும் நாள்வரை உடம்பு கெடாமலே இருந்தது. இது குறித்து எவ்வித ஐயமும் இன்றி அமெரிக்க அதிகாரிகள் சான்று அளித்துள்ளனர். மகாசமாதி அடைந்த இருபதாம்நாள் எடுத்த ஒளிப்படம், யோகானந்த பரமஹம்சரின் உடம்பு

எவ்வகைச் சிதைவுமின்றி மலர்ந்த முகத்துடனும் புன்னகையுடனும் இருந்ததைத் தெளிவாக்குகிறது.

## ஆ. பிற சமயங்களில் உடல் அழியாமை

### 1. கிறித்துவ நெறியில் உடல் அழியாமை

தியானத்தால் மனம் குவிந்து, அதனால் வெளிப்படும் ஆற்றல் உடம்பின் அழிவைத் தடுப்பதுபோல், பக்தியால் மனம் குவிந்து அதனால் உருவாகும் ஆற்றல் உடம்பின் அழிவைத் தடுக்கும் என்ற உண்மை கிறித்துவநெறியில் ஈடுபட்டு வாழ்ந்த துறவியரின் வாழ்விலும் காணப்படுகிறது.

பதினைந்தாம் நூற்றாண்டில் புனித கேதரின் அம்மையாரின் உடல், உயிர் அடங்கிய பின்னும் அழியாமல் இன்றுவரை இருந்து வருகிறது.

பதினைந்தாம் நூற்றாண்டில் கோவாவில் கிறித்துவ சமயப் பணிபுரிந்துவந்த புனித பிரான்சிஸ் சேவியர் என்ற அருளாளரின் உடம்பு, உயிர் அடங்கியது தொடங்கி-இன்று வரை அழியாமல் இருந்து வருகிறது. பல இடங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டதாலும், மாற்றி மாற்றிக் கல்லறையில் வைக்கப்பட்டதாலும், பொதுமக்கள் தொட்டுப் பார்த்து பல இடையூறுகள் செய்ததாலும் நிறம் மட்டும் மங்கி இருக்கிறது. ஆயினும் உடம்பு கெடாமல் சிதையாமல் இருந்து வருகிறது. இதனைக் கோவாவில் இன்றும் காணமுடியும். உயிர் அடங்கிய ஓர் ஆண்டுக்குப் பின் 1554 ஆம் ஆண்டு சேவியரின் உடம்பைப் பரிசோதித்த மருத்துவர்கள் உள் உறுப்புகள் சிதையாமல் இருந்ததையும், தெளிவுப்படுத்திச் சான்றளித்திருக்கின்றனர். நூற்று நாற்பது ஆண்டுகள் கழித்து சைமன் பேயர் என்ற கிறித்துவ நெறியாளர் புனித பிரான்சிஸ் சேவியரின் உடம்பை நன்றாகப் பரிசோதித்துக் கைகால்கள் விறைப்பு இன்றி-இயங்கும் நிலையில் இருந்ததோடு,-உடம்பில் செந்நிறம் மாறாமல்-ஈரப்பதம் கெடாமல் உயிர் இருப்பது போலவே-காட்சி அளித்ததாகத் தெரிவித்து இருக்கிறார்.

தென் அமெரிக்காவில் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் புனித மார்ட்டின் தொபொரேஸ் என்ற பெரியார். நோயாளிகளுக்காகச் செபித்து நோய்களை நீக்கும் வல்லமை பெற்றவர். உயிர் அடங்கி இருபத்து ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகும் இவரது உடம்பு சிதைவின்றி இருந்தது.

பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்து அடங்கிய புனித தெரசாளின் உடம்பு அடக்கம் செய்யப்பட்ட கல்லறையில் இருந்து ஒருவகை நறுமணம் வீசத்தொடங்கியது. அதனால் ஒன்பது மாதங்களுக்குப் பிறகு கல்லறை திறந்து பார்க்கப்பட்டபோது உடம்பு அழியாமல் இருந்தது தெரிய வந்தது.

### 2.பௌத்த நெறியில் உடல் அழியாமை

சீனாவில் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹான்ஷான் என்ற பௌத்த துறவி எழுபத்து எட்டாம் வயதில், தாம் சமாதி அடைய இருப்பதைச் சீடர்களுக்குத் தெரிவித்து, தாம் சமாதி அடைவது குறித்து அச்சம் அடைதல்

கூடாது, அழுது புலம்புதல் கூடாது, புத்தரின் திருநாமத்தைச் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும் என்று கட்டளையிட்டார். அதன் பிறகு நேராக நிமிர்ந்து தாமரை இருக்கையில் (பத்மாசனத்தில்) அமர்ந்து சமாதி அடைந்தார். மூன்று நாள்கள் வரை உடம்பு கெடாமல் இருந்தது சீடர்கள் அவரது உடலை உட்கார்ந்த நிலையில் ஒரு பெட்டிக்குள் வைத்து மண்ணிற்குள் அடக்கம் செய்தனர். பதினோரு ஆண்டு காலத்திற்குப் பின் உடம்பு வைக்கப்பட்டிருந்த இடத்தில் சில இடையூறுகள் ஏற்பட்டதால் வேறு ஓர் இடத்திற்கு எடுத்துச் சென்றனர். வழியில், பெட்டி சிறிது உடைந்து, உள்ளே இருந்த துறவியின் உருவம் சிதைவின்றி இருப்பது தெரியவந்தது. பெட்டியைத் திறந்து பார்த்தபோது, தாமரை இருக்கையில் அமர்ந்த நிலையில் துறவியின் உடல் இருந்தது. முடியும் நகமும் வளர்ந்து இருந்தன. உடம்பின் நிறம் சிறிதும் மங்காமல் இருந்தது. அவருக்காக அமைக்கப்பட்ட ஆலயத்தில் அவருடைய உடம்பு வைக்கப்பட்டது.

### 3.**இசுலாம் நெறியில் உடல் அழியாமை**

இசுலாம் நெறியைத் தோற்றுவித்த முகமது நபி அவர்களின் தோழர் சல்மான் பார்சி. இவர் அடங்கியபின், அடக்கம் செய்யப்பட்ட இடம் ஈராக் நாட்டில் உள்ளது. ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்குப்பின் ஈராக் நாட்டு ஆளுநரின் கனவில் சல்மான் பார்சி தோன்றித் தாம் அடக்கம் செய்யப்பட்டுள்ள சமாதி இடத்தில் தண்ணீர் மோதிக் கொண்டு இருப்பதாகவும், தமது உடம்பை வேறு இடத்தில் அடக்கம் செய்யுமாறும் கூறினார். கனவில் தோன்றி அவர் குறிப்பிட்ட இடத்தைத் தோண்டிப் பார்த்தபோது, அவ்விடத்தில் தண்ணீர் மோதிக் கொண்டு இருப்பது தெரிந்தது. ஆயினும் சல்மான் பார்சியின் உடல், அதன் மீது போர்த்தப்பட்டிருந்த துணி ஆகியவை அழியாமல் இருந்தன. பல நாட்டுத் தூதர்களும் இதைக்கண்டு அதிசயித்தனர். இலட்சக்கணக்கானோர் முன்னிலையில் அவரது உடல் வேறு ஒரு நல்ல இடத்தில் அடக்கம் செய்யப்பட்டது. உடம்பு சல்மான் பார்சி அவர்களுடையதா என்பது பற்றி ஐயம் எழக்கூடும். ஆனால் சமாதியில் வைக்கப்பட்டிருந்த உடல் பழமையானது என்பது பற்றியும்-அது அழியாமல் இருந்து வருகிறது என்பது பற்றியும் ஐயம் எழ வழி இல்லை.

## <u>இ. சமாதியில் மரணத்தை வென்று வாழ்வோர்</u>

தூங்கும்போது இதயத்துடிப்பு சுவாசம் போன்றவை தவிர உடம்பின் பெரும்பாலான இயக்கங்கள் நின்றுவிடுகின்றன; பெரியோர்களின் சமாதிநிலையினையும் ஒருவகைத் தூக்கம் என்று கருதலாம். தூங்கும்போது நடைபெறும் இதயத்துடிப்பு சுவாசம் ஆகியவையும் நின்று உடம்பின் இயக்கம் அனைத்தும் நின்று-மனம் முழுவதும் ஓய்ந்து இருக்கும் நிலையே சமாதி நிலை என்று கொள்ளலாம்.

சுவாசம் இதயத்துடிப்பு முதலியன நின்றபின் நிகழும் இறப்பிற்கு பின்னால் உடம்பு அழுகத்தொடங்குகிறது. ஆயினும் சுவாசம் இதயத்துடிப்பு ஆகியவை முழுதும் நின்று சமாதிநிலை அடைந்த பெரியோர்களின் உடம்பு அழியாமல் இருக்கிறது. சமாதிநிலையில் உயிர் உடம்பை விட்டு வெளியேறி இருந்தால் உடம்பு அழிந்திருக்க வேண்டும்; உயிர் உடம்பில் தங்கி இருப்பதனாலேயே-தூங்குவது போன்ற நிலையில் இருப்பதனாலேயே-உடம்பு அழியாமல் இருக்கிறது என்று கொள்ள வேண்டும். இத்தகைய பெரியோர்கள், மரணத்தை வென்று

சமாதியில் வாழ்ந்துகொண்டு இருக்கிறார்கள் என்பதற்குச் சான்று தருவதுபோல் பல நிகழ்ச்சிகள் நடந்து உள்ளன.

### 1.இராகவேந்திரர்

இராகவேந்திரர் என்னும் பெரியார் தாம் சமாதியில் அமர இருப்பதை முன்னரே தெரிவித்து, தமக்குப் பிருந்தாவனம் (சமாதி இடம்) அமைக்குமாறு கூறினார். 1671 ஆம் ஆண்டு குறிப்பிட்ட நாளில், பலர் முன்னிலையில் பிருந்தாவனத்தில் (சமாதி அறைக்குள்) புன்சிரிப்புடன் இறங்கித் தியானத்தில் அமர்ந்தார். அவர் சமாதியில் அமர்ந்ததும் சமாதியின் மேல்புறம் மூடப்பட்டது. சில மணிநேரம் சென்று வெளியூர் சென்றிருந்த அவருடைய அன்பர் ஒருவர் பிருந்தாவனத்தின் முன்பாக நின்று இராகவேந்திரர் சமாதியில் அமர்ந்ததை எண்ணி ஒரு பாடலைப் பாடித் துயருற்றபோது, பாடலில் உள்ளவை அனைத்தும் ஹரி சாட்சியாக உண்மைதான் என்ற குரல் பிருந்தாவனத்தின் உள்ளே இருந்து எல்லோருக்கும் கேட்டது. இன்றும் பகல் வழிபாட்டில் இராகவேந்திரரின் பிருந்தாவனத்தில் இந்தப்பாடல் பாடப்படுகிறது. இருநூற்று ஐம்பது ஆண்டுகளுக்குப் பின் ஆங்கிலேய ஆட்சியில், பிருந்தாவனத்தின் நிலங்கள் அரசு உடைமையாக்கப்பட இருந்தன. இது குறித்து விசாரணை செய்ய தாமஸ் மன்றோ என்ற ஆங்கிலேய அதிகாரி பிருந்தாவனம் வந்தார். அவருடைய அகக்கண்களுக்கு இராகவேந்திரர் காட்சி தந்தார் என்றும் அதன் விளைவாக பிருந்தாவனத்திற்குரிய நிலங்களை அரசுடைமையாக்கும் திட்டத்தை அவர் கைவிட்டார் என்றும் கூறப்படுகிறாது.

### 2. குருஞானசம்பந்தர்

பதினாறாம் நூற்றாண்டில், தமிழகத்தில் வாழ்ந்த தருமபுர ஆதின நிறுவனர்-தலைவர் குருஞானசம்பந்தர், தாம் சமாதியில் அமர திருக்கோயில் எழுப்பி, சிவலிங்கத்தின் கீழே உள்ள அறையில் சமாதியில் அமர்ந்தார். குருபீடத்தில் அமர குருஞானசம்பந்தரால் நியமிக்கப்பட்டிருந்த ஆனந்தப்பரவசர், குருஞானசம்பந்தர் சமாதியில் அமர்ந்த அருள்நிகழ்ச்சியைக் கண்டு, அருள் வயப்பட்டு குருநாதரின் சமாதிக்கோயிலின் முன்னர் அமர்ந்து மனம் ஒடுங்கி மகாசமாதி அடைந்தார். மற்ற அன்பர்கள் குருஞானசம்பந்தரின் சமாதிக்கு முன் சென்று, ஆனந்தப்பரவசர் சமாதி நிலையில் அமர்ந்ததைத் தெரிவித்து, குருபீடத்தில் அமர வேறு ஒருவரை நியமிக்குமாறு வேண்டினர். குருஞானசம்பந்தர் சமாதியில் இருந்து எழுந்து வந்து, சச்சிதானந்தர் என்பவரைக் குருபீடத்தில் அமர்த்தி, மீண்டும் சமாதி அறையுள் சென்று அமர்ந்தார். குருஞானசம்பந்தர் முதலில் சமாதியில் அமர்ந்து, சில நாள்கள் சென்று எழுந்துவந்து, வேறு தலைவரை நியமித்திருக்க வேண்டும் என்பதை நிகழ்ச்சிகளின் போக்கில் இருந்து அறியலாம்.

### 3.ஸ்ரீ போதுலூரி வீரபிரம்மம்

ஆந்திரத்தில் பன்னிரண்டாம் நூற்றாண்டில் நூற்று எழுபத்து ஐந்து வயது வரை வாழ்ந்ததாகக் கூறப்படும் வீரபிரம்மம் என்ற பெரியார் கி.பி.1194 ஆம் ஆண்டு சமாதியில் அமர்ந்தார். அவர் சமாதியில் அமர்ந்தபின் சமாதி அறையின் மேல் பகுதி மூடப்பட்டது. தாம் சமாதியில் அமர்ந்த பிறகும் மங்கல நாணைக் கழற்ற வேண்டா என்றும், மஞ்சள் குங்குமம் அணிவதை நிறுத்த வேண்டா என்றும்

மனைவிக்கு அவர் கட்டளை இட்டிருந்தார். அவ்வாறே மங்கலநாணை அணிந்து மஞ்சள் குங்குமத்துடன் கணவன் உயிருடன் இருப்பதாகக் கருதியே அவ்வம்மையார் வாழ்ந்து வந்தார். பத்துமாதங்களுக்குப்பின் இது குறித்து எழுந்த கொடிய அவதூறுகளைத் தாங்க முடியாமல், வீரபிரம்மத்தின் மக்களில் ஒருவர், சமாதியைத் திறந்து, அவர் உயிருடன் இருக்கிறாரா என்று சோதித்து அறியத் துணிந்தார். ஒரு நாள் இரவு, சமாதியில் மூடியிருந்த பகுதியை அகற்றி, சமாதிக்குள் சென்று வீரபிரம்மத்தை "அப்பா! அப்பா!" என்று அழைத்தார். வீரபிரம்மம் கண்விழித்து மகனின் செயலைக் கண்டித்து, உடனே சமாதியை மூடிவிடுமாறு கட்டளையிட்டார்.

### 4.இசுலாம் பெரியவர்கள்

நபிகள் நாயகம் அவர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் ஜீவனுடன் இருக்கிறார்கள்-உயிருடன் இருக்கிறார்கள்; கூப்பிட்டவர்கள் குரலைக் கேட்கிறார்கள்; வாடாத மலரைப்போல் ஜீவனுடன் இருக்கிறார்கள்! என்று இசுலாம் நெறியில் தோய்ந்த பெரியோர்கள் கருதுகின்றனர். நபிகள் நாயகத்தின்பால் பேரன்பு கொண்டிருந்த ஆரிஃப்நாயகம் என்ற உறவினர், மதினா நகரில் நாயகமும் அடக்கம் செய்யப்பட்ட புனித இடத்தில் நின்று அஸ்ஸலாமு அலைக்கும்! என்று கூறியதும், நபிகள் நாயகம் அடக்கம் செய்யப்பட்ட இடத்தின் உள்ளே இருந்து, "அலைக்கும் அஸ்ஸலாம்!" என்று நாயகத்தின் குரல்கேட்டது என்றும், பெருமானாரின் அடக்கத்தலத்தில் இருந்து அவர்களது கரம் வெளிப்பட்டுக் காட்சி அளித்தது என்றும் கூறப்படுகின்றது.

ஆரிஃப்நாயகம் அவர்கள் உயிர் அடக்கம் கொண்டபின், அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் அன்பர்கள் வருந்தி நின்றபோது, இறைவனின் அடியவர்களை இறந்தவர்களாகக் கருதக்கூடாது!" என்று ஆரிஃப் நாயகத்தின் குரல் கேட்டதாகவும், கபரில் இருந்து (உடம்பு புதைக்கப்பட்டுள்ள இடத்தில் இருந்து) கரம் ஒன்று வெளிப்பட்டதாகவும் அன்பர்கள் அதைப்பற்றி பைஅத் (அருள் ஒப்பந்தம்) செய்து கொண்டார்கள் என்றும் கூறப்படுகிறது.

பதினாறாம் நூற்றாண்டில் லாகூரில் இருந்து வந்து தமிழகத்தில் நாகூரில் வாழ்ந்திருந்த ஷாகுல் அமீது என்ற பெரியார், தம் மகனிடம் தாம் சமாதியில் வைக்கப்பட்டதும்-மூன்று நாள்களுக்குப்பின் அவ்விடத்திற்கு வந்து சலாம் சொல்லுமாறும் தம்மிடமிருந்து மறுமொழி வந்தால், சமாதியில் தாம் உயிருடன் இருப்பதாக எண்ணி அங்கேயே தங்கி வாழுமாறும், மறுமொழி வராவிட்டால் இலாகூருக்குச் சென்று விடுமாறும் கூறினார். அவ்வாறே அவர் சமாதி அடைந்ததும், மூன்றாவது நாள் பலர் முன்னிலையில், ஷாகுல் அமீது அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் அவருடைய மகன் சலாம் கூறினார். அப்போது "வ அலைக்கும் சலாம்" என்று தந்தையின் குரல் சமாதியின் உள்ளே இருந்து கேட்டது.

### 5. சிற்றம்பல நாடிகள்

பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த சீர்காழி சிற்றம்பல நாடிகள் என்னும் பெரியார், தாமும் தமது மாணவர்கள் அறுபது பேரும் சமாதியில் அமர இருப்பதை முன்னரே அறிவித்தார். அனைவருக்கும் சமாதியில் அமரத் தனித்தனி நில

அறைகள் மயிலாடுதுறை காவிரிக்கரையில் அமைக்கப்பட்டன. குறித்த நாளில் மக்கள் பெருந்திரளாகக் கூடினர். சிற்றம்பல நாடிகள் மூன்று வெண்பாக்களைப் பாடித் தமக்கென அமைக்கப்பெற்றிருந்த அறையில் அமர்ந்து சமாதி கூடினார். பிறகு ஒவ்வொரு மாணவரும் குருநாதர் சிற்றம்பல நாடிகளை ஒவ்வொரு வெண்பாப் பாடித் துதித்து அவரவருக்கு அமைக்கப்பட்டிருந்த சமாதியில் அமர்ந்ததும் சமாதி அறைகள் மூடப்பட்டன. ஆனால் ஒரு மாணவர் மட்டும் தவறு ஒன்றுக்கு பரிகாரமாக-சிற்றம்பல நாடிகள் ஆணையிட்ட வண்ணம்-வடநாட்டு யாத்திரை சென்றிருந்தார். சில நாள்கள் கழித்து திரும்பிவந்த போது தனது குருவாகிய சிற்றம்பல நாடிகள் சமாதியில் அமர்ந்ததுவிட்டதைக் கண்டார். சிற்றம்பல நாடிகளின் சமாதியின் முன்னே நின்று தமக்கும் ஒரு சமாதி அமைக்கப்படவில்லையே என்று துயருற்று, "ஆண்டகுரு அம்பலவா! அடியேற்காய் மீண்டும் எழுந்தருள வேண்டாவோ! என்று துதித்தார். சமாதி திறந்து, சிற்றம்பல நாடிகள் மாணவரை உள்ளே அழைத்து தமது மடியின்மீது அமர வைத்துக் கொண்டார். அதன்பின் இருவரும் நிட்டை கூடினர். சமாதி மீண்டும் மூடிக்கொண்டது. இவர்கள் சமாதியில் அமர்ந்த இடம் சித்தர்காடு என்று அழைக்கப்படுகின்றது.

இது வரையில் சமாதியில் உடம்பு அழியாமல் விளங்கும் பெரியோர்களின் அனுபவங்களைக் கண்டோம். இனி, உடம்பு முழுவதுமே ஏதேனும் ஒரு தெய்வீக உருவமாய் ஒளியாய் வெளியாய் மாறுதல் அடையும் அருளாளர்களின் அனுபவங்களைக் காண்போம்.

## ஈ. உடம்பு முழுதும் மாறும் நிலை

பட்டினத்தடிகள் திருவொற்றியூர் கடற்கரையில், விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள் சிலரை அழைத்து தமது உடம்பை அங்கு இருந்த ஒரு பெரிய பாத்திரத்தால் மூடிவிடுமாறும், சிறிது நேரம் கழித்து திறந்து பார்க்குமாறும் கூறினார். அவர்கள் அவ்வாறே அவர் உடம்பை மூடி திறந்து பார்த்தபோது அவரது உடம்பு சிவலிங்கமாக மாறி இருந்தது. திருநாவுக்கரசர் திருப்புகலூரில் சிவலிங்கத்தில் உடம்போடு கலந்தார். சுந்தரர் வெள்ளையானை ஊர்ந்து வான்வழியே சென்று உடம்போடு கயிலை சென்றார். திருஞானசம்பந்தர் தமது திருமணத்தின்போது திருப்பெருமணக்கோயிலை மணமகளாருடன் அடைந்து பதிகம் பாடினார். அப்போது பெருஞ்ஜோதி ஒன்று எழுந்தது. அதனுள் திருஞானசம்பந்தரும் மணமகளாரும் மணங்காண வந்தாரும் உடம்புடன் கலந்தனர். மாணிக்கவாசகர் தில்லைவாழ் அந்தணர்கள் அனைவரும் காண தில்லை சிற்சபையில் உடம்போடு கலந்தார்.

இமயமலையில் பத்ரிநாத் பகுதியில் பாபாஜி என்ற சித்தர் பல நூற்றாண்டுகளாக வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்றும், அவருடைய உடம்பிற்கு நிழல் உண்டாவது இல்லை என்றும், நடக்கும்போது அடிச்சுவடு உண்டாவது இல்லை என்றும், சங்கரர் கபீர்தாசர் முதலான பெரியோர்கள் சிலருக்கு அவ்வப்போது காட்சி தந்திருக்கிறார் என்றும், 'ஒரு யோகியின் தன்வரலாறு' என்ற தனது நூலில் யோகானந்த பரமஹம்சர் கூறுகிறார். பாபாஜியைத் தாமும் சந்தித்து உரையாடியதாக தெரிவிக்கிறார். இந்நிகழ்ச்சிகளிலிருந்து உடம்பு ஒளியாக மாறிய

பிறகும் அன்பர்கள் சிலருக்கேனும் உடம்புடன் காட்சிதந்தவாறு மரணத்தை வென்று வாழும் பெரியோர்களும் உள்ளனர் என்று அறிகிறோம்.

## <u>உ.மரணத்தை வெல்லும் முயற்சி</u>

மேற்கூறப்பட்ட நிகழ்ச்சிகளில் ஏதேனும் சில செய்திகள் மிகைப்படுத்தப்பட்டிருக்கலாம்; அவற்றை முற்றிலும் உண்மைக்குப் புறம்பானவை என்று ஒதுக்கிவிட இயலாது. பல்வேறு நாடுகளிலும் சிலரேனும் நீண்ட ஆயுளுடன் வாழ்ந்து வருவது பற்றிய செய்திகளை பத்திரிகைகள் வாயிலாக அவ்வப்போது அறிகின்றோம். அறிவியல் அறிஞர்கள் முதுமையை ஒத்திவைக்க, நீக்க, தவிர்க்க, ஆய்வுகள் பலவற்றைத் தொடர்ந்து செய்தவாறு இருக்கின்றனர். சித்த மருத்துவ நூல்களில் முதுமையை நீக்கி ஆயுளை நீட்டிக்க உதவும் மருந்துகள் பற்றி விரிவான செய்திகள் பல காணப்படுகின்றன. இத்தகைய முயற்சிகள் அனைத்தையும் இறப்பைத் தள்ளிவைக்கும் அல்லது ஒத்தி வைக்கும் நிலையின் பாற்பட்டவை என்று கருதலாம்.

மருத்துவ அறிவியல் இதயத்துடிப்பு நின்று விடுவதையே ‘இறப்பு’ என்று வரையறை செய்கிறது. செயற்கை முறையில் சில நிமிடங்கள் இதயத்தைத் துடிக்கச் செய்ய இயலும். ஆதலால் மூளையின் செல்கள் இறந்து அதன் செயல்கள் அனைத்தும் நின்றுவிடுவதே ‘இறப்பு’ என்று வேறு ஒரு வரையறையும் கூறப்படுகிறது. உடம்பின் வெப்பம் நீங்கிவிடுதல், தசைகள் சுருங்கி விரியும் தன்மையினை இழந்து விறைப்புத்தன்மை அடைதல், இரத்த ஓட்டம் நின்று உடம்பின் நிறம் மங்குதல் முதலியன இறப்பைத் தொடர்ந்து நடைபெறும் நிகழ்ச்சிகள் இதன் பிறகு நுண்ணுயிரிகள் உடம்பை மக்கி அழியச் செய்கின்றன.

சமாதிகள் உள்ள அருளாளர்கள் சிலரின் உடம்பில் உயிர்ச்செயல்களான இதயத்துடிப்பு சுவாசம் முதலானவை நின்ற பின்பும்-உடம்பு அழியாமல் இருந்தமை பற்றிய செய்திகள் பலவற்றை முன்னர் கண்டோம். அவற்றுள் யோகானந்த பரமஹம்சர் என்ற யோகி அமெரிக்க நாட்டில் லாஸ்ஏஞ்சல்ஸ் என்னும் இடத்தில் மகாசமாதி அடைந்தபின், அவரது உடம்பு இருபத்தொரு நாள்களுக்குப் பிறகும் அழிவின் சின்னங்கள் எதுவும் தோன்றாமல் விளங்கியது என்ற செய்தி ஆய்வாளர்கள் கவனத்தில் கொள்ள வேண்டிய ஒன்றாகும். ‘இந்த நிகழ்ச்சி உண்மையானதே’ என்று பொறுப்பான அதிகாரிகள் சான்றளித்துள்ளனர். ‘ஒரு யோகியின் தன் வரலாறு’ என்ற நூலில் ‘கிரியா யோகம்’ என்ற பயிற்சியால் உடம்பின் அணுக்கள் (செல்கள்) அழிவதைத் தடுக்க முடியும். அவற்றை ஆற்றலாக மாற்றவும் முடியும் என்று யோகானந்த பரமஹம்சர் கூறுகிறார்.

**“நெற்றிக்கு நேரே நிறைந்த ஒளிகாணில்**
**முற்றும் அழியாது உடம்பு”**

**“அகம்புறம் பேராப் பொருளை அறியில்**
**உகம்பவ காட்டும் உடம்பு”**

என்று உடம்பு அழியாமை பற்றி ஔவைக்குறள் கூறும் செய்திகளும் இங்கு நினைவுக்கூரத்தக்கன.

இதயத் துடிப்பு சுவாசம் முதலான உயிர்செயல்கள் நின்ற பின்பும் நுண்ணுயிரிகளின் செயலால் உடம்பு அழியாமல் இருக்கக் காரணம்தான் என்ன? ஏதோ ஒருவகை ஆற்றல் உடம்பில் தங்கி இருந்து அதன் அழிவை தடுத்துக் கொண்டிருக்க வேண்டும். அந்த ஆற்றல் உடம்பிற்கு எங்கிருந்து கிடைக்கிறது?

தூங்கும்போது, உடம்பு முழுவதும் ஓய்வாக இருந்தாலும்-உயிர் உடம்பில் இருக்கிறது-உயிர்ச்செயல்களான இதயத்துடிப்பு சுவாசம் முதலியன நிகழ்கின்றன. அதனாலேயே தூக்கநிலையில் உடம்பை நுண்ணுயிர்கள் தாக்கி அழிப்பதில்லை. உயிரின் ஆற்றல் இதயத்துடிப்பு சுவாசம் ஆகியவற்றை நடத்திக்கொண்டே, நுண்ணுயிர்களான பாக்டீரியாக்கள் உடம்பை அழித்து விடாமல் பாதுகாக்கின்றது என்று கொள்ள வேண்டும்.

தூக்க நிலையில் உயிர் உடம்பில் தங்கியிருப்பது போலவே சமாதி நிலையிலும் உயிர் உடம்பில் தங்கியிருக்கிறது என்று கருதவேண்டும். அதனாலேயே சமாதியில் இருக்கும் பெரியோர்களின் உடம்பில்-இதயத்துடிப்பு சுவாசம் முதலான உயிர்ச்செயல்கள் அனைத்தும் ஒடுங்கினாலும்-உயிர் உடம்பில் தங்கி இருந்து, உடம்பை நுண்ணுயிரிகள் அழித்துவிடாமல் பாதுகாக்கிறது என்றும் கொள்ள வேண்டும்.

அருளாளர்கள் சமாதி அடைந்தபின் அவர்கள் உடம்பு அழியாமல் இருக்கும்நிலை, அவர்கள் மரணத்தை வெல்லும் முயற்சியில் ஒரு வகையான வெற்றியைப் பெற்றிருக்கிறார்கள் என்பதை புலப்படுத்துகிறது.

மகாசமாதியில் அமர்ந்த பிறகும் இராகவேந்திரர் தம் மாணவருடன் பேசியதாகக் கூறப்படுகிறது. தருமபுரம் ஆதினத்தை நிறுவிய குருஞானசம்பந்தர் சமாதியில் அமர்ந்த சில நாள்களுக்குப்பின் சமாதி கலைந்து எழுந்து வந்து பேசிய வரலாறு ஒன்றும் கூறப்படுகிறது. வீரபிரம்மம் என்ற பெரியார் மகாசமாதியில் அமர்ந்து பல மாதங்களுக்குப்பின் தம் மகனுடன் பேசியதாக அவர்தம் வரலாறு எடுத்துரைக்கிறது. இவை போன்ற சான்றுகளால், பெரியோர்கள் சமாதியில் இருக்குங்கால் உயிர் உடம்பில் அடங்கி இருக்கிறது என்பதையும், அவர்கள் சமாதியில் இறப்பை வென்று வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதையும் உய்த்துணரலாம்.

இத்தகைய பெரியோர்களின் சமாதி ‘ஜீவசமாதி’ என்று வழங்கப்படுவதும் கவனிக்கத்தக்கது. இதற்கும் மேலாக திருஞானசம்பந்தர் போன்ற பெரியோர்கள் உடம்பை ஒளியில் கலக்கச் செய்திருப்பதும், மாணிக்கவாசகர் போன்ற பெரியோர்கள் உடம்பை வெளியோடு வெளியாக கலக்கச் செய்திருப்பதும் மிகவும் வியப்புக்குரியதாக இருக்கிறது.

## ஊ. சாகாக்கலை

பெரியோர்கள் சமாதியில் அமர்வதிலும், உடம்பை சிவலிங்கம் போன்ற தெய்வீக உருவமாக மாற்றி விளங்கச் செய்வதிலும், ஒளியாக அல்லது வெளியாக மாற்றும் அரிய நிகழ்ச்சியிலும், உடம்பு மரணம் அடைந்து அழியும் நிலை தவிர்க்கப்பட்டு உள்ளது. இந்நிலையை அடையும் பொருட்டு அவர்கள் ஒரு

நெறியைப் பின்பற்றி இருக்க வேண்டும். அதனை “சாகாக்கலை” அல்லது “சாகாக்கல்வி” என்று கருதலாம். “சாகாக்கலை” என்றாலும் “சாகாக்கல்வி” என்றாலும் பொருள் ஒன்றே. கலை என்பதற்குக் கல்வி என்ற பொருளும் உண்டு”.

உடம்பு மரணம் அடைந்து அழியும் நிலையைத் தவிர்த்து, சமாதியில் அமர்தல், உடம்பை சிவலிங்கம் போன்ற உருவமாக மாற்றி அமைத்து விளங்கச் செய்தல்-ஒளியாக்கி மறையச் செய்தல்-வெளியில் கலக்கச் செய்தல்-ஒளி உடம்புடன் மரணத்தை வென்று வாழ்தல், போன்று அற்புத நிலைகளைப் பெற உதவும் கலையே சாகாக்கலை என்று வரையறைச் செய்யலாம்.

மூலிகைகளால் ஆயுள் நீடித்தல், ஜீவசமாதியில் உடம்பை அழியாமல் ஆக்குதல், உடம்பை ஒளி அல்லது வெளி ஆக்குதல் முதலியவற்றைத் தொடர்புப்படுத்தி சிந்தித்தால் சாகாக்கலை பற்றிய சில அடிப்படை உண்மைகள் புலப்படும்.

காயகல்ப மூலிகைகள் உடம்பை உறுதியாக்குவதற்குப் பயன் பட்டிருக்கின்றன. அன்றி, அவற்றால் உடம்பை அழியாமல் நிலைக்கச் செய்யும் சமாதி அனுபவம் முதலான நிலைகள் கிட்டியதாகத் தெரியவில்லை. சமாதிநிலை போன்ற அனுபவங்களைப் பெற செய்யப்படும் பயிற்சிகளை மேற்கொள்ள உறுதியான நோயற்ற உடம்பு தேவை. அதற்குக் காயகல்ப மூலிகைகளைப் பெரியோர்கள் பயன்படுத்தி இருக்கின்றனர்.

ஜீவசமாதி அனுபவத்தில் உடம்பு அழியாமல் தடுக்கப்பட்டிருக்கிறது. உடம்பு சிவலிங்கமாக மாறுதல்-ஒளியாக மாறுதல்-வெளியாக மாறுதல் முதலியவற்றில் பரு உடம்பு முழுதும் மாற்றம் அடைந்திருக்கிறது. அதனால் ஜீவசமாதி அனுபவத்தை சாகாக்கலையில் கிடைக்கும் தொடக்கநிலை வெற்றி என்றும், உடம்பு ஏதேனும் ஒரு தெய்வீக உருவமாய், ஒளியாய், வெளியாய் மாற்றம் அடையச் செய்யும் பேற்றினை சாகாக்கலையில் கிடைக்கும் இறுதிநிலை வெற்றி என்றும் கருதலாம்.

**1.சாகாக்கலையின் ஆசிரியர்கள்**

தமிழர்தம் நாகரிகத்தில் சாகாக்கலை சிறந்த இடத்தைப் பெற்றிருந்ததன் காரணமாக சாகாக்கலையைக் கற்பதே உண்மையான கல்வி என்ற கருத்துப் புலப்படுமாறு, “சாவாமல் கற்பதே கல்வி” என்ற ஔவையார் தனிப்பாடல் அமைந்துள்ளது. தமிழ்மொழியில் வழங்கிவரும் சித்தர் பாடல்களில் சாகாக்கலையினைப் பற்றிய பல்வேறு குறிப்புகள் காணப்படுகின்றன.

**“சாகாமல் இருப்பதற்குத் தான்கற்ற கல்வியன்றோ**
**வாகான மெய்க்கல்வி வகுத்தறிநீ கல்மனமே!”**

**“சாவது மில்லை சதாகோடி ஊனே”**

**“இறக்கவும் வேண்டாம் இருக்கலும் ஆமே”**

**“மேலைவாசல் வெளியுறக் கண்டபின்**
**காலன் வார்த்தை கனாவிலும் இல்லையே”**

என்பன போன்ற பாடல்கள் தமிழகத்தில் சாகாக்கலை வழங்கி வந்தமைக்குச் சான்றாக அமைந்துள்ளன. சாகாக்கலை பெரும்பாலும் சித்தர்களின் இலக்கியங்களிலேயே காணப்படுகிறது. சித்தர்களையும் ஜீவசமாதியில் அமர்ந்த பெரியோர்களையும் உடம்பு முழுவதும் ஒளி முதலியனவாக மாற்றம் அடையச் செய்யும் ஆற்றல் உடைய அருளாளர்களையும் சாகாக்கலையின் ஆசிரியர்கள் என்று கருதலாம்.

## 2.திருஅருட்பிரகாச வள்ளற்பெருமான்

தமிழகத்தில் சாகாக்கலையினை விளங்கச்செய்த பெரியோர்களில் காலத்தால் அண்மையில் தோன்றிய அருளாளர் திருஅருட்பிரகாச வள்ளற்பெருமான் ஆவார். 1823 ஆம் ஆண்டு சிதம்பரத்தை அடுத்துள்ள மருதூரில் வள்ளற்பெருமான் தோன்றினார்கள். பிறாந்த ஆறு மாதத்தில் தந்தையார் மறைந்ததால் குடும்பம் சென்னையில் குடியேறியது. அவர்கள் பள்ளியில் ஆசிரியரிடம் பயிலாமல்-ஓதாமல்-கல்வியை உணர்ந்தார்கள் என்பதை,

**“ஓதாது உணர்ந்திட ஒளிஅளித்து எனக்கே**
**ஆதார மாகிய அருட்பெருஞ் ஜோதி”**

என்ற அவர்களது அருட்பெருஞ்ஜோதி அகவலாலும், “குமார பருவத்தில் என்னைக் கல்வியில் பயிற்றும் ஆசிரியரை இன்றியே என் தரத்தில் பயின்று அறிதற்கு மிகவும் அருமையாகிய கல்விப் பயிற்சியை எனது உள்ளகத்தே இருந்து பயிற்றுவித்தருளினீர்”. என்ற அவர்களது உரைநடை விண்ணப்பத்தாலும் அறியலாம். இளமைப்பருவத்திலேயே இவர் செந்தமிழ்ப் பாடல்களை இயற்றி சென்னைக் கந்தகோட்டத்தில் வீற்றிருக்கும் முருகப் பெருமானை வழிபட்டார்கள். திருவொற்றியூர் திருமுல்லைவாயில் முதலான இடங்களில் எழுந்தருளி உள்ள இறைவன் மீதும் பாடல்கள் இயற்றி அருளினார்கள்.

ஆரவாரம் மிகுந்த சென்னை வாழ்வை விடுத்து, 1858 முதல் வடலூரை அடுத்த கருங்குழியில் உறைந்திருந்தார்கள். 1865 ஆம் ஆண்டு சமரச வேத சன்மார்க்க சங்கத்தை அமைத்தார்கள். அற்றார் அழிபசி தீர்க்கும் அறம் இடைவிடாது நடைபெறும் பொருட்டு 1867 ஆம் ஆண்டு சத்திய தருமச்சாலை என்னும் அருள்நிலையத்தை வடலூரில் நெறியினை விளக்க 1872 ஆம் ஆண்டு சத்திய ஞானசபை என்னும் அருள் நிலையத்தை சத்திய தருமச்சாலைக்கு அருகில் அமைத்தார்கள். 1870 ஆம் ஆண்டு முதல் வடலூரை அடுத்த மேட்டுக்குப்பம் என்ற ஊரில் சித்திவளாகம் என்னும் குடிலில் தங்கி இருந்தார்கள். 1874 ஆம் ஆண்டு தைப்பூச நன்னாளில் சித்திவளாகத்தின் உள்ளே சென்று, ஓர் அறைக்குள் அமர்ந்து, கதவுகளைத் திருக்காப்பிடுமாறு அன்பர்களுக்குக் கட்டளை இட்டார்கள். திருக்காப்பிடும்போது “கதவைத் திறந்து பார்க்காதீர்கள்! திறந்து பார்த்தால் ஒன்றும் இருக்காது! வெறும் வீடாகத்தான் இருக்கும்!” என்று கூறி இருந்தார்கள். அவ்வாறே ஓராண்டிற்குப்பின் கதவைத் திறந்து பார்த்தபோது அறை வெறும் வெளியாகத்தான் இருந்தது.

### 2.1. வள்ளற்பெருமானும் திருஅருட்பாவும்

வள்ளற்பெருமான் சென்னையில் வாழ்ந்திருந்த இளமைக்காலம் தொடங்கி, மேட்டுக்குப்பத்தில் திருக்காப்பிட்டுக்கொண்ட காலம் வரை, பல்லாயிரம் பாடல்களை அருளி இருந்தார்கள். இப்பாடல்கள் திருஅருட்பா என்னும் தலைப்பில் ஆறுதிருமுறைகளாக வெளியிடப்பட்டுள்ளன. முதல் நான்கு திருமுறைகள் வள்ளற்பெருமானின் தலைமாணாக்கர் தொழுவூர் வேலாயுதனார் அவர்களால் 1867 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. ஐந்தாம் திருமுறையும் தொழுவூர் வேலாயுதனார் அவர்களால் 1880 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. அதன் பிறகு முதல் ஐந்து திருமுறைகளும் ஆறாம் திருமுறையும் பல பதிப்புகளாக வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள் திரு.ஆ.பாலகிருட்டிணப்பிள்ளை அவர்கள் பதிப்பு சிறந்ததாகத் திகழ்கிறது. தவத்திரு ஊரன் அடிகளார் பதிப்பும் ஆய்வாளர்களுக்கு பெரும் துணைசெய்யும் நிலையில் அமைந்துள்ளது.

திருஅருட்பா ஆறு திருமுறைகளிலும் 5818 பாடல்கள் அமைந்துள்ளன. இவற்றில் ஏறத்தாழ 3890 பாடல்களுக்கு வள்ளற்பெருமான் கைப்பட எழுதியுள்ள மூலஏடுகள் கிடைத்துள்ளன. வள்ளற்பெருமானைப் போன்ற அருளாளர் ஒருவரின் கையெழுத்து மூல ஏடுகள் கிடைத்திருப்பது தமிழகத்தின் நற்பேறு என்றே கருத வேண்டும். பெரும்பாலான பாக்களுக்கு படிவேறுபாடு போன்ற இடையூறுகளைத் தவிர்க்கும் நிலையில் மூல ஏடுகள் கிடைத்திருப்பது ஆய்வுகளை மேற்கொள்ள பெரும் துணையாக இருக்கும்.

திருஅருட்பாவில் சமரச சுத்த சன்மார்க்கம் என்ற நெறியை வள்ளற்பெருமான் விளக்கி இருக்கிறார்கள் என்று கூறலாம். ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை சமரச சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய குறிக்கோள் என்று வள்ளற்பெருமான் வலியுறுத்துகின்றார்கள். அதனால் இந்நெறியை உயிர் இரக்கத் திருநெறி என்றும் அவர்கள் அழைக்கிறார்கள். சமரச சுத்த சன்மார்க்க நெறியில் நிற்பதால் மரணத்தை வெல்ல முடியும் என்று வள்ளற்பெருமான் வலியுறுத்தி, “சாகாதவனே சன்மார்க்கி” என்றும் அறிவித்திருக்கிறார்கள்; ‘சாகாக்கலை’ பற்றியும், அழியாமல் விளங்கும் நித்தியதேகத்தை தாம் பெற்றது பற்றியும் நூற்று ஐம்பதுக்கும் மேற்பட்ட பாடல்களை வள்ளற்பெருமான் அருளி இருக்கிறார்கள். சாகாக்கலை என்பது உடம்பு மறைந்தாலும் புகழுடன் வாழ்தல் முதலியவற்றைக் குறிக்காது என்பதையும், நரை திரை பிணி மூப்பு முதலியவற்றைத் தவிர்த்து பூத உடம்பை மாற்றி, அழிவில்லாத நித்தியதேகமாக ஆக்குவதே என்பதையும் அவர்களது சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய விண்ணப்பம் தெளிவாகக் குறிப்பிடுகின்றது.

திருஅருட்பாவினை சாகாக்கலையை விளக்கும் நூல் என்றே கருதலாம். திருஅருட்பாவில் அமைந்துள்ள சாகாக்கலையினைச் சார்ந்து தவத்திரு சரவணானந்தா அவர்கள் ‘சாகாக்கல்வி’ என்ற நூலை வெளியிட்டு இருக்கிறார். தவத்திரு ஊரன் அடிகள் சாகாக்கலையை விளக்கி ‘வள்ளலார் மறைந்தது எப்படி?’ என்ற நூலை வெளியிட்டு இருக்கிறார். வள்ளற்பெருமான் விளக்கும் சாகாக்கலை அனுபவங்களை அரவிந்தரின் தியானயோக அனுபவங்களுடன் ஒப்பிட்டு திரு.டி.ஆர். துளசிராம் ‘அருட்பெருஞ்ஜோதியும் சாகாஉடம்பும்’ என்ற ஆய்வு நூலினை ஆங்கில மொழியில் இயற்றியுள்ளார்.

இனி, தமிழர் பண்பாட்டில் சாகாக்கலை இடம்பெற்றுள்ள நிலையினையும், அது திருஅருட்பாவில் வளர்ந்து முழுமைபெற்று விளங்கும் உண்மையினையும் அடுத்து வரும் இயல்களில் ஆராய்வோம்.

அடிக்குறிப்புகள்

1. திருக்குறள், மருந்து, குறள் 1
2. தமிழ்வாணன், 100 ஆண்டுகள் வாழ்வது எப்படி, பக்கம் 6
3. மேலது, பக்கம் 7
4. மேலது, பக்கம் 10
5. T.S.Ananthamurthy, A Short Biography of Sreeman Tapaswiji Maharaj,pp.10-11
6. மேலது, பக்கம் 43
7. மலைவாகடம் பக்கம் 35
8. பத்மாசினி கோபாலகிருஷ்ணன் -ஸ்வாமி நித்யானந்தகிரி ஸ்ரீஞானானந்த தரிசனம், பக்கம் 26
9. மேலது, பக்கம் 45
10. மேலது, பக்கம் 25
11. Nirobaran, Twelve Years with Sri Aurobindo,pp.280-283
12. Paramahansa Yogananda, Autobiography of a Yogi, page 236
13. Paramahansa Yogananda In Memorium, pp.121-124
14. Ibid.,p. 106
15. Charles G.Herbermann and others, The Catholic Encyclopaedia,p.446
16. James Brodrick, S.J.,Saint Francis Xavier,pp.532-533
17. Ibid.,pp.533-534
18. நிக்கோலஸ், தூயவர்களின் வரலாறு பக்கம் 305-306
19. அருள் குழந்தைசாமி, சேசுவின் அர்ச். அவில்லாதெரசாள், பக்கம் 131-132
20. Upasaka Lu K'uan yii, Practical Buddhism, p,160
21. Ibid., pp.161-162
22. M.K.முஹமது இபுராஹிம், இராக்கில் குடிகொண்ட இறைநேசச் செல்வர்கள்., பக்கம் 509-510
23. டாக்டர்.என்.ஸ்ரீதரன். இராகவேந்திர சுவாமிகள் வாழ்க்கை விளக்கம் பக்கம் 55-56
24. மேலது, பக்கம் 73-74
25. சிவபோக சாரமும் சொக்கநாத வெண்பாவும், பக்கம் 45-47
26. சுவாமி விஜயானந்தா, ஸ்ரீபோதலூர் வீரபிரம்மம் வாழ்க்கை வரலாறு. பக்கம் 104-105
27. மேலது, பக்கம் 112-113
28. எஸ்.எஸ்.அலி, அற்புத ஜோதி ஆரிஃப் நாயகம், பக்கம் 50
29. மேலது, பக்கம் 51-53
30. மேலது, பக்கம் 174-174
31. எம்.ஏ.ஹைதர் அலி, காருண்யஜோதி நாகூர் பாதுஷா நாயகம், பக்கம் 262-267
32. சித்தர்காடு ஸ்ரீசிற்றம்பல நாடிகள் அருள் வரலாறு, பக்கம் 11-12
33. Paramahansa Yogananda op.cit.,pp227-279
34. Ibid.,pp.346-347
35. The world Book Encyclopaedia , page 60
36. Paramahansa Yogananda in Memorium, op.cit,page 106
37. Paramahansa Yogananda in Memorium,op.cit,120-124

38. Paramahansa Yogananda op.cit,m page.235
39. ஔவைக்குறள், பாடல் 238
40. மேலது, பாடல் 244
41. என்.ஸ்ரீதரன், மே.கா.நூ.,பக்கம் 55-56
42. சிவபோக சாரமும் சொக்கநாத வெண்பாவும் மே.கா.நூ.,பக்கம் 45-47
43. சுவாமி விஜயானந்தா, மே.கா.நூ., பக்கம் 112-113
44. கழகத் தமிழ் அகராதி, பக்கம் 292
45. ஔவையார் தனிப்பாடல்கள், பாடல் 74
46. பதினெண் சித்தர் பெரிய ஞானக்கோவை, இடைக்காட்டு சித்தர் பாடல்கள், கண்ணி 781
47. திருமந்திரம் மூவாயிரம், பாடல் 783
48. மேலது, பாடல் 781
49. மேலது, பாடல் 602
50. திருஅருட்பா, ஆறாம் திருமுறை, பாடல் 4615 வரிகள் 23-24
51. திருஅருட்பா உரைநடைப்பகுதி பக்கம் 451
52. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள், திருஅருட்பா வரலாறும் ஆராய்ச்சிக் குறிப்புகளும், பக்கம் 52-54
53. மேலது, பக்கம் 57
54. மேலது, பக்கம் 61-62
55. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 444-445
56. திருஅருட்பா உரைநடைப்பகுதி. பக்கம் 307
57. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள் பக்கம் 82-83
58. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 457-458
59. சரவணானந்தா, சாகாக்கலை, திண்டுக்கல் சத்திய ஞானக்கோட்டம் வெளியீடு
60. ஊரன் அடிகள், வள்ளலார் மறைந்தது எப்படி?
61. T.R.Tulasiram, Arutperunjothy and Deathless Body, Volumes I & II

# இயல் இரண்டு

## தமிழர் பண்பாட்டில் சாகாக்கலை

### அ.சாகாக்கலையின் தொன்மை

திருஅருட்பிரகாச வள்ளற்பெருமான் தமது திருஅருட்பாவில் ஊன் உடம்பை அழியாமல் விளங்கச் செய்ய இயலும் என்பதனை,

**“ஊனேயும் உடம்பு அழியாது ஊழிதொறும் ஓங்கும்”**

என்று தெளிவாகக் கூறுகிறார்கள்.

ஊன்உடம்பை அழியாமல் செய்து மரணத்தை வெல்ல உதவும்நெறி சன்மார்க்கமே என்றும் சத்தியம் செய்து அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**"பொத்திய மலப்பிணி புழுக்கு ரம்பைதான்**
**சித்தியல் சுத்தசன் மார்க்கச் சேர்ப்பினால்**
**நித்தியம் ஆகியே நிகழும் என்பது**
**சத்தியம் சத்தியம் சகத்து ளீர்களே"**

சன்மார்க்கத்தின் தொன்மையை எடுத்துக்காட்டும் வகையில் வள்ளற்பெருமான்,

**"அழியாநிலைதரும் இயற்கைத் தொன்மையாம்**
**சுத்தசன்மார்க்கச் சங்கநின்றேத்தும் சத்திய**
**ஞானசபையவா"**

என்று ஒரு பாடலை அருளி இருக்கிறார்கள். இந்தப்பாடலில் இருந்து, சன்மார்க்கநெறியினை வள்ளற்பெருமான் இயற்கைத் தொன்மைநெறி என்று கருதுகிறார்கள் என்பது புலனாகின்றது. சன்மார்க்கநெறி இயற்கைத்தொன்மை உடையது என்பது பெறப்படும். தொன்மைநெறி என்றாலே பழமையான நெறி என்று பொருள்படும். இயற்கைத் தொன்மைநெறி என்றால்-வரலாற்றுக்கு எட்டாத தொன்மைநெறி, தொடக்கம் காணமுடியாத தொன்மைநெறி என்று கொள்ள வேண்டும்.

## 1.சாகாக்கலையும் சித்தர்கள் இலக்கியமும்

காயகல்ப மூலிகைகளால்-மருந்துகளால் -ஆயுளை நீட்டித்துக்கொள்ளுதல், உடம்பு அழியாமல் மரணமில்லாமல் காலத்தை வென்று சமாதியில் இருத்தல், உடம்பை ஒளியாக மாற்றுதல் போன்றவை சாகாக்கலையில் இடம் பெற்றுள்ளன. இவையாவும் திருமூலர், போகர், உரோமரிஷி, கொங்கணவர், சட்டைமுனி முதலான சித்தர்களின் நூல்களில் மட்டும் காணப்படுகின்றன. இந்நூல்கள் யாவும் நமது தமிழ்மொழிக்கே உரிய செல்வக்களாக இருந்து வருகின்றன. ஆகவே தமிழ்மொழி வழங்கும், தமிழகத்தில்தான் சாகாக்கலை தோன்றி இருக்க வேண்டும் என்பதில் எந்த ஐயமும் இருக்கமுடியாது. சாகாக்கலையின் தொன்மையினை அறிய வேண்டுமாயின் தமிழ்மொழியில் அமைந்திருக்கும் திருமந்திரமே பெரும் துணை செய்வதாக அமைந்துள்ளது.

## 2.சாகாக்கலையின் தொன்மை-திருமந்திரத்தில் அகச்சான்றுகள்

திருமூலரின் காலம் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டு என பல்வேறு அறிஞர்களின் கருத்துகளை கருத்துகளை ஆராய்ந்து, திரு.இரா.மாணிக்கவாசகம் முடிவு செய்கிறார். இது திருமூலர், மூலன் உடம்பில் புகுந்து வாழ்ந்த காலம் ஆகும். மூலன் உடம்பில் புகுவதற்கு முன் நிகழ்ந்த தமது வரலாற்றைத் திருமூலரே திருமந்திரம் தற்சிறப்புப்பாயிரத்தில் தெரிவிக்கிறார்.

**"நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடில்**
**நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி**

**மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரமர்**
**என்று இவர் என்னோடு எண்மராமே”**

என்ற பாடலில் நந்தியிடம் தாம் மாணவராய் இருந்தபோது, மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரபாதர் ஆகியோரும் தம்முடன் உடன்பயின்றதாக திருமூலர் கூறுகிறார். பதஞ்சலி என்ற பெயருடன் பலர் வாழ்ந்ததால், தம்முடன் பயின்ற மாணவர் பதஞ்சலியை பிரித்துக்காட்டும் வகையில், ‘மன்று தொழுத பதஞ்சலி’ என்று திருமூலரின் வாக்கு அமைந்துள்ளது. மேற்காணும் திருமந்திரப் பாடலால்,- திருமூலர், மன்று தொழுத பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகியோர் சமகாலத்தவர் என்ற அடிப்படையில் திருமூலர் காலத்தை இனி ஆராய்வோம்.

வியாக்கிரபாதர் வசிட்டரின் தங்கையை மணந்தவர். பதஞ்சலி என்ற பெயருடன் பலர் இருந்ததுபோல் வியாக்கிரபாதர் என்ற பெயரில் வேறு எவரும் இருந்ததாகத் தெரியவில்லை. ஆகவே வியாக்கிரபாதரின் காலம் வசிட்டரின் காலமே என்று முடிவு செய்வதில் வரலாற்றுச் சிக்கல்கள் எதுவும் எழுவில்லை.

வசிட்டரின் காலம் இராமாயணகாலம். இலக்கியச் சான்றுகள், வரலாற்றுச் சான்றுகள், அயல்நாட்டு வரலாற்று அறிஞர்கள் கண்ட முடிவுகள் ஆகியவற்றை ஆராய்ந்து திரு.கா.சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் முதலான தமிழ்ச்சங்கத்தின் காலம் கி.மு.ஐயாயிரம் என்றும், கி.மு. மூவாயிரத்துக்கு முன் நிகழ்ந்த கடல் கோள்களினால் இலங்கை தனியாகப் பிரிந்து இருக்கலாம் என்றும் கூறுகிறார். இதனால் இராமாயணகாலம் கி.மு.மூவாயிரத்தை ஒட்டி அமைந்திருக்க வேண்டும் என்று முடிவு செய்யலாம்.

இனி, இராமாயண காலத்தை வேறு ஒரு புதிய கோணத்தில் ஆராய்வோம். வால்மீகி இராமாயணம் பாலகண்டத்தில் இராமன் பிறந்த நேரத்தில் அமைந்திருந்த கோள்களின் நிலை கூறப்பட்டுள்ளது. இந்தக் குறிப்பிட்ட கோள்களின் நிலை, எந்த ஆண்டில் அமைந்திருக்கக்கூடும் என்பதை மிகமிக விரிவாக ஆராய்ந்து, திரு.என்.நரசிங்கராவ் என்ற கோள்நூல் அறிஞர், இராமன் பிறந்த ஆண்டு கி.மு.4433 என்று கணித வழியில் மெய்ப்பித்து இருக்கிறார். கி.மு.மூவாயிரத்துக்கு முன் இலங்கை தமிழகத்தில் இருந்து பிரிந்து இருக்கலாம் என்ற திரு.கா.சுப்பிரமணிய பிள்ளையவர்களின் கருத்தும் இதற்குத் துணை செய்வதாகவே அமைந்து உள்ளது.

ஆகவே, இராமாயண காலம் கி.மு.4000- கி.மு.3000 ஆகியவற்றிற்கு இடையில் அமைந்துள்ளது என்று கொள்வது பொருந்தமானதே. இராமாயண காலமே வசிட்டாரின் காலம் திருமூலருடன் உடன் பயின்ற வியாக்கிரபாதரின் காலம், திருமூலரின் காலம். அதனால் திருமூலர் மூலன் உடம்பில் புகுமுன் சாகாக்கலை பயின்று வாழ்ந்த காலம் கி.மு.4000 முதல் கி.மு.3000 வரை என்று முதலில் கொள்வோம்.

**“இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி**
**இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே**
**இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே**
**இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே”**

என்று திருமூலர் கூறுவதால், தமது ஆசிரியர் நந்தியம்பெருமானிடம் உபதேசம் பெற்று, எண்ணமுடியாத ஆண்டுகள் மரணத்தைவென்று அவர் வாழ்ந்திருக்கிறார் என்பது தெளிவாகிறது.

நந்தியம்பெருமானிடம் திருமூலருடன் சேர்ந்து பயின்ற வியாக்கிரபாதர்,

**"அழியாக் காயம் அழி யாது**
**அநேக காலம் தவம் செய்யும்"**

**"களிச்சென்னப் போகாக் காயமும் அதுதான்**
**வெளிச்சென்ன தேகம் ஒருகோடி யுகமே"**

என்று உடம்பு எண்ணற்ற பல ஆண்டுகள் அழியாது விளங்குவது பற்றி கூறுகிறார். இதேபோல் திருமூலருடன் உடன்பயின்ற மற்றொரு மாணவரான 'மன்றுதொழுத' பதஞ்சலி,

**"ஆழி தூள்கள் ஆகி மேரு**
**அண்டம் வேறு கூற தாய்**
**ஊழி காலம் ஆன போதும்**
**யோகி சாவ துள் எதோ"**

என்று பல ஊழிகள் ஆனாலும் உடம்பு அழியாமல் விளங்கும் தன்மையைக் கூறுகிறார். இவர்கள் இருவரும் கூறும் கருத்துக்கள், உடம்பு அழியாது நீண்டகாலம் விளங்கும் என்ற திருமூலரின் கருத்துடன் ஒத்து இருப்பது கவனிக்கத்தக்கது.

திருமூலர் நந்தியம்பெருமானிடம் உபதேசம் பெற்று-கணக்கிட முடியாத நெடுங்காலம் வாழ்ந்திருக்கிறார் எனில், நந்தியம்பெருமானிடம் உபதேசம் பெற்ற காலம் வரலாற்றுக்கு எட்டாத தொல்பழங்காலம் என்றே கொள்ள வேண்டும். சாகாக்கலை தொல்பழங்காலத்திற்கு முன்பே வழங்கி இருந்திருக்கிறது என்பதையும் உய்த்துணர வேண்டும். அதனால் சாகாக்கலை விளங்கும் சன்மார்க்க நெறியினை இயற்கைத் தொன்மைநெறி என்று வள்ளற்பெருமான் எடுத்துக்காட்டி இருப்பது மிகவும் பொருத்தமானதே என்று முடிவு செய்ய வேண்டும்.

'தமிழ்த்தொன்றல்' திரு.வி.கலியாணசுந்தரனார் அவர்களும் சித்தமார்க்கம் அநாதியானது என்றும், அதன் தொன்மையை அளந்து அறிய முடியாது என்றும் கூறுவது, வள்ளற்பெருமானின் மேற்கண்ட கருத்தை அழகாகவும் எளிமையாகவும் சுருக்கமாகவும் விளக்குவதுபோல் அமைந்துள்ளது.

### 4.சாகாக்கலையின் தொன்மை-தொல்காப்பியத்தில் அகச்சான்று

**"மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியில் ஆற்றிய அறிவன் தேயமும்"**

என்ற சூத்திரத்தில் தொல்காப்பியர் 'அறிவன்' என்ற அழகிய தமிழ்ச்சொல்லை கையாண்டிருக்கிறார். 'அறிவன்' என்ற சொல் யாரை குறிக்கிறது என்பது

சிந்தனைக்குரியது. 'அறிவன்' என்ற சொல்லுக்கு 'முழுதுணவுடையோன்' என்று தொல்காப்பிய உரை ஆசிரியர் நச்சினார்க்கினியர் பொருள் கொள்கிறார். மற்றோர் உரை ஆசிரியரான இளம்பூரணர் 'அறிவன்' என்பது கணியனை கோள்நூல் வல்லவனை குறிக்கும் என்று கூறிப் புறப்பொருள் வெண்பாமாலையைச் சான்று காட்டுகிறார். புறப்பொருள் வெண்பாமாலை அறிவனையும் கணியனையும் வெவ்வேறாக கூறுகிறது. ஆகவே அறிவனைக் கணியன் என்பது பொருந்தாது. நச்சினார்க்கினியர் கூறு பொருளுக்கு ஏற்ப திரு.கா.சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் 'அறிவன்' என்ற சொல்லுக்கு 'சித்தர்' என்றே பொருள் கொள்கிறார். 'சித்த என்பதற்கு 'அறிவு' என்பதே பொருள். வள்ளற்பெருமானும் 'அறிவு' என்ற பொருளிலேயே 'சித்து' என்ற சொல்லைக் கையாளுகிறார்கள். எனவே அறிவனை 'சித்தர்' என்று நச்சினார்க்கினியரு, திரு.கா.சுப்பிரமணிய பிள்ளை அவர்களும் கொண்டது பொருத்தமானதே ஆகும்.

தொல்காப்பியர் காலத்திற்குமுன் நெடுங்காலமாக அறிவர்கள். சித்தர்கள்- தமிழகத்தில் வாழ்ந்திருக்க வேண்டும். அதனால்தான் அவர்களைப்பற்றிய இலக்கணத்தை கூறவேண்டிய கட்டாயம் தொல்காப்பியருக்கு இருந்திருக்கிறது என்பதையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். தொல்காப்பியரின் காலத்திற்கு முன் நெடுங்காலமாக அறிவர்கள்-சித்தர்கள்-வாழ்ந்திருக்கிறார்கள் என்றால், அவர்களோடு அவர்களை விட்டுப்பிரியாமல் விளங்கும் சாகாக்கலையும் நெடுங்காலமாகத் தமிழகத்தில் விளங்கி இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு.

### 3.சாகாக்கலையும் சங்ககாலமும்

வரலாற்றுக்கு எட்டாத தொல்பழங்காலத்திலும் சாகாக்கலை இருந்திருக்க வேண்டும் என்பதற்கான சான்றுகளைத் திருமந்திரத்தின் துணைகொண்டு முன்பே சிந்தித்தோம். வரலாற்றுக்கு எட்டாத தொல்பழங்காலத்தில் இருந்து, முதற்சங்கம் இடைச்சங்கம் ஆகியவை நடைபெற்ற காலம் வரை சாகாக்கலையில் தேர்ந்த சித்தர்கள் பலர் வாழ்ந்திருக்க வேண்டும். அவர்களையே தொல்காப்பியம் 'அறிவர்' என்று குறிப்பிடுகிறது என்பதையும் தகுந்த சான்றுகளுடன் ஆராய்ந்தோம். சித்தர்கள் சாகாக்கலையை இந்தக் காலங்களில் மறைவிடங்களில் தகுதியுடையோருக்கு மட்டும் பயிற்றுவித்திருக்கலாம். அதனால்தான் சாகாக்கலையினைப் பற்றிய செய்திகள் தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் விரிவாக இடம்பெறவில்லை. சித்தர்களின் இலக்கியங்களிலும் சாகாக்கலை பற்றிய பகுதிகள் மறைமொழிகளாலும் குழூஉக்குறிகளாலும் சொல்லப்பட்டிருப்பது மேற்கூறப்பட்ட கருத்துக்கு வலுவூட்டும். சங்ககாலத்திற்கு முன்னும் சாகாக்கலை இருந்திருக்கிறது-சங்ககாலத்திற்கு பின்னும் சாகாக்கலை வழங்கிவந்திருக்கிறது என்றால், சங்ககாலத்திலும் அது வழங்கி இருந்திருக்கும் என்பதில் ஐயம் இருக்க முடியாது.

### 6.சாகாக்கலையும் திருக்குறளும்

திருக்குறளைக் கடைச்சங்க காலத்தின் முடிவில் அல்லது கடைச்சங்க காலத்திற்குச் சற்று பின்னால் தோன்றிய நூல் என்று அறிஞர்கள் பலரும் கருதுவதால், அது தோன்றிய காலம் கடைச்சங்கம் முடிவுற்ற காலமாகிய கி.மு.முதலாம் நூற்றாண்டு முதல் கி.பி.இரண்டாம் நூற்றாண்டு வரை என்று கருதலாம்.

திருக்குறளின் சாகாக்கலைக்குத் தொடர்புடைய கருத்துகள் சிலவற்றைப் பின்னாளிலும் குறட்பாக்களில் காணமுடிகிறது.

**"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார்"**

**"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க**
**நெறிநின்றார் நீடுவாழ் வார்"**

**"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்**
**ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு"**

மேற்கண்ட குறட்பாக்களில் 'நிலமிசை நீடுவாழ்வார்' 'கூற்ற, குதித்தலும் கைகூடும்' என்ற தொடர்கள் சாகாக்கலையினையே குறிப்பதாகக் கொள்ளலாம். வள்ளற்பெருமானும் "திருக்குறளில் சாகாக்கல்வி சொல்லப்பட்டிருக்கிறது. அதைத் தகுந்த ஆசிரியர் மூலம் தெரிந்து கொள்ளலாம்" என்று கூறுகிறார்கள்.

வரலாற்றுக்கு எட்டாத தொன்மைக் காலத்தில் தோன்றிய சாகாக்கலை தொடர்ந்து விளங்கிட மூன்று தமிழ்ச் சங்கங்களும் நடைபெற்ற காலம் என பெரும்பாலான அறிஞர்கள் கருதும் கி.மு.ஐயாயிரம் முதல் கி.மு.இரண்டாம் நூற்றாண்டு வரை உள்ள காலங்களிலும் நின்று நிலைப்பெற்று; கடைச்சங்க காலத்தில் இறுதியில் தோன்றியதாகக் கருதப்படும் திருக்குறளிலும் இடம் பெற்றிருக்கிறது. அதனால் இந்த காலங்கள் தோறும் சாகாக்கலை தமிழகத்தில் விளங்கி வந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

குறைந்தது ஆறாயிரம் ஆண்டுகளாக மூன்று சங்கங்களும் கடல்கோள் முதலான இடையூறுகளைப் பொருட்படுத்தாமல் நடத்தப்பட்டிருக்கின்றன. இதற்குக் காரணம் தமிழ்மொழியின் மீது தமிழ்மக்களும் தமிழகத்தை ஆண்ட மன்னர்களும் கொண்டிருந்த உயிரினும் மேலான அன்பே ஆகும். ஓர் இன மக்கள், தமது மொழியை, அதில் தோன்றியுள்ள காதல் வீரம் போன்றவற்றை பற்றிக் கூறும் இலக்கியங்களுக்காக மட்டும் உயிரினும் மேலாக நேசிப்பார்கள் என்று கருத இயலாது. இத்தகைய இலக்கியங்கள் உலகத்தில் பல நாடுகளிலும் பல மொழிகளிலும் தோன்றி உள்ளன. ஆனால் அந்தந்த இலக்கியங்களுக்காக அந்தந்த நாட்டு அரசர்கள் சங்கம் அமைத்ததாகவோ-இயற்கை விளைவித்த இடையூறுகளைப் பொருட்படுத்தாது, அவற்றைத் தொடர்ந்து நடத்தியதாகவோ-வரலாறு இல்லை. ஆகவே, தமிழ்சங்கங்கள் தொடர்ந்து ஆறாயிரம் ஆண்டுகள் நடைபெற்றதற்கு காரணம் சாகாக்கலை போன்ற அரிய நுண்பொருள்களை விளக்கும் நூல்கள் தமிழில் இடம் பெற்றிருந்ததே என்று கொள்வது தவறாகாது.

### 7.சாகாக்கலையும் சிலப்பதிகாரமும்

சங்கம் மருவிய காலத்தில் தோன்றியதாகக் கருதப்படும் சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய இலக்கியங்களிலும் சாகாக்கலையின் நிழல் ஒரு சிறிது தெரிகிறது.

சிலப்பதிகாரத்தில் இளங்கோ அடிகள் சிவபெருமானை ‘பிறவாயாக்கைப் பெரியோன்’ என்று அழைக்கிறார். சிவபெருமானை இளங்கோ அடிகள் ‘பிறவாயாக்கைப் பெரியோன்’ என்று அழைப்பதில் சில நுட்ப திட்பங்கள் இருப்பதை உணரலாம். தாய் தந்தையர் புணர்ச்சியால் உருவாகி, கருக்கிடந்து, வளர்ந்து-புவியிற் பிறவாமை பற்றியே சிவபெருமானை ‘பிறவா யாக்கைப் பெரியோன்’ என இளங்கோ அடிகள் கூறுகிறார். மேலும் பிறவா யாக்கை, இறவா யாக்கையாக-மரணத்தில் அழியாத உடம்பாக-விளங்கும் என்றும் கொள்ளலாம். ஆகையால் சாகாக்கலையின் நுணுக்கங்களை அறிந்தே, இளங்கோ அடிகள் ‘பிறவர் யாக்கைப் பெரியோன்’ என்று சிவபெருமானை அழைக்கிறார் என்று கருதலாம்.

8.**சாகாக்கலையும் மணிமேகலையும்**

சிலப்பதிகாரத்தை அடுத்துத் தோன்றிய மணிமேகலையில், ‘அறிவன் நூலாகிய ஆகமம் உலகை மெய் என நிலைநாட்டும்’ என்ற கருத்து காணப்படுகிறது. அறிவன் என்று தொல்காப்பியர் கூறுவது சித்தர்களையே குறிக்கும் என்பதை முன்னரே கண்டோம். சித்தர்கள் உலகை ‘மெய்’ என்று கருதுவது மட்டுமின்றி, உடம்பையே ‘மெய்’ என்று கருதி, அதை அழியாமல் விளங்கச் செய்யும் கலையில் வல்லவர்களாகத் திகழ்கிறார்கள். திருமூலரின் திருமந்திரம் ‘சிவாகமம்’ என்றே கருதப்படுகிறது. சாகாக்கலையின் நுணுக்கங்கள் பல திருமந்திரத்தில் இடம் பெற்றிருப்பதையும் காண்கிறோம். அதனால் ‘உலகை மெய் என்று நிலைநாட்டும் அறிவனின் ஆகமம்’ என்று மணிமேகலை குறிப்பிடும் ஆகமத்தில் சாகாக்கலை பற்றிய பகுதியும் இருந்திருக்கும் என்று உறுதியாகக் கருதலாம்.

கி.பி.மூன்றாம் நூற்றாண்டு என தவத்திரு மறைமலை அடிகளாரும், திரு.கா.சுப்பிரமணியப் பிள்ளையும் கருதுகின்றனர்; பலர் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு என்றும் கருதுகின்றனர். “செத்தே போனால் சிரியாரோ!” என்று இறைவனிடம் முறையிட்ட மாணிக்கவாசகர், தில்லைவாழ் அந்தணர்கள் அனைவரும் காணத் தில்லை சிற்சபையில் உடம்புடன் கலந்தார். இந்நிகழ்ச்சியை வள்ளற்பெருமான் “வான் கலந்த மாணிக்கவாசக” என்று அழைத்து ஏத்துகிறார்கள்.

திருநாவுக்கரசரின் காலம் கி.பி.ஆறாம் நூற்றாண்டின் இறுதி தொடங்கி கி.பி.ஏழாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை என்று கருதப்படுகிறது. திருநாவுக்கரசர் திருப்புகலூர் திருக்கோயில் சிவலிங்கத்தில் ‘சிவானந்த ஞானவடிவாகி உருக்கரந்து உலகர் காணா வகை’ கலந்தார்.

சுந்தரரின் காலம் கி.பி.எட்டாம் நூற்றாண்டு அல்லது கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு என்று கருதப்படுகிறது. அவர் வெள்ளையானை ஊர்ந்து கயிலை சென்றார். திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் சுந்தரர் மாணிக்கவாசகர் ஆகிய நால்வரையும் சித்தர்கள் என்றே திரு.வி.கலியாணசுந்தரனார் கருதுகிறார். சித்தமார்க்கத்திற்கு சிதைவு ஏற்படாமல் அவர்கள் காத்ததாகவும் கூறுகிறார்.

திருமூலரின் காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு எனக் கருதப்படுகிறது. திருமூலரின் மரபில் வந்ததாக பிரமதேவர், இந்திரதேவர், விஷ்ணுதேவர்,

உருத்திரதேவர், கந்துரு, காலாக்கினி, உருத்திரர், கஞ்சனூர் மலையமான் முதலானோரை திரு.கா.சுப்பிரமணிய பிள்ளை குறிப்பிடுகிறார், இந்த மரபு தாயுமானவர் காலத்தை எட்டி இருப்பதை, அவர் தமது குருவை" மூலன் மரபில் வரும் மௌனகுருவே" என்று அழைப்பதில் இருந்து அறியலாம். மூலன் மரபில் வந்த மௌனகுருவிடம் உபதேசம் பெற்ற தாயுமானவர் பாடல்களில் சாகாக்கலையின் சாயல்கள் சிலவற்றைக் காணலாம்.

திருமூலரின் மாணவர் காலாங்கி, காலாங்கிக்கு மாணவர் போகர், போகருக்கு மாணவர் கொங்கணவர் என்ற மரபை சட்டைமுனி என்ற சித்தர் கூறுகிறார். கொங்கணரின் காலம் கி.பி.ஏழாம் நூற்றாண்டு என்று கூறப்படுகிறது. அதனால் திருமூலரின் காலமாகிய கி.பி.ஐந்தாம் நூற்றாண்டு தொடங்கி, கொங்கணரின் காலமாகிய கி.பி.ஏழாம் நூற்றாண்டு வரை சித்தர்களின் சாகாக்கலை தொடர்ந்து விளங்கி இருக்கிறது என்று கொள்ள வேண்டும்.

பட்டினத்தடிகள் சித்தர்களில் ஒருவராகக் கருதப்படுகிறார். இவரது காலம் கி.பி.10 அல்லது 11 ஆம் நூற்றாண்டு என்று கூறப்படுகிறது. :பிறவாதிருக்க வரம் வேண்டும். பிறந்துவிட்டால் இறவாதிருக்க மருந்து உண்டு" என்று உறுதியாகக் கூறும் பட்டினத்தடிகளில் உடம்பு, சிவலிங்கமாக மாறி அமைந்த செய்தி அவரது வரலாற்றில் காணப்படுகிறது.

**"சாகாத்திருப்பதற்குத் தான்கற்ற கல்வியன்றோ**
**வாகான மெய்க்கல்வி"**

என்று கூறும் இடைக்காட்டுச் சித்தர் கி.பி.பதினான்காம் நூற்றாண்டைச் சார்ந்தவராகக் கருதப்படுகிறார்.

**"கற்பகாலம் கடந்தாலும் ஆதிகர்த்தா வோடும்**
**கடமழியாது வாழும் எங்கள் காரணகுரு"**

என்று பாடும் பாம்பாட்டிச்சித்தரும்,

**"காலனை வென்ற கருத்தறி வாளர்க்குக்**
**கோலங்கள் ஏதுக்கடி"**

**"சாகாமல் தாண்டி தனிவழி போவோர்க்கு**
**ஏகாந்தம் ஏதுக்கடி"**

என்று பாடும் குதம்பைச் சித்தரும் கி.பி.பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள்.

**"கட்டையில் வைத்துச் சுட்டிவிடாதே**
**கள்ளக்குழியில் புதைத்து விடாதே**
\- - - - - - - - - - - - - - - - - - - -
**கற்பூர தீபம் போல் எந்தன் உடலை**
**கனக சபையில் கலந்து கொள்வாயே"**

என்று பாடிய முத்துத்தாண்டவர், மாணிக்கவாசகரைப் போலவே தில்லை வெளியில் உடம்போடு கலந்தவர். இவருடைய காலம் கி.பி.பதினாறாம் நூற்றாண்டு என தமிழ் வரலாற்றுக் களஞ்சியம் கூறுகிறது.

வீரசைவ நெறியாளராகிய குமாரதேவர், தாம் இயற்றிய சுத்தசாதகம்' என்னும் நூலில் சீவன் முத்தர்தம் உடம்பு வெளியதாய் விமல நல் அருளதாய்' மாறி கரைந்துவிடும் என்று தெரிவிக்கிறார். இவரது காலத்தைச் சரியாகக் கணக்கிட முடியவில்லை. ஆயினும் அவரது காலம் கி.பி.17ஆம் நூற்றாண்டை ஒட்டி அமைந்திருக்க வேண்டும் என்பது உறுதி.

கி.பி.பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த தாயுமானவர், திருமூலர் மரபில் வந்த மௌனகுருவால் உபதேசிக்கப் பெற்றவர். அதனால்,

**“எழுகின்ற தீயில்கர்ப் பூரத்தை யொக்கப்**
**பொழிகின்ற இவ்வுடல் போம்அப் பரத்தே”**

என்று திருமந்திரப் பாடல்களின் கருத்தை, தாயுமானவர் பின்வரும் பாடலில் சிறிதும் மாற்றம் இன்றிக் கூறி இருப்பதைக் காணலாம்.

**“சித்தம் நிருவிகற்பம் சேர்ந்தார் உடல் தீபம்**
**வைத்த கர்ப்பூரம்போல் வயங்கும் பராபரமே”**

## ஆ. தமிழர் பண்பாட்டில் சாகாக்கலை

மிகப் பழமையான தமிழ் நூல்களில் குமரி முனைக்குத் தெற்கே நெடிய நிலப்பரப்பு ஒன்று இருந்தது என்றும், அது தமிழ்நாட்டின் ஒரு கூறாக இருந்தது என்றும், பின்பு சிறிது சிறிதாகக் கடலுள் மூழ்கி விட்டதென்றும் கூறப்படுகிறது. இந்தப் பகுதியை தமிழரினம் தமிழர் நாகரிகம் ஆகியவற்றின் தாயகம் என்று பன்மொழிப் புலவர் திரு.கா.அப்பாத்துரையார் அவர்கள்கருதுகிறார். தமிழ் நூல்களின் பழமை, முச்சங்கங்களின் பழமை, வான்மீகர் இராமாயணத்தில் காணப்படும் சான்றுகள், நிலநூல் முதலியவை கூறும் முடிவுகள் ஆகியவற்றை ஆதாரமாகக்கொண்டு மேற்கண்ட முடிவினை அவர் வலியுறுத்துகிறார்.

கடலில் மூழ்கி விட்ட தமிழ்நாட்டுப் பகுதியில் (இலெமூரியாவில் வாழ்ந்திருந்த மக்களுக்கு நெற்றியில் ஒருகண் இருந்ததாகக் கூறப்படுகிறது. தமிழர்தம் தெய்வமான சிவனுக்கு நெற்றியில் கண் இருப்பதும் இங்கு நினைவுகூரத்தக்கது. இலெமூரிய மக்கள் நெற்றியில் கண்ணின் துணையால் முக்காலங்களையும் தொலைவில் நிகழும் நிகழ்ச்சிகளையும் பிறர் எண்ணங்களையும் அறிய வல்லவர்களாய் இருந்தனர். உயிரை உடம்பினின்றும் பிரித்துக்கொள்ளும் கலையை அவர்கள் அறிந்திருந்தனர். உணர்வுடன் உடம்பை விட்டு வெளியேறி வேறு உடம்பில் பிறக்கும் ஆற்றல் உடையவர்களாய்த் திகழ்ந்தார்கள். தமிழ்மொழியில் காணப்படும் சுட்டெழுத்துகளில் ‘இ’ என்பது அண்மையையும், ‘அ’ என்பது சேய்மையையும், ‘உ’ என்பது அகக்கண்ணிற்கு மட்டுமே புலப்படும் பொருளையும் குறிப்பதாகவும் ‘உ’ என்பது தமிழிற்கு மட்டுமே உரிய சுட்டெழுத்து என்றும் தமிழர்களுக்கு நெற்றிக்கண் பார்வை

இருந்ததனாலேயே தமிழ்மொழியில் ‘உ’ என்னும் சுட்டெழுத்து இடம் பெற்றிருந்தது என்றும் பன்மொழிப்புலவர் திரு.கா.அப்பாத்துரையார் அவர்கள் எடுத்துக்காட்டுவது மிகவும் பொருத்தமானதே ஆகும்.

நெற்றிக் கண்ணைத் திறந்துகொண்டால் எல்லாம் பட்டப்பகல் போல் தெரியும்’ என்ற வள்ளற்பெருமானின் உபதேசமும் இங்கு நினைவுகூரத்தக்கது. நெற்றிக்கண் இருக்கும் இடமாகிய புருவ நடுவில் மனதை நிலைபெறச் செய்தல் உடம்பு அழியாது என்பதை,

**“நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்**
**வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை”**

என்று திருமந்திரம் வலியுறுத்துகிறது.

மேற்கூறப்பட்ட செய்திகள் அனைத்தையும் தொடர்புபடுத்திச் சிந்தித்தால் இலெமூரியாவில் வாழ்ந்த மக்கள் சாகாக்கலையிலும் தேர்ந்தவர்களாய் இருந்திருக்கலாம் என்று அனுமானிக்க இடம் இருக்கிறது. இனி தமிழர்தம் பண்பாட்டில் சாகாக்கலை விளங்கும் பான்மையினை ஆராய்வோம்.

**1.கோயில்கள்**

தமிழகத்தை ஆண்ட மன்னர்களின் கோட்டைகளை இன்று காண முடியவில்லை. ஆனால் இறைவனுக்கு அவர்கள் எழுப்பிய கோயில்கள் இன்றும் விளங்கி வருகின்றன. அவை கட்டிடக்கலைக்கும் சிற்பக்கலைக்கும் எடுத்துக்காட்டாக அமைந்திருப்பதோடு, சாகாக்கலையில் தேர்ந்த சித்தர்கள் சமாதியில் வீற்றிருக்கும் உயிர்நிலைக் கோயில்களாகவும் விளங்குகின்றன.

தில்லையில் திருமூலரும், திருக்குற்றாலத்தில் அகத்தியரும், திருப்பதியில் கொங்கணரும், திருவாரூரில் கமலமுனியும், வைத்தீசுவரன் கோவிலில் தன்வந்திரியும், பழனியில் போகரும் சமாதி கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. சித்தர்களும் அவர்கள் சமாதியில் அமர்ந்ததாகக் கூறப்படும் இடங்களும் பின்வருமாறு:-

| <u>சித்தர்கள்</u> | | <u>சமாதியில் அமர்ந்த இடம்</u> |
|---|---|---|
| அகத்தியர் | - | அனந்தசயனம், திருக்குற்றாலம் |
| திருமூலர் | - | சிதம்பரம் |
| சட்டைமுனி | - | சீர்காழி, திருவரங்கம் |
| கருவூரார் | - | திருக்காளத்தி |
| பதஞ்சலி | - | இராமேசுவரம் |
| மச்சமுனி | - | திருப்பரங்குன்றம் |
| கொங்கணர் | - | திருப்பதி |
| தன்வந்திரி | - | வைத்தீசுவரன் கோயில் |
| சுந்தரானந்தர் | - | மதுரை |
| போகநாதர் | - | பழநி |

மேற்கண்ட இடங்களில் எல்லாம் ஆலயங்கள் அமைக்கப்பட்டிருப்பதன் நோக்கம், சித்தர்கள் மரணத்தை வென்று சமாதியில் இருக்கும். நிலையைச் சிறப்பிப்பதும், மக்கள் சாகாக்கலையை அறிந்து அதனை பழக வாய்ப்பினை உருவாக்குவதுமே ஆகும்.

## 2.இலக்கியம்

தமிழ் இலக்கியப்பெருங்கடலில் சித்தர்களின் பாடல்கள் தனித்தன்மைகல் பலவற்றைப் பெற்றுத் திகழ்கின்றன. இவற்றில் சித்தர்கள் மருத்துவம் முதலான கலைகளை விரிவாக விளக்க இருக்கிறார்கள். அவற்றுள் சாகாக்கலையே நடுநாயகமாகத் திகழ்கிறது. சாகாக்கலையை பற்றி சித்தர்கள் பல செய்திகளைக் கூறியிருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக சிலவற்றைக் காண்போம்.

### அகத்தியர்

**உண்ணும்போது உயிர் எழுத்தை உயரவாங்கி**
**உறங்குகின்ற போதெல்லாம் அதுவே ஆகும்**
**பெண்ணின்பால் இந்திரியம் விடும்போது எல்லாம்**
**பேணியே வலம்நோக்கி நிலைத்தா யாகில்**
**திண்ணும்காய் இலைபழங்கள் அருந்தும் போதும்**
**தினம்தோறும் இப்படியே செலுத்த வல்லார்**
**மண்ணூழி காலமட்டும் வாழ்வார் பாரு**
**மறலி கையில் அகப்படவும் மாட்டார் தாமே”**

### சுந்தரானந்தர்

**“பந்துவென்ற விந்துவது மேலே யேறும்**
**பராபரையும் புருவமையம் பாங்காய்த் தோணும்**
**அந்துவென்ற தேகமது அருணன் போலாம்**
**ஆச்சரியம் கத்திநடு ஒடும் பாரு”**

மேற்கண்ட பாடலில் சுந்தரானந்தர், உடம்பு சூரியன் போல் விளங்குவது பற்றியும், உடம்பின் வழியே கத்தி ஓடுவது பற்றியும் - கத்தி உடம்பைத் தாக்காத அளவுக்கு நுண் ஒளியாக உடம்பு விளங்குவது பற்றியும் - கூறுவது சிந்திக்கத்தக்கது.

### கருவூரார்

**“கேளப்பா முந்தியதோர் பிராணா யந்தான்**
**கேசரியில் இடவலமே ஆட்டித் தீரும்**
**நாளப்பா லட்சமுருசெபித்தா யானால்**
**நிலைத்ததப்பா உன்சடலம் நிரூபி யாவாய்”**

### போகர்

"இருக்குமே வாயு இதத்தில்ஓர் ஆண்டு
குருக்கள தேகம் கோடி ரவியாம்
முருக்குமே காயம் மூன்றூழி காலமே"

"பாலுண்ண வழிஇருக்கும் வழியைச் சொல்வேன்
பதினாறில் தந்திரமாய் இருந்து கொண்டு
காலுண்ணும் பன்னிரண்டில் இருத்தி ஊது
கழியாது சந்திரனும் தேய்ந்தான் அப்பா
நாலுண்ணும் மறலியவன் மாய்ந்தான் என்றே
நஞ்சுண்ட சிவன்காலால் உதையே பட்டு
மாலுண்ணும் மார்க்கண்டன் நித்தியமானான்
வருடமது கணக்கில்லை காயவாழ்வே"

## ஔவை

'ஔவைக்குறள்' என்ற நூலில் சாகாக்கலையினைப் பற்றி அரிய செய்திகள் பல காணப்படுகின்றன. இந்நூலை இயற்றியவர் சங்க காலத்தில் வாழ்ந்த ஔவை என்று கருத இயலாது. ஔவையின் பெயரில் சாகாக்கலையில் தேர்ச்சி பெற்ற ஒருவர் இந்நூலை உருவாக்கி இருக்கலாம். எப்படியாயினும் இதில் கூறப்பட்டுள்ள சாகாக்கலைத் தொடர்பான செய்திகள் சுருக்கமாகவும் தெளிவாகவும் அமைந்துள்ளன.

"உரைசெயும் ஓசை உரைசெய் பவர்க்கு
நரைதிரை இல்லை எமன்"

"வாக்கும் மனமும் இறந்த பொருள்காணில்
ஆக்கைக்கு அழிவில்லை யாம்"

"மறவாமல் காணும் வகைஉணர் வாருக்கு
இறவாமல் இருக்கலும் ஆம்"

"அஞ்சு புலனின் வழியறிந் தால்பின்
துஞ்சுவது இல்லை உடம்பு"

"நாபி யகத்தே நலனுற நோக்கிடில்
சாவது மில்லை உடம்பு"

"நெற்றிக்கு நேரே நிறைந்தஒளி காணில்
முற்றும் அழியாது உடம்பு"

"அகப்புறம் பேரா பொருளை அறியில்
உகம்பல காட்டும் உடம்பு"

"அஞ்சும் அடக்கி அறிவொடு இருந்தபின்
துஞ்சுவது இல்லை உடம்பு"

**"பற்றற்று நின்ற பழம்பொருளைச் சிந்திக்கில்**
**முற்றும் அழியாது உம்பு"**

மேற்கண்டவாறு சாகாக்கலையினை விளக்கும் சித்தர்களின் பாடல்கள் காலங்கள் தோறும் தமிழகத்தில் பலராலும் பயிலப்பட்டு இருக்கலாம். இவற்றைப் பயின்றவர்கள் சாகாக்கலைக்குரிய பயிற்சிகளில் ஈடுபட்டிருந்திருக்கலாம். சாகாக்கலையினைப் பற்றிய பயிற்சிகளைச் சித்தர்கள் பெரும்பாலும் எளிதில் விளங்காத மறைமொழிகளாலேயே கூறி இருக்கிறார்கள். தகுதி உடையோர் மட்டுமே உரிய ஆசிரியர்களை அணுகி, அவர்களுக்குத் தொண்டு செய்து, சாகாக்கலைப் பயிற்சியில் ஈடுபட வேண்டும் என்று கருதியே சித்தர்கள் மேற்கண்ட முறையை பின்பற்றியிருக்க வேண்டும். அதனால்தான் சாகாக்கலை தமிழகத்தில் இடைவிடாது வழங்கி வந்த போதும் வெளிப்படையாக பலரும் அறியும் நிலையில் விளங்கவில்லை.

## 3.மொழி

தமிழ்மொழி மட்டுமே, உயிர்ப்பை அதிகம் செலவழிக்காமல் பேச உதவும் மொழி என்பது மொழியியல் அறிஞர்கள் பலரின் கருத்து. ஆதலால், தமிழ்மொழியினைப் பேசுதலே ஆயுள் குறைவைத் தடுக்கும் என்று கருத இடமுண்டு. தமிழில் உள்ள 'ழ்' என்ற எழுத்தை உச்சரிக்கும்போது நாவின் நுனி வளைந்து மேல்நோக்கிச் சென்று மேல் அண்ணத்தைத் தொடுகிறது. நாவினை வளைத்து அண்ணமுகட்டைத் தொடுதல் ஆயுளை வளர்க்கும் 'கேசரி யோகம்' என்னும் பயிற்சியில் இடம் பெற்றுள்ளது. இதனை,

**"நாவின் நுனியை நடுவே சிவிறிடில்**
**சீவனும் அங்கே சிவனும் உறைவிடம்**
**மூவரும் முப்பத்து மூவரும் தோன்றுவர்**
**சாவதும் இல்லை சதா கோடி ஊனே"**

என்னும் திருமந்திரத்தால் அறியலாம். 'தமிழ்' என்ற சொல்லை உச்சரிக்கும் நிலையிலேயே-கேசரி யோகத்தின் பயன் கிட்டுமாறு, ஆயுளை வளர்க்கும் நுணுக்கமான யோக முறையின் பயன் கிட்டுமாறு, சாகாக்கலையின் பயன் ஓரளவுக்குக் கிட்டுமாறு-அந்த சொல் உருவாக்கப்பட்டிருப்பது வியப்பின் எல்லைக்கே நம்மை அழைத்துச் செல்கிறது. இது உலகில் வேறு எந்த மொழிக்கும் இல்லாத சிறப்பு. 'தமிழ்' என்ற சொல்லிலேயே சாகாக்கலையின் சாயலைக் காண முடிகிறது என்ற நிலையினை, தமிழர் பண்பாட்டில் சாகாக்கலை உயிர்நிலையாக கலந்துள்ளது என்பதற்குச் சிறந்த சான்றாகக் கருதலாம்.

## 4.வழக்கு

### 4.1.உடம்பினை மெய் என்னும் வழக்கு

உடம்பினை 'மெய்' என்று அழைக்கும் வழக்கு தமிழில் மட்டும் காணப்படுகிறது. 'மெய்' என்பதற்கு 'உண்மை' என்பதே பொருள் காரணத்தால் அழிக்கப்பட்டு பொய்யாகும் உடலை 'மெய்' என்று அழைக்கக் காரணம் என்னவாக இருக்கமுடியும் என்று சிந்தித்தால் ஒரே ஒரு விடை மட்டுமே

கிடைக்கிறது. பொய்யாகி அழியும் உடல் சாகாக்கலையினைப் பயின்றால்-மெய்யாகி -அழியாமல் விளங்குவது என்பதை குறிப்பாக உணர்த்துவதற்கே, உடம்பை 'மெய்' என்று அழைக்கும் வழக்கு தமிழில்-ஏற்படுத்தப்பட்டுள்ளது என்பதே அந்த விடை. உடம்பினை மெய் என்று குறிக்கும் மரபு உலகில் வேறு எந்த மொழியிலும் இருப்பதாகத் தெரியவில்லை.

### 4.2.இறப்பை 'தவறு' என்று சொல்லும் வழக்கு

இறந்தவரை, 'தவறிவிட்டார்' என்று சொல்லும் வழக்கு தமிழகத்தில் மட்டுமே காணப்படுகிறது. 'தவறிவிட்டார்' என்று கூறுவதன் பொருள் என்ன என்ற வினாவிற்கு, 'சாகாக்கல்வி கற்க தவறி விட்டார்' 'சாகாக்கல்வி பயின்று உடம்பை மெய்யாக்க தவறிவிட்டார்' என்பவையே சிறந்த விடைகளாக இருக்க முடியும். சாகாக்கலையின் நுணுக்கம் மக்களின் அன்றாடப் பேச்சு வழக்கிலும் இடம் பெற்றுள்ளமைக்கு இது சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

### 4.3. சிரஞ்சீவி என்ற சொல் வழக்கு

'சிரஞ்சீவியாக வாழ்க' என்று வாழ்த்தும் மரபு தமிழகத்தில் இருந்து வருகிறது. மரணமின்றி வாழும் அனுமன் முதலானோர் 'சிரஞ்சீவிகள்' என்று அழைக்கப்படுகின்றனர். 'சிரஞ்சீவி' என்ற சொல்லுக்கு 'சிரத்தில் சீவித்திருப்போர்' என்பது பொருள். சிரத்தில் -தலையில் உள்ள நெற்றியில்-புருவ நடுவில்-மனதை நிலைபெற செய்தால் உடம்பு அழியாது என்று திருமந்திரம் கூறுவது பற்றி முன்னரே கண்டோம். சிரத்தில்-புருவ நடுவில்-மனதை வைத்து மரணத்தை வென்று வாழ்பவர் என்பதே சிரஞ்சீவி என்று சொல்லுக்குப் பொருளாக இருக்க முடியும். அதனால் ;சிரஞ்சீவியாக வாழ்க' என்பதற்கு 'மனதை புருவமத்தியில் நிலைநாட்டி மரணத்தை வென்று வாழ்க' என்ற பொருள் பொதிந்து இருப்பதாகக் கொள்ள வேண்டும்.

## 5.பழமொழி

'ஆழ்வாரைப் பூத்திருக்க சாவாரைக் காண்பது உண்டோ?' என்ற பழமொழி-ஆவாரை என்னும் மூலிகை ஆயுளை நீட்டித்துக்கொள்ள உதவும் என்பதை உணர்த்துவதாக அமைந்துள்ளது. 'நான்கு பேர் சொல்வதைக் கேட்டு நட' என்னும் அறிவுரை, 'அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர்' ஆகியோர் காட்டிய நெறியில் வாழ்ந்து அவர்களைப்போல் மரணத்தை வென்று வாழவேண்டும்' என்ற கருத்தை வலியிறுத்துவதாக அமைந்துள்ளது என்றும் கொள்ளலாம்.

மேற்கூறப்பட்டவாறு தமிழகத்தில் வரலாற்றுக்கு எட்டாத தொன்மைக்காலத்தில் தோன்றி-தமிழர்தம் பண்பாட்டில் இரண்டறக் கலந்து-காலந்தோறும் அழியாது-விளங்கிய சாகாக்கலை, பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய 'திருஅருட்பிரகாச வள்ளலார்' என்று அருளாளர்கள் ஏத்தி மகிழும் இராமலிங்க அடிகளாரின் திருஅருட்பாவில், உயிர்நிலையாக விளங்கி-முழுமைப்பெற்றுத் திகழ்கின்றது.

வள்ளற்பெருமான் 'ஐவகைப் பூத உடம்பை அழியாமை ஆக்கும் வகை ஒன்று உண்டும் என்றும்,-"பொத்திய மலப்பிணி புழுக்குரம்பை நித்தியமாகி நிகழும்" என்றும்,-மிக மிகத் தெளிவாகக் கூறுகின்றார்கள். அவர்கள் சாகாக்கலையினில் தேர்ந்து சரகாஉடம்பு பெற்ற மெய்ம்மையினை அடுத்த இயலில் சிந்திப்போம்.

<u>அடிக்குறிப்புகள்</u>

1.திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5589
2.மேலது, பாடல் 5402
3.மேலது, பாடல் 3738
4.இரா.மாணிக்கவாசகம், திருமந்திர ஆராய்ச்சி,ப.89
5.திருமந்திரம் மூவாயிரம், பாடல் 129
6.கா.சுப்பிரமணியப்பிள்ளை, இலக்கிய வரலாறு, முதல்பாகம்,ப.36
7.என்.நரசிங்க ரோ, டேட் ஆப் ஸ்ரீராமா,ப.74
8.திருமந்திரம் மூவாயிரம், பாடல் 142
9.வைத்திய வாதயோக ஞானசாஸ்திரத்திரட்டு, ஐந்தாம் புஸ்தகம், வியாக்கிரபாதர் ஞானம் 13, பாடல் 11, ப.387
10.மேலது, வியாகிரபாதர் சமாதி 8, பாடல் 8, ப.387
11.மேலது, பதஞ்சலியார் ஞானம் 54,பாடல் 14,ப.373
12.திரு.வி.க. சித்தமார்க்கம்,ப.24
13.தொல்காப்பியம், பொருளதிகாரம், 75,4-6
14.செல்வி காமாட்சி சீனிவாசன்,குறள் கூறும் சமயம், பக்.9-10
15.கா.சுப்பிரமணியப்பிள்ளை, தமிழர் சமயம், ப.92
16.இந்த தூல தேகத்தில் சீவனாக இருக்கின்ற ஆன்மாவும் அறிவுக் அறிவாய் இருக்கிற கடவுள் இயற்கை விளக்கமும் தவிர, கரணம் இந்திரியம் முதலிய மற்றவைகள் எல்லாம் கருவிகளாகிய தத்துவ சடங்களே அல்லது சித்துகள் அல்ல. சுக துக்கங்களை சடங்கள் அனுபவிக்க அறியா....ஆன்மாவே அனுபவிக்கும் என்று அறிய வேண்டும்"
திருஅருட்பா உரைநடைப்பகுதி, ஜீவகாருணிய ஒழுக்கம்,ப.53
17.திருக்குறள்,கடவுள் வாழ்த்து,பாடல்3
18.மேலது, பாடல் 6
19.மேலது, தவம், பாடல் 9
20.திருஅருட்பா உரைநடைப்பகுதி, ப.307
21.சிலப்பதிகாரம், 5-169

22."ஆகம அளவை நூலால் போக புவனம் உண்டெனப் புலங்கொளல்"
மணிமேகலை, 27, 43-44
23. மது.க. விமலானந்தம், தமிழ் வரலாற்றுக் களஞ்சியம்,ப.152
24.திருவாசகம், கோயில் மூத்த திருப்பதிகம், பாடல்.8
25.திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள், பாடல் 3263
26.மது.க.விமலானந்தம், மே.கா.நூ.பா.147
27.மேலது,ப.149
28.திரு.வி.க. சித்த மார்க்கம், ப.12
29.கா.சுப்பிரமணியப்பிள்ளை, சந்தானாசாரியார் வரலாறு,ப.5
30.தாயுமானவர் பாடல்கள், மௌன குருவணக்கம்

31.சித்தர் பாடல்கள், சட்டை முனி நாயனார் முன்ஞானம் 100. பாடல் 9
32.சித்தர் பாடல்கள், பட்டினத்தார் திருப்பாடல் திரட்டு, திருத்தில்லை, பாடல் 16
33.பதிணென் சித்தர் பெரிய ஞானக்கோவை, இடைக்காட்டுச் சித்தர் பாடல், கண்ணி 66
34.இரா.செல்வகணபதி, கோரக்கச் சித்தூர் வரலாறு, ப.26
35.சித்தர் பாடல்கள், பாம்பாட்டிச் சித்தர் பாடல், பாடல் 18
36.மேலது, குதம்பைச் சித்தர் பாடல், பாடல் 20
37.மேலது, பாடல் 13
38.இரா.செல்வ கணபதி, மே.கா.நூ., ப.22-23
39.முத்துத் தாண்டவர் கீர்த்தனைகள், ப.42
40.மது.ச.விமலானந்தம், மே.கா.நூ., ப.1049
41.சுத்த சாதகம், பாடல் 22
42.திருமந்திரம் மூவாயிரம், பாடல் 2542
43.தாயுமானவர் பாடல்கள், பராபரக் கண்ணி 248
44.கா.அப்பாதுரை, குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னை ப.12
45.மேலது, ப.92
46.மேலது, ப.67
47.மேலது, ப.82
48.மேலது, ப.97
49.திருஅருட்பா உரைநடைப்பகுதி, ப.316
50.திருமந்திரம் மூவாயிரம், பாடல் 584
51.பதிணண் சித்தர் பெரிய ஞானக்கோவை, ப.536
52.வைத்திய வாதயோக ஞான சாஸ்திரத் திரட்டு, பத்தாம்பாக புஸ்தகம்,ப.1
53.மேலது, ஐந்தாம் புஸ்தகம், ப.273
54.வைத்திய வாதயோக ஞான சாஸ்திரத் திரட்டு, ஒன்பதாம் புஸ்தகம்,ப.51
55.மேலது, முதல் பாகம், ப.192
56.மேலது, முதல் பாகம், ப.241
57.ஔவைக்குறள், பாடல் 224
58.மேலது, பாடல் 226
59.மேலது, பாடல் 229
60.மேலது, பாடல் 232
61.மேலது, பாடல் 233
62.மேலது, பாடல் 238
63.மேலது, பாடல் 224
64.மேலது, பாடல் 246
65.மேலது, பாடல் 250
66.திருமந்திரம் மூவாயிரம், பாடல் 783
67.திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5570
68.மேலது, பாடல் 5402

## இயல் மூன்று

## வள்ளற்பெருமானும் சாகாக்கலையும்

## அ.பிறப்பைத் தவிர்த்தலும் - இறப்பைத் தவிர்த்தலும்

பிறந்து, வளர்ந்து, உலகியல் இன்ப துன்பங்களிலேயே உழன்று, ஒரு சிறிதும் மெய்யுணர்வு இன்றி வாழ்ந்து, இறப்பது-உலகியல் வாழ்வில் பொதுவாகக் காணப்படும் நிலை. பிறந்து, வளர்ந்து, உரிய கல்வியால் மெய்யுணர்வு பெற்று, உலகியல் வாழ்வின் நிலையாமையை உணர்ந்து, ஐம்புலன் அடக்கம் அவாஅறுத்தல் முதலிய தூய நற்பண்புகளில் தோய்ந்து, பக்தி தியானம் தவம் யோகம் முதலான நெறிகளில் பழகி, முக்தி அடைகின்றவர்களும்-உலகியலாரைப் போல இறப்பதுதான் முடிவா? "உலகியல் மக்களும் இறப்பார்கள்-முக்தி அடைகின்றவர்களும் இறப்பார்கள் என்றால், முக்திக்கும் இறப்புக்கும் என்ன தான் வேறுபாடு!" என்று 'உண்மை முத்திநிலை' என்னும் நூலில் யாழ்ப்பாணம் திரு.ச.கந்தையாப்பிள்ளை அவர்கள் வினவுகிறார். முக்தி அடைவார்க்கு இறப்பு வருவதால் குற்றம் எதுவும் இல்லை என்பது உண்மையானால், மாணிக்கவாசகர் 'செத்தே போனால் சிரியாரோ?' என்று பாடுவாரா? பெரும்பாலான சமயப் பெரியோர்கள் பிறப்பை நீக்க வேண்டும் என்ற கருத்தை வெளியிட்டிருக்கின்றனர். இப்படி அவர்கள் சொல்லுவதற்குக் காரணம் பிறந்தபின் இறத்தல்-இறந்தபின் பிறத்தல்-என்று முடிவின்றி நிகழும் சுழற்சியில் இருந்து விடுபட்டு, உயிர் அலைவின்றி முக்தியின்பத்தை அடைதல் வேண்டும் என்பதே.

பிறப்பு-இறப்பு என்று மாறி மாறி வரும் சுழற்சியில், எதை நிறுத்தி உயிர் முக்தி இன்பத்தை அடைவது? பிறப்பையா, இறப்பையா? இது சிந்தித்துப் பார்க்க வேண்டிய ஒன்று. பிறந்தவர்கள், பிறப்பை அறுப்பது என்றால், இறந்து அதன்பின் பிறக்காமல் இருப்பது என்ற பொருளைத் தரும். இது பிறப்பு இறப்பு என்னும் சுழல் சக்கரத்தில் பிறப்புக்கு அடுத்து உடனே வரும் இறப்பை பொருட்படுத்தாது, அதனை அடுத்து வரும் பிறப்பை நிறுத்தும் முயற்சி பிறப்புக்கு அடுத்து முதலில் வரும் இறப்பை நிறுத்துவது அன்றோ பிறப்பு-இறப்பு என்னும் சுழல் சக்கரத்தை நிறுத்துவதில் நேரடியான முயற்சியாக அமையும்! இறப்பை நீக்கினால் பிறப்பு தானே நீங்கிவிடாதா! இறந்தபின் பிறவி இல்லாத நிலையில் உயிர் இருக்கிறதா அல்லது மீண்டும் பிறந்திருக்கிறது என்பதனை அறிய வழி இல்லை. ஆதாலால் ஒருயிர் பிறவிக்கு வந்தபின் பிறப்பு-இறப்பு சுழற்சியை நிறுத்தும் நேரடியான வழி-தெளிவான வழி-உறுதியான வழி-இறப்பைத் தவிர்ப்பதே ஆகும். அதனாலேயே பட்டினத்தடிகள்.

**"பிறவாதிருக்க வரம் வேண்டும்; பிறந்துவிட்டால்,**
**இறவாதிருக்க மருந்துண்டுகாண்! இது எப்படியோ?**
**அறமார் புகழ்த்தில்லை அம்பலவாணர் அடிக்கமலம்**
**மறவாதிரு மனமே! அதுகாண் நல்மருந் துனக்கே!"**

என்று பிறந்தபின் இறவாமை அடைய முயற்சிப்பதே சிறந்தது என்ற கருத்தை உள்ளடக்கி பாடி இருக்கிறார்.

### 1.சாம்பானும் முள்ளிச்செடியும் முக்தி அடையும்போது உடம்போடு மறைதல்

சைவசித்தாந்தக் கோட்பாட்டினைத் தமிழகத்தில் தழைக்கச் செய்த மெய்கண்டாரின் உபதேச மரபில் வந்த உமாபதிசிவம் என்ற பெரியார் சிதம்பரத்தை அடுத்த கொற்றவன்குடி என்னும் ஊரில் திருமடம் அமைத்து வாழ்ந்து வந்தார். திருமடத்திற்கு தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்த பெத்தான் சாம்பான் என்பவர் தூய மனத்துடனும் பேரன்புடனும் விறகு சேகரித்துத் தரும் பணியைச் செய்துவந்தார். அவருடைய உண்மைத் தொண்டுக்கு உளம் மகிழ்ந்த சிவபெருமான், அவருக்கு முக்தி கொடுக்க விழைந்து, அந்தணர்போல் வடிவம் தாங்கி சாம்பான்முன் தோன்றி கைச்சீட்டு ஒன்றினைத் தந்து அதனை உமாபதிசிவத்திடம் சேர்ப்பிக்குமாறு கூறி மறைந்தார். இது கண்டு, அதிசயித்த உள்ளத்தினராய், சாம்பான் கைச்சீட்டினை உமாபதி சிவத்திடச்ம் தந்தார். அச்சீட்டில்,

**"அடியார்க் கெளியன், சிற்றம்பலவன்; கொற்றங்**
**குடியார்க் கெழுதியகைச் சீட்டு-படியின்மிசைப்**
**பெத்தான் சாம்பானுக்குப் பேதமுற தீக்கைசெய்து**
**முத்தி கொடுக்க முறை"**

என்ற திருப்பாசுரத்தைக் கண்டு மகிழ்ந்த உமாபதிசிவம், சாம்பானுக்கு தீக்கை செய்தார். அப்போது பலரும் காணப் பேரொளி ஒன்று எழுந்தது. அதனுள் கலந்து சாம்பான் உடம்போடு மறைந்தார்.

சாம்பான் உடம்புடன் பேரொளியில் கலந்த நிகழ்ச்சியின் உண்மையையும் மேன்மையையும் உணராத அவரது மனைவி, அச்சமும் அவலமும் அடைந்து அரசனிடம் முறையிட்டாள். அரசன் உமாபதிசிவத்தைச் சந்தித்து உரையாடியபின், சாம்பான் உடம்போடு மறைந்து முத்தி பெற்றதை மெய்ப்பிக்கும் வகையில்-மீண்டும் அது போன்ற நிகழ்ச்சி ஒன்றை நடத்திக்காட்டுமாறு வேண்டினான். உமாபதிசிவம் அதற்கு உடன்பட்டு, மடத்தில் வளர்ந்திருந்த முள்ளிச் செடி ஒன்று பக்குவ நிலையில் இருப்பதை உணர்ந்து, அது முத்தி அடையுமாறு தீக்கை செய்தார். அப்போது, ஓர் ஒளி தோன்றி, அதில் முள்ளிச்செடி தனது தாவர உடம்புடன் கலந்து மறைந்தது.

'மேற்கண்ட நிகழ்ச்சியில், "முத்தி கொடுக்க முறை" என்று சிவபெருமான் கூறியவாறு உமாபதிசிவம் சாம்பானுக்கும் முள்ளிச்செடிக்கும் முத்தி அளித்தபோது சாம்பானின் உடம்பும் முள்ளிச்செடியின் உடம்பும் மறைந்த நிகழ்ச்சி; முத்தி என்பது இறப்பைத் தவிர்த்து உடம்புடன் ஒளியில் கலத்தலே என்ற உண்மையை எடுத்துக்காட்டும் நிலையிலும், இறப்பு நீங்குவதே பிறப்பு நீங்கியதற்குச் சரியான அடையாளம் என்ற கோட்பாட்டை மெய்ப்பிக்கும் வகையிலும் அமைந்துள்ளது. உலகவர் போல் உடம்பு இறக்க, உயிர் முத்தி அடையும் என்று கூறுவதில் தமக்கு ஐயம் இருப்பதைத் தாயுமானவர்,

**"உலக நெறிபோல் சடலம் ஓய, உயிர் முக்தி**
**இலகுமெனல் பந்த இயல்போ பராபரமே"**

என்ற பாடலில் தெரிவிக்கிறார். மேற்கண்ட பாடலில் அவர் தெரிவித்த ஐயத்தைப் போக்குவது போல,

**“தேகம் யாதெனும் ஒருசித்தி பெறச் சீவன்முத்தி**
**ஆகுநெறி நல்லநெறிஐயா பராபரமே”**

என்ற கருத்தையும் அவரே தெரிவிக்கிறார்.

### 2.சுத்தசாதகம் உரைக்கும் உண்மைகள்

உடம்பைப் பிணமாக்கிவிட்டு உயிர் முத்தி அடைய இயலாது என்பதைக் காரண காரியங்களோடு விவாதித்து நிலைநாட்டுகிறது. ‘சுத்தசாதகம்’ என்ற குமாரதேவரின் நூல்.

**“மேலொரு வடிவை எடுத்ததே யாகில்**
**மேவுமிவ் வுடல்இங்கே வீழும்;**
**மேலொரு வடிவை எடுத்தது இன்றாகில்**
**மேவுமிவ் வுடல்இங்கே வீழா!”**

என்று கூறி, உடல் வீழ்ந்து பிணமானால், உயிர் வேறு ஓர் உடலை எடுக்கும், அதாவது பிறக்கும், முத்தி அடையாது-என்பதை ‘சுத்தசாதகம்’ உறுதிபடக் கூறுகிறது.

### 3.ஔவைக்குறள்

**“மாசற்ற கொள்கை மனத்தில் அடைந்தக்கால்**
**ஈசனைக் காட்டும் உடம்பு”**

**“வாக்கும் மனமும் இறந்தபொருள் காணில்**
**ஆக்கைக்கு அழிவில்லை யாம்”**

மேற்கண்ட ‘ஔவைக்குறள்’ நூலில் காணப்படும் பாடல்கள் உயிர் ஆணவம் முதலான மாசுகள் நீங்கி முத்தி அடைவதை உடம்பு காட்டும்-இறப்பு நீங்கும்- என்றும், வாக்கும் மனமும் இறந்து முத்தி கைவரப் பெறும்போது, அருளாளர் தம் உடம்பு அழியாது என்றும் கூறுவது சிந்திக்க வேண்டிய செய்திகள்!

### 4.முத்துத்தாண்டவரின் பிரார்த்தனை

முத்தியில் இறப்பு தவிர்க்கப்பட வேண்டும் என்பதை முத்துத்தாண்டவர்,

**“கட்டிலைவிட்டுக் கிடத்தும் என்னாதே**
**காலைக்கரங்களைக் கட்டு மென்னாதே**
**கொட்டி முழக்கிட்டு கூகூஎன்னாதே**
**கோரணி கொள்ளாதே**
**எட்டி ஒருவர் புலம்ப வராதே**
**ஏழைப் பிணத்தை எடும் என்றிடாதே**
**கட்டையின் மேல் வைத்து சுட்டுவிடாதே**
**கள்ளக் குழியில் புதைத்து விடாதே**

**பட்டும் பணியும் தரித்துஅயலோர் வந்து**
**பாவள்ளிக் குத்தாதே**
**கிட்டி யொருவர் சடங்கு செய்யாதே**
**- - - - - - - - - - - - - - - - - - - - -**
**கற்பூர தீபம்போல் என்றன் உடலைக்**
**கனக சபையில் கலந்து கொள்வாயே!"**

என்று சிவபெருமானிடம் பாடி வேண்டுகிறார்.

### ஆ. வள்ளற்பெருமானும் மரணத்தைத் தவிர்த்தலும்

'வாழையடி வாழை என வந்த திருக்கூட்டத்தில்' தாமும் ஒருவர் என்று கூறும் வள்ளற்பெருமான் - இறப்பைத் தவிர்க்க விரும்பியதில் வியப்பு ஒன்றும் இருக்க முடியாது.

வள்ளற்பெருமான் தாம் இயற்றிய 'ஜீவகாருணிய ஒழுக்கம்' என்னும் உரைநடை நூலில், குடிக்கூலி கொடுத்து ஒருவன் வாடகை வீட்டில் குடியிருப்பது போல்-ஆகாரக்கூலி கொடுத்து உயிர் உடம்பு என்னும் வீட்டில் வாழ்வதாக குறிப்பிடுகிறார்கள். தனக்கென அவன் சுதந்திரம் வீடுகட்டிக் கொண்டால் வேறு வீடுகளுக்குக் குடிபோக தேவையில்லை. அதுபோல் நித்தியமாகிய அருள் தேகத்தைப் பெற்று கொண்டால், வேறு உடம்பு எடுக்க வேண்டியதில்லை, அதாவது பிறர் வேண்டியதில்லை என்ற கருத்தையும் அவர்கள் வலியுறுத்துகிறார்கள். ஓர் உயிர் முக்தி அடையும்போது-அருள் இன்பத்தை அனுபவிக்கும் போது-உடம்பு மரணமின்றி விளங்கும் நித்திய தேகமாகிய அருள் உடம்பாக மாறும் என்றும், இந்நிலை எய்திய பின்புதான் பிறப்பு நீங்கும் என்றும் அவர்கள் தெளிவாகக் கூறுகிறார்கள்.

### 1.நித்திய தேகம் வேண்டி வள்ளற்பெருமான் செய்த விண்ணப்பங்களும்-வழிபாடுகளும்

வள்ளற்பெருமான் 'சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய விண்ணப்பம்' என்ற உரைநடை விண்ணப்பம் ஒன்றினை வரைந்திருக்கிறார்கள். அதில், அவர்கள், தேகத்திற்கு இடைக்கியை நேருகின்ற மரணம் பிணி மூப்பு துன்பம் முதலிய அவத்தைகாக எல்லாவற்றையும் நிவர்த்திசெய்து, இத்தேகத்தையே நித்திய தேகமாக்கிக் கொண்டு, எக்காலத்தும் எவ்விடத்தும் எத்துணையும் தடைபடாத பேரின்பச் சித்திப் பெருவாழ்வைப் பெற்று வாழ்தல் வேண்டும் என்பதே தமது சத்தியமான அதிதீவிர விருப்ப முயற்சியால் இருப்பதாகத் தெரிவிக்கிறார்கள்.

**"சாவுறா வகைக்கு என்செயக் கடவேன்**
**தந்தையே என்னைத் தாங்கிடக் கொண்டருளே"**

என்றும் வள்ளற்பெருமான் இறைவனிடம் வேண்டிக்கொள்கிறார்கள். மேலும் அவர்கள் இறைவனிடம், தம்முடைய தேகம் 'நல்ஒளி பெறும் இயல் உரு' க்கொள்ளுமாறும், துஞ்சும் உடல் 'துஞ்சிடாச் சுகஉடல்' ஆகுமாறும், ஈங்கு வீழுடல் 'இம்மையே வீழ்ந்திடா இயல் உடல்' ஆகுமாறு, அலங்கும் தம்முடல்

‘இம்மையே அழிவுறாப் பெருநலம்’ பெறுமாறும், பிறந்த தம்முடல் ‘இம்மையே அழிவுறாத் தொல்லுடல்’ ஆகுமாறும், ஏய்ந்த தம்முடல் ‘இம்மையே திருஅருள் இயல் உடல்’ ஆகுமாறும், காற்றில் ஆகிய தம்முடல் ‘இம்மையே கதிஉடல்’ ஆகுமாறும், வாட்டும் தம்முடல் ‘இம்மையே அழிவுறா வளமடைந்திடு’ மாறும், கல்லும் இரும்பும் கனிந்து உருகும் மொழிகளால் மன்றாடி வேண்டுகிறார்கள். ‘இறந்திருந்தே இளைத்ததெல்லாம் போதும்! இந்த உடம்பே இயற்கை உடம்பாக அருள் இன்னமுதம் அளித்து’ உதவுமாறு இறைவனிடம் வேண்டுகிறார்கள். ‘நரை திரை முதலாம் துவந்துவம் தவிர்த்து, சுத்தமாகிய முச்சுகவடிவம் பெறும் பேறு’ அளிக்க வேண்டும் என இறைவனிடம் கேட்டுக்கொள்கிறார்கள். அவர்களது வேண்டுகோளை இறைவன் நிறைவேற்றிவைத்தானா, அவர்கள் இறப்பிலிருந்து விடுபட்டார்களா-மரணத்தை வென்றார்களா, என்பனவற்றை இனி ஆராய்வோம்.

## 2.வள்ளற்பெருமான் சாகாஉப்பு பெற்றமைக்கு அகச்சான்றுகள்

வள்ளற்பெருமான் திருஅருளின் துணையால் தமது உடம்பை நரை திரை பிணி மூப்பு மரணம் முதலியன இல்லாத சாகாஉடம்பாக மாற்றிக்கொண்டதற்கு அவர்களது திருஅருட்பாவில் எண்ணற்ற அகச்சான்றுகள் உள்ளன. ‘சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் பெருவிண்ணப்பம்’ என்னும் உரைநடை விண்ணப்பத்தில், எக்காலத்தும் நாசம் அடையாத சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் என்னும் சாகாக்கலை அனுபவ தேகங்களை தாம் பெற்றதாய் குறிப்பிடுகிறார்கள். இறைவன் அவர்களுடைய விண்ணப்பத்தை ஏற்று, பவங்கனிந்த தமது உடல் ‘அழிவுறாப் பதிவடிவு ஆமாறு உளங்கொள் தம் வடிவம் இம்மையே ‘மந்திரஇயல் வடிவு ஆமாறும் துஞ்சும்தம்உடல் அழிவுறாதோங்கும் ‘மெய்ச்சுக வடிவு ஆமாறும் ஈங்கு வீழுடல் என்றும் ‘வீழாது ஒளிர் இயல்வடிவு ஆமாறும் அலங்கும் தம்முடல் என்றும் ‘அழிவுறா அருள்வடிவு ஆமாறும்’, பிறர் தம்முடல் என்றும் ‘அழிவுறாத் தனிவடிவு ஆமாறும்’, பூட்டுத் தம்முடல் ‘எற்றையும் அழிவுறாப் பொன்வடிவு ஆமாறும்’, புடையில் தம்முடல் ‘எற்றையும் அழிவுறாப் பொன்வடிவு ஆமாறும்’, செய்ய தம்முடல் என்றும் ‘அழிவுறாச் சிவவடிவு ஆமாறும்’, அருள்செய்தார் என்று அளவற்ற மகிழ்ச்சியுடனும் பெருமிதத்துடனும் தெரிவிக்கிறார்கள்.

### 2.1. நரை திரை பிணி மூப்பு மரணம் இல்லாத உடம்பு

வள்ளற்பெருமானின் சாகாஉடம்பு நரை திரை பிணி மூப்பு ஆகியவை இன்றி-மரணம் இன்றி - அழியாது விளங்கவல்ல என்பதை அவர்களது பின்வரும் பாடல்கள் தெரிவிக்கின்றன.

**“நரையற்று மூப்பற்று இறப்பற்று இருக்கவும்**
**நண்ணினனே!”**

**“நரையும்அற்றது திரையும்அற்றது திரையும்அற்று**
**விழுந்ததே!”**

**“திரைந்து நெகிழ்ந்து தோலுடம்பும் செழிம்பொன்**
**உடம்பாய்த் திகழ்ந்தேனே!”**

**“ஆடுகின்ற சேவடிக்கே ஆளானேன்!**

மாளாத ஆக்கை பெற்றேன்!"

"தேகம் எப்போதும் சிதையாத வண்ணம்
செய்வித்து எலாம்வல்ல சித்தியும் தந்தே
- - - - - - - - - - - - - - - - - - - - - - -

ஆகமவீதியில் ஆடச் செய்தீரே
அருட்பெருஞ்ஜோதி என்ஆண்டவர் நீரே!"

"கூகா எனக்கூடி எடாதிக் கொடியனேற்கே
சாகாவரம் தந்த தயாநிதித் தந்தையே!"

"கூகா என அடுத்தோர் கூடி அழாவண்ணம்
சாகாவரம் எனக்கே தந்திட்டான்!"

## 2.2. கொலைக்கருவி முதலியவற்றால் அழியாத உடம்பு

வள்ளற்பெருமான் தாம்பெற்ற சாகாஉடம்பு, கல் மண் நீர் நெருப்பு முதலியவற்றாலும், இடி மின்னல் முதலியவற்றாலும், கோள்களாலும், கொலைக்கருவிகளாலும் அழிக்கப்பட முடியாதது என்று கூறுகிறார்கள். இதனை பின்வரும் அவர்களது அருட்பாக்களில் காணலாம்.

"காராலும் கனவாலும் காற்றாலும் ககனக்
கலையாலும் கதிராலும் கடலாலும் கடல்சூழ்ப்
பாராலும் படையாலும் பிறவாலும் தடுக்கப்
படுதலிலாத் தனிவடிவம் எனக்களித்த பதியே!"

"காற்றாலே புவியாலே ககனமத னாலே
கனலாலே புனலாலே கதிராதி, யாலே
கூற்றாலே பிணியாலே கொலைகருவி யாலே
கோளாலே பிறஇயற்றும் கொடுஞ்செயல்க ளாலே
வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்
மெய்அளிக்க வேண்டும்என்றேன்-விரைந்து அளித்தான் எனக்கே!"

### 2.2.1. வாள் தீண்ட முடியாத அல்லமர் உடம்பு

வள்ளற்பெருமான், தாம் பெற்ற சாகாஉடம்பை வாள் முதலிய அழிக்காது என்று கூறுவதை விளக்குவதுபோல, கோரக்கர் சித்தரின் வாழ்வில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்று அமைந்துள்ளது.

மூலிகைகள் யோகப்பயிற்சி ஆகியவற்றால் கோரக்கர் தன் உடம்பை இரும்புபோல் ஆக்கியிருந்தார். தம்மைக் காண வரும் அல்லமாபிரபுவிடம் ஒரு வாளைத் தந்து தம் உடம்பின்மீது வீசும் என்று கூறுகிறார். அல்லமர் வாளை

வீசுகிறார். 'கணீர்' என்ற ஓசையுடன் இரும்பினால் ஆன வாள் மழுங்குகிறது. கோரக்கர் உடம்புக்கு ஒரு ஊறும் விளையவில்லை. பிறகு அல்லமர் வாளை கோரக்கர் கைகள் தந்து தமது உடம்பின்மீது வீசுமாறு கூறுகிறார். கோரக்கர் வாள் அல்லமரின் உடம்பின்மீது வீசுகிறார். வாள் எந்த ஓசையும் இன்றிக் காற்று சூரியஒளி ஆகியவற்றில் புகுந்துசெல்வதுபோல் அல்லமர் உடம்பினுள் புகுந்து செல்கிறது. மூலிகைக்கற்பம், யோகா முதலியவற்றால் உடம்பை இரும்புபோல் ஆக்குவதைவிட-அதன் ஒளிபோல் ஆக்குவதே உயர்ந்தது என்பதை விளக்குவதுபோல் இந்நிகழ்ச்சி அமைந்துள்ளது. அல்லமரின் உடம்பு, வள்ளற்பெருமான் பெற்ற சாகாஉடம்பின் தன்மையை ஒத்திருப்பதும் கவனிக்கத்தக்கது.

## 2.3. சாகாஉடம்பு ஒளிஉடம்பே!

வள்ளற்பெருமானின் உடம்பு-வாள் நெருப்பு கல் முதலியவற்றால் அழிக்கப்படாதது என்றால் -அது ஒளி உடம்பாகத் திகழ்ந்திருக்கிறது என்பதையும் அறியமுடிகிறது.

**"கற்றேன் சிற்றம்பலக் கல்வியை!**
**கற்று, கருணை நெறி**
**உற்றேன்! எக்காலமும் சாகாமல்**
**ஓங்கும் ஒளிவடிவம் பெற்றேன்"**

என்ற பாடலில் அவர்கள் பெற்ற சாகாஉடம்பு ஒளிவடிவமானது என்ற செய்தியைத் தெரிவிக்கிறார்கள்.

3.1.வள்ளற்பெருமானின் ஒளிஉடம்பு-வரலாற்றில் சில சான்றுகள்

வள்ளற்பெருமானின் உடம்பை ஒளிப்படம் எடுக்க பல முறை பலரும் முயன்றனர். ஒளிப்படத் தகடுகளை விளக்கிப் பார்த்தபோது ஒன்றிலேனும் அவர்கள் உருவம் காணப்படவில்லை. அவர்கள் அணிந்திருந்த ஆடைகள் மட்டுமே பதிவாகி இருந்தன.

வள்ளற்பெருமான் நடக்கும்போது முள் வேலி புதர் முதலான வற்றாலும் தடைபடாமல் நடந்து செல்ல வல்லவர்களாய் இருந்தமையை அவர்களது வரலாற்றின் வழியே அறிகிறோம். ஒரு சமயம் வள்ளற்பெருமான் கூடலூர் ஐயாசாமி என்ற அன்பருடன் வெய்யிலில் நின்று உரையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் அவரிட்சம் 'உண்மை ஞானிக்கு என்ன இலக்கணம்?' என்று வினவி, 'உடம்புக்கு நிழல்சாயை இருக்கக்கூடாது!' என்று விடையையும் தந்தார்கள். அப்போதுதான் வள்ளற்பெருமானின் உடம்பு நிழல்சாயை இன்றி விளங்குவதைக் கண்டு ஐயாசாமி வியந்தார். இந்தச் செய்தியும் அவர்கள் வரலாற்றில் காணப்படுகிறது.

## 3.2. கிருபானந்தவாரியார் தரும் சான்று

வடலூரில் வள்ளற்பெருமான் அமைத்துள்ள சத்திய ஞான சபையில் முதல் திருப்பணியை, திருமுருக கிருபானந்தவாரியார் செய்துவந்த காலத்தில்,

வள்ளற்பெருமானை நேரில் கண்டு பழகிய ஒரு மூதாட்டியைச் சந்தித்தது பற்றி தமது வரலாற்றில் அவர் குறிப்பிட்டுள்ளார். தாம் வள்ளற்பெருமானின் சீடர்களில் ஒருவரான ஆடூர் சபாபதி சிவாச்சாரியாரின் பெயர்த்தி (பேத்தி) என்றும், வள்ளற்பெருமானைச் சந்திக்கும்போது தமக்கு ஐந்து வயது என்றும், வள்ளற்பெருமானின் மேனியில் இருந்து கற்பூர மணம் வீசும் என்றும், அவர்களுடைய தலையில் உள்ள முக்காடு விலகும்போது மின்னல் போன்ற ஒளிக்கீற்றுகள் தலையிலிருந்து வெளிப்படும் என்று அம்மூதாட்டி வாரியாரிடம் தெரிவித்திருக்கிறார். “கற்பூரம் மணக்கின்றது என் உடம்பு முழுதும் என் கணவர் திருமேனியில் கலந்து மணம் அதுதான்” என்று வள்ளற்பெருமான் திருஅருட்பாவில் கூறுகிறார்கள். ஒவ்வொரு பொருளும் கண்களுக்கு ஒரு குறிப்பிட்ட ஒளியால் புலனாவது போல், மூக்குக்கும் குறிப்பிட்ட மணத்தால் புலனாகிறது. சாகாநிலை பெற்ற ஒளிஉடம்பும் கண்களுக்கு ஒளிவீசம் நிலையில் புலனாகி, மூக்குக்கு கற்பூர மணம் போன்ற தெய்வீக மணம் வீசிப் புலனாகும் என்று உய்த்துணர வேண்டி உள்ளது.

மேற்கூறப்பட்ட நிகழ்ச்சியில் இருந்து வள்ளற்பெருமான் உடம்பில், புறக்கண்களுக்கும் காட்சியாகும் நிலையில் அருகில் ஒளிக்கதிர்கள் சூழ்ந்து இருந்திருக்கின்றன என்பதை அறிகிறோம். அதனால் வள்ளற்பெருமான் பெற்ற சாகாஉடம்பு அருள் ஒளியில் திரண்ட வடிவம் என்றே முடிவு செய்ய வேண்டும்.

2.4.வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக்கொண்ட நிகழ்ச்சி

வள்ளற்பெருமானின் உடம்பில் காணப்பட்ட அற்புதமான மாற்றங்களைக் கண்டு அன்பர்கள் பலர் அவர்களைச் சூழ்ந்திருக்க வேண்டும். அவர்களுக்கு சாகாக்கலைத் தொடர்பான தமது அனுபவங்களை விளக்கி, அவர்களையும் அந்தக் கலையில் ஈடுபடச் செய்வதற்காகவே சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தை அவர்கள் அமைந்திருக்க வேண்டும்.

சன்மார்க்க சங்கத்தின் சார்பாக அவர்களது பாடல்கள் தொகுக்கப்பட்டு அச்சிடப்பட்டு ‘திருஅருட்பா’ என்னும் நூலாக வெளியிடப்பட்டது. வடலூரில் சத்திய தருமச்சாலையும், சத்திய ஞானசபையும் வள்ளற்பெருமானால் அமைக்கப்பட்டன. வடலூரை அடுத்த மேட்டுக்குப்பத்தில் உள்ள குடிலில் தங்கு அதற்கு ‘சித்திவளாகம்’ என்று பெயரிட்டு 1870 ஆம் ஆண்டு முதல் அவர்கள் அங்கு தங்கி இருந்தார்கள். 1873 ஆம் ஆண்டு இறுதியில் தாம் வழிபட்டுக் கொண்டிருந்த திருவிளக்கைப் புறத்தில் வைத்து அதனைத் தடைபடாது ஆராதிக்குமாறும், தாம் எல்லா உடம்புகளிலும் புகுந்து கொள்ளப்போவதாகவும் அறிவித்தார்கள். 1874 ஆம் ஆண்டு தைப்பூச நாளில்-தாம் உள்ளே இருக்கப்போவதாகவும், தாம் இருக்கும் அறையின் கதவுகளைப் பூட்டிவிடுமாறும், அறையைத் திறந்து பார்க்க வேண்டாம் என்றும், திறந்து பார்த்தால் வெறும் அறையாக இருக்கும்படி கடவுள் செய்விப்பார் என்றும் கூறினார்கள். அவர்கள் அறைக்குள் சென்று அமர்ந்ததும், கதவுகள் பூட்டப்பட்டன-அதாவது திருக்காப்பிடப்பட்டன.

வள்ளற்பெருமான் 1867 ஆம் ஆண்டு தொடங்கி தாம் திருக்காப்பிட்டுக் கொண்ட 1874 ஆம் ஆண்டு வரை சன்மார்க்க சங்கம் அமைத்தும், திருஅருட்பா நூலை அச்சிட்டு வெளியிட உதவியும், சத்திய தருமச்சாலை சத்திய ஞானசபை

ஆகியவற்றை நிறுவியும், மரணத்தைத் தவிர்த்திட உதவும் சன்மார்க்க நெறியினை விளக்கி உரைத்தும் அரும்பணிகள் பலவற்றை செய்துகொண்டே இருந்தார்கள்.

**"நரை மரணம் மூப்பறியா நல்ல உடம்பினரே**
**நற்குலத்தார் என அறியீர் நானிலத்தீர்! நீவீர்**
**வரையில் உயர்குலம் என்றும் தாழ்ந்த குலம் என்றும்**
**வகுக்கின்றீர்! இருகுலமும் மாண்டிடக் காண்கின்றீர்!"**

**"மரணம்இலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்!**
**புனைந்துரையேன் பொய்ப்புகலேன் சத்தியம் சொல்கின்றேன்!"**

**"கனமுடையேம் கட்டுடையேம் என்று நினைத்திங்கே**
**களித்து இறுமாந்து இருக்கின்றீர்! ஒளிப்பிடமும் அறியீர்!**
**சினமுடையக் கூற்றுவரும் செய்தி அறியீரோ!**
**செத்தநுமது இனத்தாரைச் சிறிதும் நினையீரோ!**
**தினகரன்போல் சாகாத தேகமுடையவரே**
**திருஉடையார் என அறிந்து சேர்ந்திடுமின் ஈண்டே!"**

என்பன போன்ற அவர்களது பாடல்கள், மக்கட்பிறப்பின் அனைவரையும் சன்மார்க்கநெறியில் ஈடுபடச்செய்வதில் அவர்களுக்கு இருந்த அளவுகடந்த ஆர்வத்தைத் தெளிவாகக் காட்டுகின்றன.

அவர்களிடத்து எப்போதும் ஒப்புமை கூற முடியாத, எல்லைகள் முடியாத, ஆன்ம நேய ஒருமைப்பாட்டுணர்வு விளங்கிக் கொண்டு இருந்திருக்கிறது. 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன் என்ற அவர்களது திருஅருட்பா, அவர்களது எல்லையற்ற உயிர் உணர்வுக்கு சான்று தருகிறது.

ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையே வடிவெடுத்தாற்போல் திகழ்ந்த வள்ளற்பெருமான், சன்மார்க்கநெறியில், மக்கட்பிறப்பில் மட்டும் ஈடுபட்டால் போதும் என்று நினைக்கவில்லை. எல்லா உயிர்களும் சன்மார்க்கப் பெரும்பயனை அடைதல் வேண்டும் என்ற பேராவல் கொண்டு, "எவ்வுலகும் எத்தேவரும் எவ்வுயிரும் சுத்த சன்மார்க்கம் பெற்றிடுதல் வேண்டும்!" என்றும், "எவ்வுலகும் சன்மார்க்கப்பொது அடைதல் வேண்டும்!" என்றும் இறைவனிடம் விண்ணப்பம் செய்துகொண்டே இருந்தார்கள்.

வள்ளற்பெருமான் சாகாஉடம்பினையும்-எல்லா செய்யவல்லதிறன் முதலான சித்தி வல்லபங்களையும் பெற்றதோடு எல்லா உயிர்களையும் சன்மார்க்க நெறியில் நிறுவும் ஆற்றலையும் பெற்றது குறித்து,

**"எவ்வுலகும் அண்டங்கள் அத்தனையும் நான் காண**
**இவ்வுலகில் எந்தை எனக்களித்தான் - எவ்வுயிரும்**
**சன்மார்க்க சங்கம்தனை அடையச் செய்வித்தே**
**என்மார்க்கம் காண்பேன் இனி'**

என்று தெரிவிக்கிறார்கள்.

எல்லா உயிர்களையும் சன்மார்க்க நெறியில் ஈடுபடச் செய்விப்பதற்காக, இறைவன் தமக்கு உலகம் படைத்தல் முதல் ஐந்தொழிலையும் ஞானம்படைத்தல் முதல் ஐந்தொழிலையும் வழங்க வேண்டும் என்று விண்ணப்பம் செய்தார்கள்.

**“படிவானும் படைத்தல் முதல் ஐந்தொழிலும் ஞானம்**
**படைத்தல்முதல் ஐந்தொழிலும் புரிந்துஉலகில் அருள்விளக்க வேண்டும்!”**

இறைவன் அவர்களுக்கு ஐந்தொழில் செய்யும் வல்லமையை அளித்தது பற்றியும், அதன் துணையால் சன்மார்க்க நெறியில் உயிர்கள் அனைத்தையும் அவர்கள் ஈடுபடச் செய்ய இருப்பது பற்றியும்,

**“உலகுயிர்த் திரள்எலாம் ஒளிநெறி பெற்றிட**
**இலகும் ஐந்தொழிலையும் யான்செயத் தந்தனை!”**

**“பதிசெயும் சித்திகள் பற்பல வாகப்**
**பாரிடை வானிடைப் பற்பல காலம்**
**விதிசெயப் பெற்றனன் -இன்று தொட்டென்றும்**
**மெய்யருட் சோதியால் விளைவிப்பான்! நீ அவ்**
**வதிசயம் பார்க்கலாம் ஆடேடி பந்து!**
**அருட்பெருஞ்ஜோதி கண்டாடேடி பந்து!”**

என்று தெரிவிக்கிறார்கள். இவ்வாறு எல்லா உலகிலும் உள்ள எல்லா உயிர்களையும் சன்மார்க்கநெறியில் ஈடுபடச் செய்யும்பொருட்டு அவர்கள் ஐந்தொழில் செய்ய வேண்டுமாயின், குறிப்பிட்ட வடிவமுடைய-வரையறை உடைய-வரம்புடைய-உடலில் இருந்து கொண்டு எப்படி செய்ய இயலும்? எல்லை காணமுடியாத பேரொளியாக மாறியே எல்லா உயிர்களிலும் கலந்து மேற்கண்ட பெருஞ்செயல்களைச் செய்யமுடியும்! அதனால் அவர்களது சாகாஉடம்பு உலகம் முழுவதும் ஒளிவடிவமாக பரவித் திகழ்வதாகவும், எல்லா இடங்களிலும் எல்லா காலங்களிலும் விளங்கும் தன்மையுடன் இருப்பதாகவும் தெரிவிக்கிறார்கள்.

**“உலகமெலாம் போற்ற ஒளிவடிவனாகி**
**இலக அருள்செய்தான் இசைந்தே-திலகன்என**
**நானே சன்மார்க்கம் நடத்துகின்றேன் நம்பெருமான்**
**தானே எனக்குத் தனித்து”**

**“...........நான் சாதலைத் தவிர்த்தே**
**எப்பாலும் எக்காலும் இருத்தலே பெற்றேன்**
**என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம் தோழி”**

எல்லா உயிர்களிலும் கலந்து, படைத்தல் காத்தல் முதலில் ஐந்தொழில்களையும் செய்யவல்ல ஒளி உடம்பின் ஆற்றலை அளக்க முடியாது. பருப்பொருளாகிய ஹைட்ரஜன் அணுக்களின் ஆற்றலே ஹிரோசிமாவையும் நாகாசாகியையும் அழித்து விட்டது. அதனிலும் கோடி கோடிப் பங்கு உயர்ந்த ஆற்றலாகிய அருள் ஆற்றல் வள்ளற்பெருமானின் உடம்பில் செயல்படும்போது,

நம்மை போன்றோர் அவர்களது உடம்பின் அருகில் ஒரு வினாடி நேரமேனும் நின்று பழக இயலாது என்பது உறுதி.

மேட்டுக்குப்பத்தில் வள்ளற்பெருமானை நேரில் கண்ட முதியவர் ஒருவர் அவர்களுடைய உடம்பு விளக்குபோல் ஒளிமயமாக இருந்ததாகத் தெரிவிக்கிறார்.

வள்ளற்பெருமானுக்கு அணுக்கத்தொண்டு செய்து வந்த புருடோத்தமர் என்ற அன்பர், ஒரு சமயம் வள்ளற்பெருமான் இருந்த அறையினுள் நுழைந்தபோது, அவர்களது கண்களில் இருந்து பேரொளி வீச, அதனால் புருடோத்தமர் போதமயமாகி மயங்கி விழுந்து நான்கைந்து நாள்கள் சென்று எழுந்தார்; சில மாதங்கள் வரை எதுவும் பேசாமல் மோன நிலையிலேயே இருந்தார் என்ற செய்தி வள்ளற்பெருமானின் வரலாற்றில் காணப்படுகிறது.

வள்ளற்பெருமானது சாகாஉடம்பில், ஐந்தொழில் செய்தல் தொடர்பான ஆற்றல்கள் செயல்படும்போது, எவரும் அவர்களை நெருங்கமுடியாது என்பதற்கு மேற்கண்ட நிகழ்ச்சியே சான்றாக அமைந்துள்ளது. அதனால்தான் வள்ளற்பெருமான் உடம்போடு காட்சிதரும் நிலையைத் தவிர்க்க முடிவு செய்தார்கள். அதே நேரத்தில் தாம் உடம்போடு காட்சி தருவதை நிறுத்திவிட்டால், தம்பால் பேரன்பு கொண்டு பழகும் மக்கள் தம்மைப் பிரிவதால் உண்டாகும் துயரத்தைத் தாங்கமாட்டார்கள் என்று எண்ணி, அவர்களுடைய உள்ளத்தைப் பலவகையிலும் தேற்றினார்கள். அவர்களுடன் பழகிய மேட்டுக்குப்பம் முதியவரின் வாய்மொழி பின்வருமாறு:-

“நான் வள்ளலாரைப் பார்த்தும் இருக்கிறேன் - பழகியும் இருக்கிறேன்; அவர் அறைக்குள் சென்று மறையும்போது எனக்குப் பதினாறு வயது. நானும் எனது நண்பன் இன்னொருவனும் அதிகநேரம் அவருடனேயே இருப்போம். அவர் பார்ப்பதற்கு ஒல்லியாய், விளக்குபோல்-சுடர்போல்-இருப்பார். யாருக்கும் தோன்றாது மறைந்துவிடப்போகிறோம் என்று சொன்னார். அது கேட்டு நாங்கள் எல்லாம் அழுதோம். அவர் மிகவும் அன்பாகச் சமாதானம் செய்தார்.”

மேலும் 1873 ஆம் ஆண்டு வள்ளற்பெருமான் இப்போது இந்த உடம்பில் இருக்கிறேன்; இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன் என்று கூறியதாக திருஅருட்பா உரைநடைப்பகுதியில் ஒரு குறிப்பு காணப்படுகிறது.

மேற்கண்ட செய்திகள் எல்லாவற்றையும் தொகுத்துச் சிந்தித்தால், வள்ளற்பெருமான் பிறர் கண்களுக்குத் தோன்றாமல் இருக்க முடிவு செய்ததற்கான காரணம், அவர்களது எல்லையற்ற ஆற்றல்கொண்ட உடம்புடன் நாம் நெருங்கிப்பழக இயலாது என்பதே என்று ஐயத்திற்கு இடமின்றி புலப்படுகின்றது.

திருக்காப்பிடுதல் என்பதற்கு மூடுதல்-சாத்துதல்-என்பதே பொருள். சமாதியில் அமர்தல், ஒளியில் ஒன்றுதல், வெளியில் கலத்தல் முதலியன இன்றி, உடம்புடன் வள்ளற்பெருமான் வாழ்கிறார்கள். ஆயினும் அவர்களை எளிதில் காண முடியாத வண்ணம், காப்பு (பாதுகாப்பு, காவல்) உள்ளது என்ற பொருளை எல்லாம் உள்ளடக்கி சித்திவளாகத்தில் அவர்கள் ‘திருக்காப்பிட்டுக் கொண்டார்கள்’ என்று கூறும் மரபு வள்ளற்பெருமானின் அடியவர்கள்பால் நிலவி வருகின்றது. வள்ளற்பெருமான் மேட்டுக்குப்பம் சித்திவளாகத்தில் திருக்காப்பிட்டு

கொண்ட நிகழ்ச்சி பற்றி, திருக்காப்பிடுதலின் போது உடன் இருத்தல் கண்ட' வள்ளற்பெருமானின் தலைமாணாக்கர் தொழுவூர் வேலாயுதனார் பின்வருமாறு கூறுகிறார்:-

"அம்மாதம் (1874 ஆம் ஆண்டு சனவரி மாதம் 30 ஆம் நாள் நாங்கள் மேட்டுக்குப்பத்தில் எங்கள் குருவை கடைசியாகப் பார்த்தோம். சீடர்களிடம் அன்போடு விடைபெற்ற பின், ஏற்பாடு செய்திருந்த சிறு கட்டிடத்தின் தனிஅறை ஒன்றினுள் சென்று அங்கு வைக்கப்பட்டிருந்த விரிப்பில் சாய்ந்துக்கொண்டார். அவர் கட்டளைப்படி அறைக்கதவு பூட்டப்பட்டது. இருந்த ஒரே துவாரமும் சுவர் வைத்து அடைக்கப்பட்டது. மேற்கூறிய செய்திகள் அனைத்து ஆயிரக்கணக்கானவர்களுக்குத் தெரிந்தவையே!"

### 2.4.1.வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்டது பற்றி எழுப்பப்படும் ஐயங்கள்

மாவட்ட ஆட்சியர் மேட்டுக்குப்பம் சென்று வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக்கொண்டதைப் பற்றி விசாரித்து வெளியிட்ட அறிக்கை 1906 ஆம் ஆண்டு அரசிதழில் (கெஜட்டில் வெளியிடப்பட்டுள்ளது. 'சீர்தூக்கி அறியும் அறிவும் அரசாங்கத்திற்கு உயர் பதவியும்' உடையவர்களாயிருந்த பலர் வள்ளற்பெருமானின் அருகில் இருக்கும் வகையில் தங்கள் இருப்பிடத்தையே மாற்றிக்கொண்டு வசித்ததாகவும்:- மேட்டுக்குப்பம் கிராமத்தில் வள்ளற்பெருமான் ஓர் அறைக்குள் சென்று அறையை மூடிவிடுமாறும் தம் சீடர்களுக்கு கட்டளை இட்டதாகவும்; அந்தநாளில் இருந்து அவர் 'காணப்படவில்லை' என்றும் அந்த அறிக்கை கூறுகிறது.

ஆங்கிலேய ஆட்சி நடைபெற்ற அந்தக் காலகட்டத்தில் மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்தவர் ஓர் ஆங்கிலேயரே. ஆங்கிலேயர்கள் தீர விசாரித்து உண்மையைத் துணிந்து கூறும் ஆற்றல் உடையவர்கள் என்றும், அதனால் மாவட்ட ஆட்சித் தலைவரின் அறிக்கையை நாம் ஏற்கலாம் என்றும் துறவி கந்தசுவாமி அவர்கள் கூறுவது பொருத்தமானது என்றே கொள்ளலாம். வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்டதில் ஐயத்திற்குமான நிகழ்ச்சிகள் ஏதேனும் நிகழ்ந்திருந்தால், ஒரு சிலரேனும் அதனை மாவட்ட ஆட்சித்தலைவருக்குத் தெரிவித்திருப்பார்கள். அவரும் அதை அறிக்கையில் வெளியிட்டிருப்பார்.

### 2.4.2. வள்ளற்பெருமானுக்கு தீங்கு செய்ய நினைப்பவர்கள் எவரும் இலர்

மேட்டுக்குப்பம் கருங்குழி போன்ற ஊர்கள் இன்றும் போக்குவரத்து மருத்துவம் போன்ற அடிப்படை வசதிகள் போதுமான அளவு இல்லாத நிலையிலேயே உள்ளன.

வள்ளற்பெருமான் கருங்குழியிலும் வடலூரிலும் மேட்டுக்குப்பத்திலும் தங்கியிருந்த காலங்களில் ஒரு வசதியும் இல்லாத நிலையில் இவ்விடங்கள் இருந்திருக்க வேண்டும். இன்று போல நிலத்தடி நீரைக் கொண்டு வேளாண்மை செய்யும் வசதியின்றி வானம் பார்த்த பூமியாகவே இருந்த இவ்விடங்களில் ஏழ்மையும் பஞ்சமும் தலை விரித்து ஆடி இருக்கும்.

வள்ளற்பெருமான் நகர வாழ்வை விட்டு ஒதுங்கி, இந்தப் பகுதிகளில் வசித்து, உயிர் இரக்கமே வடிவாக இயங்கி, இங்கு உள்ள மக்களுக்காக மருத்துவ சேவை செய்திருக்கிறார்கள்; சத்திய தருமச்சாலையைத் தொடங்கி பசிப்பிணியைப் போக்கியிருக்கிறார்கள்; மேலும் பல பணிகளைப் பயன் கருதாமல் செய்திருக்கிறார்கள். அவர்களை அந்தப் பகுதியில் வாழ்ந்த மக்கள் தெய்வமாக நினைத்து போற்றியிருப்பார்களே அன்றி, தீங்கு செய்ய வேண்டும் என்று கனவிலும் நினைத்திருப்பார்களா, யாரும் தீங்கு செய்ய அனுமதித்து இருப்பார்களா, தீங்கு செய்ய நினைப்பவர்களை விட்டு வைப்பார்களா என்பதை எல்லாம் சிந்தித்தால், வள்ளற்பெருமானுக்கு எவரும் எந்த தீங்கும் இழைத்திருக்க வாய்ப்பில்லை என்பது எளிதில் புலனாகும்.

### 2.4.3. ஆறுமுக நாவலர்

வள்ளற்பெருமானுடன் முரண்பட்டு வழக்கு தொடுத்த ஆறுமுக நாவலர் சிறந்த புலவர்; சைவ சமயத்தின்பால் அளவு கடந்த ஈடுபாடு கொண்டவர்; அவர் எழுதிய பாடங்கள் ‘பாலபாடம்’ என்ற பெயரில் அக்காலத்தில் மாணவர்களுக்குப் பாடப்புத்தகங்களாக பள்ளிகளில் பயன்பட்டன. வள்ளற்பெருமான் தன்மை நிந்தனை செய்ததாக தவறாக எண்ணி, வள்ளற்பெருமான் மீது அவர் வழக்கு தொடுத்ததாகக் கூறப்படுகிறது. வள்ளற்பெருமானின் பாடல்கள் தொகுக்கப்பட்ட ‘திருஅருட்பா’ என்ற பெயரில் வெளியிடப்பட்டபோது, அதனை ‘மருட்பா’ என்று கூறி வாதிட்டவர் ஆறுமுக நாவலர்.

இவ்வளவு நடந்தும் நீதி மன்றத்தில் வள்ளற்பெருமானை கண்டதும், ஆறுமுக நாவலர் எழுந்து நின்று வணங்கினார் என்ற ஓர் செய்தியும் பெருவழக்காக கூறப்படுகிறது. இது உண்மையாயின் ஒருவரின் கொள்கைமீது கொண்டுள்ள வேறுபாடு காரணமாக அவருக்கு உரிய மரியாதையை என்றும் குறைக்காத நாகரிகமும் பண்பாடும் நாவலரிடம் இருந்தது என்பதை மேற்கண்ட நிகழ்ச்சியில் இருந்து அறிகிறோம். நம் காலத்தில் வாழ்ந்த இராஜாஜியும் பெரியாரும் அடிப்படைக் கொள்கைகளில் அளவு கடந்த வேறுபாடுகளைக் கொண்டு வாழ்ந்தார்கள் என்பதை அனைவரும் அறிவோம். இராஜாஜியின் கொள்கைகளைப் பெரியார் எவ்வளவு கடுமையாக விமர்சனம் செய்துவந்தார் என்பதையும் அறிவோம். ஆனால் இராஜாஜிக்கு தீங்கு விளைவிக்கும் எண்ணம் பெரியாருக்கும் எப்போதுமே இருந்தது இல்லை. மாறாக அவரிடத்தில் அளவுகடந்த அன்பும் நட்பும் மதிப்பும் கொண்டவராகவே இருந்துவந்தார் என்பது இராஜாஜியும் பெரியாரிடம் பேரன்புகொண்டு பழகிவந்தார் என்பது பலரும் அறிந்த ஒன்று. அரசியல் வேறுபாடுகளுக்கு இடையே பெரியாரும் இராஜாஜியும் காட்டிய நாகரிகத்தை ஆன்மீக நெறியில் ஈடுபட்டிருந்த ஆறுமுக நாவலர் காட்டியிருப்பார் என்று கருதுவதில் பெரிய தவறு ஒன்றும் இல்லை. மாறாக வள்ளற்பெருமானுக்கு தீங்கு செய்ய நாவலரும் அவரது குழுவினரும் முயற்சி செய்தார்கள் என்றே வைத்துக்கொண்டாலும், வள்ளற்பெருமான் புகழ்மிக்க அருள்நெறித் தலைவராக திகழ்ந்ததுடன் செல்வாக்கு மிக்க மக்கள் தலைவராகவும் விளங்கிய காரணத்தால், அம்முயற்சிகள் எல்லாம் வெற்றிப் பெற வாய்ப்பே இல்லை என்பதுடன், இத்தகைய முயற்சிகளின் எதிர்விளைவுகளாக நாவலருக்கும் பெரும் தீங்கு விளைந்திருக்கும் என்றே முடிவு செய்ய வேண்டும்.

### 2.4.4.வருணாசிரமவாதிகள்

வள்ளற்பெருமான் காலத்திலும்-அதற்கு முன்னும்-அன்னதானம் முதலியவை, ‘செங்குந்தர் சத்திரம்’ ‘வேளாளர் சத்திரம்’ என்ற பெயர்களில் சத்திரங்கள் அமைத்து அந்தந்த சாதியாருக்கு மட்டுமே அன்னதானம் முதலியவை நடந்துவந்தன. பிதுர்கடன் நடைபெறும்போது அங்கு சமைக்கப்படும் உணவை மற்ற சாதியினர் உண்டால் நரகம் கிட்டும் என்று பிராமணர்கள் நம்பினர். இது போன்ற நடைமுறைகள் உயிர் இரக்கத்திற்கு பெரும் தடைகளாக இருந்தமையால், வருணம் ஆசிரமம் சாதி சமயம் முதலியவற்றைக் கைவிடுமாறு வள்ளற்பெருமான் வலியுறுத்தினார்கள். உயிர் இரக்கப் பணிகளைச் செய்யும்போது, சாதியும் மதமும் சமயமும் குறுக்கே நிற்கக்கூடாது என்று சொன்னதற்காக வள்ளற்பெருமானுக்குத் தீங்கு விளைவிக்கும் அளவுக்கு பகைவர்கள் உண்டாகி இருப்பார்கள் என்று முடிவுசெய்ய இயலவில்லை. சாதியைப் பெயரோடு சேர்க்கக்கூடாது. கலப்புமணம் செய்தல் வேண்டும் என்பன போன்ற சீர்திருத்தங்களை வள்ளற்பெருமான் வலியுறுத்தியதாகவும் தெரியவில்லை. எனவே சமுதாயப் புரட்சியில் ஈடுபடுகிறவர்கள் சந்திக்கவேண்டிய கடுமையான எதிர்ப்புக்களை எதிர்கொள்ள வேண்டிய நிலை அவர்களுக்கு ஏற்பட வழி இல்லை. இதையெல்லாம் சிந்தித்தால் வருணாசிரம ஆதரவாளர்கள் வள்ளற்பெருமானுக்குத் தீங்கு செய்ய திட்டமிட்டார்கள் என்பது ஆதாரமற்ற வீண்பழி என்பது விளங்கும்.

### 2.4.5. இரசவாதம் கற்க விரும்பினோர்

வள்ளற்பெருமானிடம் செம்பை தங்கமாக மாற்றும் கலையாக இரசவாதம் கற்றுக்கொள்ள விரும்பியோருக்கு, அதனை அவர்கள் சொல்லித் தராததால், சினங்கொண்டு தீங்கு செய்திருக்கலாம் என்று சிலர் கருதக்கூடும்.

‘இரசவாதம்’ என்பது சித்தர் நூல்களில் மட்டுமே காணப்படும் ஓர் அரிய தெய்வீகக் கலை. இரசவாதக் கலையை விரும்புவோர் சித்தர்களின் நூல்களைப் படிக்காமல் இருக்க மாட்டார்கள். சித்தர்கள் நூல்கள் அனைத்திலும், இரசவாதத்தைக் கற்றுக்கொள்ள வேண்டுமானால், அக்கலையில் தேர்ந்த பெரியோர்களை அடுத்து தொண்டு செய்து, அதனை கற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. இந்நெறி அறிந்தவர்கள் ஆசிரியர் இரசவாதத்தைச் சொல்லித்தரும் காலத்தை எதிர்பார்த்து பொறுமையுடன் காத்து இருப்பார்களேயன்றி, ஆசிரியருக்குத் தீங்குசெய்ய வேண்டும் என்று கனவிலும் நினைக்கமாட்டார்கள். இம்மரபு நிலை அறியாமல் இரசவாதம் சொல்லித்தராததால் அதனை விரும்பியோர் வள்ளற்பெருமானும் தீங்கு இழைத்திருக்கலாம் என்று சிலர் கூறுவதை ‘நிலைகெட்டுப் போன நயவஞ்சகரின் ‘பொய்மைப்புலம்பல் என்றே கருதி ஒதுக்கிவிட வேண்டும்.

வள்ளற்பெருமானின் தன்னலமற்ற மக்கட்பணிகளை கண்ணால் கண்டு அவர்களுக்கு எண்பது காணி நிலத்தை ‘இனாம் சாசனம் செய்தளித்த வடலூர் மக்கள், வள்ளற்பெருமானுக்கு எவரேனும் எத்தகைய தீங்கையேனும் செய்துவிட்டு போகட்டும் என்று விட்டுவிடுவார்களா!

வள்ளற்பெருமானின் மரணமிலாப் பெருவாழ்வு பற்றி எதுவும் அறியாமல்-மனம்போன போக்கில்-எவரோ கூறிய வதந்தி ஒன்றை மறைமலையடிகள் தனது நாட்குறிப்பில் குறித்து வைத்திருக்கிறார். இச்செய்தி மறைமலையடிகளுக்கு

பெருமை சேர்ப்பதாகவும் இல்லை. தரமான ஆய்வு நெறியில் இடம்பெற தகுதி உடையதாகவும் இல்லை.

மேற்கூறப்பட்டுள்ள செய்திகளை ஆய்வுசெய்பவர்கள்-வள்ளற்பெருமான், தாம் சாகாஉடம்ப் பொறமைப் பற்றி கடல்மடை திறந்ததுபோல் அருட்பாக்கள் பலவற்றை அருளி இருப்பதாகவும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

## 2.5.வள்ளற்பெருமான் பெற்ற சாகாநிலை பற்றி அன்பர்கள்-அறிஞர்கள் கருத்து

### 2.5.1.தொழுவூர் வேலாயுதனார்

தொழுவூர் வேலாயுதனார் வள்ளற்பெருமானின் மாணவர்களுள் சிறந்து விளங்கியவர். இவரே வள்ளற்பெருமான் பாடிய பாடல்களைத் தொகுத்து, **'திருஅருட்பா'** என்று பெயரிட்டு அச்சிட்டு முதன்முதலில் வெளியிட்டவர். 'திருஅருட்பா வரலாறு' என்ற தலைப்பில் இவர் பாடிய பாடல்கள் திருஅருட்பா முதல்பதிப்பில் இடம் பெற்றுள்ளன. இப்பாடல்கள் ஒன்றில் வள்ளற்பெருமான் 'புறங்காட்டில் பொய்யுடலை, வையா மெய்ப்புலம் காட்டும் திறன் பெற்றிருந்தது பற்றி குறிப்பிடுகிறார். உடம்பு பிணமாகி புதைக்கப்படாமல்-எரிக்கப்படாமல், மரணத்தை வென்று வாழும் நெறியினைக் காட்டவல்ல ஆசிரியராக வள்ளற்பெருமான் திகழ்ந்தார்கள் என்று தொழுவூர் வேலாயுதனார் தெரிவிக்கிறார். சாகாக்கலையினைப் பிறருக்குப் பயிற்றுவிக்கும் தகுதி உடைய ஆசிரியராக வள்ளற்பெருமானை அவர் சிறப்பிக்கிறார். சாகாக்கலையில் வள்ளற்பெருமான் தேர்ச்சி பெற்று ஒளி உடம்புடன் திகழ்ந்ததை நேரில் கண்ட பிறகே, சாகாக்கலையினை மற்றவர்களுக்கும் பயிற்றுவிக்கும் ஆசிரியராக வள்ளற்பெருமான் திகழ்கிறார்கள் என்று அவர் சிறப்பித்திருக்க வேண்டும்.

வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக்கொண்ட நிகழ்ச்சியினை தொழுவூர் வேலாயுதனார் நேரில் கண்டிருக்கிறார். இதுபற்றியும் வள்ளற்பெருமானின் உடம்பு விளங்கிய நிலை முதலியன பற்றிய தொழுவூர் வேலாயுதனார் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:-

"(வள்ளற்பெருமான்) ஆரியர்களாலும் திராவிடர்களாலும் ஒப்பு பாராட்டப்பெறும் அகத்தியர் முதலிய முனிவர்களின் நூல்களை ஓதாமலே சொல்லும் ஆற்றலை ஒன்பதாம் வயதிலேயே பெற்றிருந்ததைப் பலர் நேரில் அறிவர்.........அவர் யாரிடம் உபதேசம் பெற்றவர் என்பதை ஒருவரும் அறியார்........அவர் ஒரு பெரிய இரசவாத.........புலால் உண்பவர்களைப் புலால் உண்ணாதவர்களாய் மாற்றும் ஒரு தனி சக்தி அவரிடம் இருந்ததைக் கண்கூடாகக் கண்டோம். அவரது பார்வை ஒன்றே ஒருவரது புலால் உண்ணும் விருப்பத்தை ஒழிக்க போதுமானது; பிறரது உள்ளத்தை ஊடுருவி அறியும் வியத்தக ஆற்றல் அவரிடம் இருந்தது.......வடலூருக்கும் கருங்குழிக்கும் சென்று அங்கேயே பல ஆண்டுகள் தங்கினார். அக்காலங்களில் பலமுறை தம்மைச் சூழ்ந்திருந்தவர்களைப் பிரிந்து பிறர்கண்களுக்குப் புலப்படாத வண்ணம் மறைந்து போவார். நீண்ட காலம் அவ்வாறே பிறர் அறியா வண்ணம் இருப்பார்........மெலிந்த மேனியராக இருப்பவர். ஆயினும் வலிமை உடையவர். மிக விரைந்து நடப்பார். பெருங்கண்கள் உடையவர். ஓய்வு இல்லை. இரண்டு மூன்று நாளைக்கு இருமுறை உண்பார். அதுவும் சில கவளங்களே. தொடர்ந்து இரண்டு மூன்று மாதங்கள்

உண்ணாதிருப்பார். அப்போது சிறிது சர்க்கரை கலந்த வெந்நீர் மட்டுமே அருந்துவார். . . 1874 சனவரி மாதம் 30ம் தேதி நாங்கள் மேட்டுக்குப்பத்தில் எங்கள் குருவைப் பார்த்தோம். சீடர்களிடம் அன்போடு விடைபெற்ற பின், ஏற்பாடு செய்திருந்தனர். ஒரு சிறு கட்டிடத்தின் தனி அறை ஒன்றினுள் சென்று, அங்கு வைக்கப்பட்டிருந்த அறைக்கதவு பூட்டப்பட்டது. இருந்த ஒரே துவாரமும் சுவர் வைத்து அடைக்கப்பட்டது. ஓராண்டுக்குப் பின் திறந்துபார்த்த போது அறையில் ஒன்றுமில்லை. வெற்றறையாகவே இருந்தது. பின் ஒரு சமயம் தோன்றுவதாக உறுதியாகக் கூறி இருந்தார். எனினும் தோன்றும் காலம், இடம் சூழ்நிலைகளைத் தெரிவிக்கவில்லை. அப்படித் தோன்றும் வரை, இந்தியாவில் மட்டும் இன்றி, ஐரோப்பா அமெரிக்கா முதலிய மற்றெல்லாத் தேசங்களிலும் தக்கவர்களின் உள்ளத்தை அதிட்டித்து உலகைத் திருத்தும் பணியில் ஈடுபடப் போவதாகக் கூறினார். மேற்கூறிய செய்திகள் ஆயிரக்கணக்கானவர்களுக்குத் தெரிந்தவையே".

வள்ளற்பெருமான் சாகாக்கலையில் வெற்றி கண்டு உடம்பை பிறர் கண்களுக்குத் தோன்றாத நிலையில் வெளியாக விளங்கச் செய்திருக்கிறார்கள் என்பதற்கும், அவர்களுக்கு யாரும் எவ்விதமான தீங்கும் செய்து விடவில்லை என்பதற்கும் வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொள்ளும்போது, தலைமாணாக்கர் என்ற நிலையில் உடன் இருந்த தொழுவூர் வேலாயுதனார் தந்திருக்கும் சான்று மிகவும் மதிப்பு வாய்ந்தது ஆகும். மேலும் திருக்காப்பிட்டுக் கொண்ட நிகழ்ச்சி 'ஆயிரக்கணக்கானோருக்குத் தெரிந்ததே' என்று தொழுவூர் வேலாயுதனார் கூறுகின்றார். இதில் இருந்து, வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொள்ள இருப்பதை அன்பர்கள் பலரும் அறிந்து, தொழுவூர் வேலாயுதனாருடன் உடன் இருந்திருக்க வேண்டும் என்பதை உய்த்துணரலாம். வெளியூர் அன்பர்களுடன் மேட்டுக்குப்பத்தில் இருந்த ஊர்ப் பெரியவர்கள், நிர்வாகத் தலைவர்கள் வள்ளற்பெருமானுக்குத் தீங்கு நிகழ வாய்ப்பு இல்லை. அப்படி ஏதேனும் நிகழ்ந்து இருப்பினும் வெளியில் தெரியாமல் இருக்க வாய்ப்பு இல்லை; ஆனால் அவர்கள் அறைக்குள் சென்றதும் வெளியில் காணப்படாததுமான செய்திகள் எங்கும் ஒருவகை பரபரப்பை ஏற்படுத்தி இருக்க வேண்டும். அதனால் வருவாய்க் கழகத்தின் உறுப்பினரும் மாவட்ட ஆட்சித் தலைவரும் மேட்டுக்குப்பம் வந்து விசாரணை நடத்தினர். அவர்கள் ஐயத்திற்கு இடமான நிகழ்ச்சிகள் எதுவும் நடைபெறவில்லை என்று முடிவுசெய்து, வடலூர் தருமச்சாலையில் அன்னதானத்திற்கு நன்கொடையும் அளித்துச் சென்றனர்.

### 2.5.2. தவத்திரு ஊரன் அடிகள்

வள்ளற்பெருமான் சித்திவளாகத்தில் திருக்காப்பிட்டுக் கொண்டபின் இரண்டரை நாழிகையில் உடம்பை வெளியாக்கிக் கொள்ளும் சித்தியைப் பெற்றார்கள் என்பது தவத்திரு ஊரன் அடிகளார் கருத்து. அதற்குச் சான்றாக அவர்,

**"என்சாமி எனதுதுரை என்உயிர் நாயகனார்**
**இன்றுவந்து நான்இருக்கும் இடத்தில் அமர்கின்றார்**
**பின்சாரும் இரண்டரைநா ழிகைக்குள்ளே எனது**
**பேர்உடம்பில் கலந்துளத்தே பிரியாமல் இருப்பார்**

**தன்சாதி உடைய பெருந்தவத்தாலே நான்தான்**
**சாற்றுகின்றேன் அறிந்திதுதான் சத்தியம் சத்தியமே**
**மின்சாரும் இடைமடவாய் என்மொழிநின் தனக்கே**
**வெளியாகும் இரண்டரை நாழிகைக் கடந்தபோதே"**

என்னும் அருட்பாவை மேற்கோளாகக் காட்டுகிறார். இப்பாடலில் எங்கும் பரந்து விளங்கும் வெளிஉடம்பாக தமது உடம்பு விளங்கும் நிலையை வெளிப்படுத்தும் வகையில், தமது உடம்பை 'பேருடம்பு' என்று வள்ளற்பெருமான் கூறுவதும் கவனிக்கத்தக்கது.

வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக்கொள்ளும்போது, "நான் உள்ளே பத்துப்பதினைந்து தினம் இருக்கப்போகிறேன். பார்த்து அவ நம்பிக்கை அடையாதீர்கள். ஒருக்கால் பார்க்க நேர்ந்தால் யாருக்கும் தோன்றாது; வெறுவீடாகத்தான் இருக்கும்படி ஆண்டவர் செய்விப்பார்; என்னைக் காட்டிக்கொடார்". என்று கூறியதாக அன்பர் ஒருவரின் குறிப்பினை மேற்கொள் காட்டி தவத்திரு ஊரன் அடிகள் புதிய கருத்து ஒன்றையும் வெளியிட்டிருக்கிறார். 'கடவுள் தம்மைக் காட்டிக் கொடார்' என்று வள்ளற்பெருமான் கூறுவதற்கு பொருள், தம்மைக் காண இயலாது என்பதே என்று தவத்திரு ஊரன் அடிகள் விளங்குகிறார். இந்த விளக்கத்தின் அடிப்படையில் சிந்தித்தால், வள்ளற்பெருமானின் அருள் உடம்பு கண்களுக்குப் புலனாகாத நிலையில் இருக்கிறது என்ற முடிவுக்கே நாம் வரவேண்டி இருக்கிறது. தொழுவூர் வேலாயுதனாரின் புதல்வர் திருநாகேசுவரர் வள்ளற்பெருமான் தமது உடம்பை 'மறைத்துக் கொண்டார்கள்' என்றே நூல் ஒன்றில் குறிப்பிடுகிறார். இதுபோலவே தவத்திரு ஊரன் அடிகள் வள்ளற்பெருமானின் 'உடம்பு மறைத்துக்கொள்ளப் போவதாக கூறியருளினார்கள்' என்று கூறுகிறார். வள்ளற்பெருமான் சாகாக்கலையில் வெற்றிபெற்று உடம்பை அருள் உடம்பாக அழியா நிலையில் விளங்கச் செய்திருக்கிறார்கள் என்ற மெய்ம்மையை தவத்திரு ஊரன் அடிகளின் சொற்கள் தெளிவாகவும் திறம்படவும் சுருக்கமாகவும் புலப்படுத்துகின்றன.

### 2.5.3.பிறையாறு சிதம்பர சுவாமிகள்

'வள்ளலார் வாழ்வியல்' என்ற நூலில் ஆசிரியர் பிறையாறு சிதம்பர சுவாமிகள்-வள்ளற்பெருமானின் மாணக்கர் காரணப்பட்டு கந்தசாமிப்பிள்ளை, வள்ளற்பெருமான் காலத்தில் வாழ்ந்திருந்த பெரியோர்கள் முதலியோருடன் பழகியவர். அறுபது ஆண்டுகாலம் திருஅருட்பாவை ஆய்ந்து உணர்ந்தவர். அவர் வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக்கொண்டபின் எங்குற்றார்கள் என்ற வினாவினை எழுப்பி பின்வரும் கருத்துகளைத் தெரிவிக்கிறார்:-

"ஓர் ஏழை விவசாயி முதலில் விழல் வேய்ந்த குடிலில் இருக்கிறான். அவனுக்கு செல்வம் வந்து சேரும்போது ஓடுவேய்ந்த கட்டிடமாக விழல் வேய்ந்த குடிலை மாற்றி அமைக்கிறான். மேலும் செல்வம் பெருகும்போது ஓடு வேய்ந்த கல் கட்டிடத்தை மூவடுக்கு மாளிகையாக அமைத்துக்கொள்கிறான். அவனே ஆட்சி புரியும் அரசனாகும்போது எவராலும் எவ்வகையாலும் தனக்கு இடையூறு நேரிடாவண்ணம்-தாண்டி வரமுடியாத அகழியாலும்-ஏறி வரமுடியாத உயர்ந்த மதில்களாலும்-இவற்றையும் மீறி எவரும் வந்தால் தடுக்கத் தக்க ஆயுதங்களுடன் கூடிய அரண்மனையில் வாழ்கின்றான்.

“அதுபோல் உயிர்கள் ஓரறிவுடன் கூடிய தாவர உடம்பில் புகுத்தப்பட்டு பின் படிப்படியாக விலாசமும் விளக்கமும் கூடிய உடம்புகளுக்குள் புகுத்தப்படுகின்றன. பரமமூத்தி நிலையை ஓர் உயிர் அடையும்போது சாகாக்கலை அனுபவ உடம்புகளைப் பெறுகின்றது.

ஓர் உயிரின் அறிவு விளக்கம் பெறுவதற்கு ஏற்றவாறு உடம்பு அமையும் என்றும், உயர்வான முத்திநிலையில் உடம்பு அருள் வடிவமாக மாறும் என்றும் அறிவியல் கோட்பாடுகளை விளக்குவதுபோல்-காரண காரிய முறையில் மிகச் சிறப்பாக பிறையாறு சிதம்பர சுவாமிகள் விளக்கியிருப்பது அறிவுக்கு விருந்தாக அமைந்துள்ளது.

“பெரியோர்களில் சிலர் இலிங்கத்தில் ஜோதியில் அம்பலத்தில் சென்று மறைந்தார்கள். ஆனால் வள்ளற்பெருமான் சித்திவளாகத்தில் தம் நிலையில் தாமாக அமர்ந்து, பின் நம் ஊனக் கண்ணுக்குத் தோன்றாது ஆண்டவன் தாமாக எங்கும் நிறைந்து எவ்வுயிர்க்கும் உயிராக விளங்குகின்றார்கள்”. என்ற கருத்தையும் பிறையாறு சிதம்பர சுவாமிகள் தெரிவிக்கிறார்கள்.

மேலும் பிறையாறு சிதம்பர சுவாமிகள் வள்ளற்பெருமான் காலத்தில் வாழ்ந்திருந்த பெரியோர்களைச் சந்தித்து பல செய்திகளைக் கேட்டு அறிந்திருக்க வேண்டும். குறிப்பாக வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்ட நிகழ்ச்சியினைப் பற்றிய தகவல்களைத் திரட்டியிருக்க வேண்டும். அதனால் அவருடைய ‘வள்ளலார் வாழ்வியல்’ என்ற நூலில், வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்ட நிகழ்ச்சி, வேறு நூல்களில் காணப்படாத சில புதிய செய்திகளுடன் விளக்கமாக இடம்பெற்றுள்ளது.

“சித்திவளாகத் திருமாளிகையில், வள்ளல் அமர்ந்திருந்த அறையில், அடியில் குறுக்குச் சட்டம் மாத்திரம் உடைய-உயரம் இல்லாத- ஒரு பலகையில், கீழ்மேல் திசையாக, வடக்கு நோக்கி இடக்கை தலையைத் தாங்க, திருப்பள்ளியில் 30.1.1974 ஸ்ரீமுக வருடம் தைமாதம் 19 ஆம் தேதி வெள்ளிக்கிழமை புனர்பூசத்தன்று, இரவு 12 மணிக்கு, கடகத்தில் சந்திரனும் மகரத்தில் சூரியனும் பூரணமாக விளங்கும் ஞான நிறைவைக் குறிக்கும் நன்னாளில், தாம் அமர்ந்து கொண்டு, கதவைத் திருக்காப்பிடும் போது கட்டளை இட்டார்கள்.”

வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்ட நிகழ்ச்சி பற்றி பிறையாறு சிதம்பர சுவாமிகள் கூறுவதைச் சிறந்த சான்றாகக் கருதலாம். மேலும், இது வள்ளபெருமானின் தலைமாணாக்கர் தொழுவூர் வேலாயுதனார் திருக்காப்பிட்டுக் கொண்ட நிகழ்ச்சி பற்றி கூறி இருப்பதோடு ஒத்து இருப்பதும் கவனிக்கத்தக்கது.

தைப்பூச தினத்தில் வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்டதன் உடகிடக்கையினையும் பிறையாறு சிதம்பர சுவாமிகள் விளக்கி இருப்பது நமது சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்துள்ளது. தைப்பூச நாள் முழுநிலவு நாளாக (பவுர்ணமியாக) அமைவது வழக்கம். சோதிட நூல்கள் மகர இராசியை சனி என்ற கோளின் வீடாகக் கூறுகின்றன. ஆயுள்காரகனாக விளங்கும் சனியின் வீடாகிய மகர இராசியில் தைத்திங்களின் போது சூரியன் இயங்குகிறது. சூரியனை ஜீவன் - உயிர் -என்று கூறுவது சோதிடநூல்களின் வழக்கு. சந்திரனை உடல் என்றும்,

கடக இராசியில் ஆட்சி பெறுவதாகவும் அந்நூல்கள் கூறும். முழுநிலவு நாளில் சந்திரன் முழுமையாக விளங்கி சூரியனுடன் 180 பாகையில் ஒரே நேர் கோட்டில் அமையும். ஆயுள்காரகனாகிய சனியின் வீடாகிய மகர இராசியில் உயிராகிய சூரியன் விளங்குவதும்-உடலாகிய சந்திரன் கடக இராசியில் முழுமையாக ஆட்சி பெற்று நிலவுவதும், முடிவற்ற ஆயுளுடன் மரணமில்லாமல் உடல் விளங்குவதைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அதனாலேயே வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொள்வதற்கு தைப்பூச நன்னாளை தேர்ந்தெடுத்திருக்கலாம். இத்தகைய சிந்தனைகளை எல்லாம் தூண்டும் வகையில் தைப்பூசத்தைப் பற்றி பிறையாறு சிதம்பர சுவாமிகள் கூறுவது அமைந்துள்ளது.

### 2.5.4.திரு.வி.கலியாணசுந்தரனார்

சாகாநிலை என்னும் பெருநிலை ஒன்று உண்டு என்றும், அது குறித்து தமக்கு ஐயம் திரிபு மயக்கம் இல்லை என்றும், 'தமிழ்த்தென்றல்' திரு.வி.க. அவர்கள் உறுதிப்படக் கூறுகிறார். சாகா நிலையை அடைய முயல வேண்டும் என்பது தமது வேணவா என்றும் கூறுகிறார். எல்லாம் வல்ல இறைவன், உயிர்கட்கு புல் பூடு மரம் புழு மீன் விலங்கு முதலான உடம்புகளைத் தந்து படிப்படியாக அறிவை விளங்கச் செய்து இறுதியில் பகுத்தறிவு விளங்குவதற்குரிய மக்கள் உடம்பைத் தருவதாகவும், மக்கள் உடம்பில் இருந்து சாகாநிலையை அடைய முயற்சி செய்ய வேண்டும் என்றும் திரு.வி.க. வலியுறுத்துகிறார்.

வள்ளற்பெருமான் சாகாநிலையைக் குறிக்கொண்டே வாழ்வு நடத்தியதாக திரு.வி.க. கூறி, அதற்கு அகச்சான்றாக வள்ளற்பெருமான் வரைந்த உரைநடை விண்ணப்பத்தையும் எடுத்துக்காட்டி இருக்கிறார்.

**"என்னையும் பணிகொண் டிறவா வரமளித்து**
**அன்னையில் உவந்த அருட்பெருஞ் ஜோது"**

**"இறவா வரமளித்து என்னை மேலேற்றிய**
**அறவா ழியாம்தனி அருட்பெருஞ் ஜோதி"**

**"சாவா நிலைஇது தந்தனம் உனக்கே**
**ஆவா எனஅருள் அருட்பெருஞ் ஜோதி"**

**"மரணப் பெரும்பிணி வாரா வகைமிகு**
**கரணப் பெருந்திறல் காட்டிய மருந்தே"**

**"சாகாக் கல்வியின் தரமெலாம் உணர்த்தி**
**சாகா வரத்தையும் தந்துமேன் மேலும்"**

**"நரைமரணம் மூப்புஅறியா நல்ல உடம்பினரே நற்குலத்தார்"**

**"மரணமிலாப் பெருவாழ்வில் அமர்ந்திடலாம் கண்டீர்"**

**"ஆடுகின்ற சேவடிக்கே ஆளானேன்**

**மாளாத யாக்கை பெற்றேன்"**

**"காற்றாலே புவியாலே ககனமத னாலே**
**கனலாலே புனலாலே கதிராதி யாலே**
**கூற்றாலே பிணியாலே கொலைக்கருவியாலே**
**கோளாலே பிற இயற்றும் கொடுஞ்செயல்களாலே**
**வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்**
**மெய்யளிக்க வேண்டும் என்றேன் விரைந்து அளித்தான் எனக்கே"**

முதலான அருட்பாக்களை அகச்சான்றுகளாகக் காட்டி வள்ளற்பெருமான் சாகாக்கலையில் தேர்ந்து மரணத்தை வென்றமையை திரு.வி.க. நிலை நாட்டுகிறார். திரு.வி.க. அருட்பாவை 'மருட்பா' என்று வாதிட்ட யாழ்ப்பாணம் கதிரைவேல் பிள்ளையின் மாணவர். ஆயினும் அவர் நடுநிலையில் நின்று திருஅருட்பாவை ஆய்ந்துணர்ந்து வள்ளற்பெருமான் சாகாநிலை பெற்றமையை வலியுறுத்தி நிலைநாட்டுவது எண்ணி எண்ணி போற்றி மகிழத்தக்கதாக உள்ளது.

'சுத்தசாதகம்' முதலான சாத்திரங்கள் சாகாநிலை பற்றி கூறுதல், முத்துத்தாண்டவர் போன்ற பெரியோர்கள் உடம்பு வெளியில் கலத்தல் பற்றி கூறுதல், வள்ளற்பெருமான் தாம் சாகாநிலை பெற்றாது பற்றி பாடல்கள்-உரைநடைகள் முதலானவை வாயிலாகக் கூறுதல் வள்ளற்பெருமானின் மாணவர்கள் அன்பர்கள் முதலியோர் தரும் சான்றுகள், திரு.வி.க. போன்ற அறிஞர்கள் வள்ளற்பெருமான் சாகாநிலை பெற்றமையை நிலைநாட்டுதல் முதலான அனைத்தையும் தொகுத்து எண்ணிப்பார்த்தால்-வள்ளற்பெருமான் சாகாநிலை பெற்றதே உண்மை என்ற தெளிவான முடிவு கிட்டுகிறது. இனி அவர்கள் பெற்ற சாகாஉடம்பின் வியத்தகு இயல்புகள் பற்றிய அளப்பரும் ஆற்றல்கள் பற்றியும் அடுத்த இயலில் சிந்திப்போம்.

## அடிக்குறிப்புகள்

1. ஏ.கந்தையாப் பிள்ளை, உண்மை முத்திநிலை, ப.23
2. திருவாசகம், கோயில் மூத்த திருப்பதிகம், பாடல் 8
3. சித்தர் பாடல்கள் பட்டினத்தார் திருப்பாடல் திரட்டு திருத்தில்லை, பாடல்16
4. திருவாவடுதுறை ஆதீன குருபரம்பரை விளக்கம், பக்கம்.37-39
5. மேலது.பக்கம் 39-40
6. தாயுமானவர் திருப்பாடல்கள், பராபரக்கண்ணி 358
7. மேலது, பராபரக்கண்ணி 357
8. சுத்தசாதகம், பாடல் 19
9. ஔவைக்குறள், பாடல் 16

10. மேலது, பாடல் 226
11. முத்துத்தாண்டவர் கீர்த்தனை பக்கம்.12
12. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 3803
13. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 85
14. மேலது, பக்கம் 457-458
15. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 3303
16. மேலது பாடல்கள் 3720-3729
17. மேலது, பாடல் 3764
18. மேலது, பாடல் 3756
19. திருஅருட்பா உரைநடைப்பகுதி பக்கம் 453
20. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல்கள் 3852-3861
21. மேலது, பாடல் 4740
22. மேலது, பாடல் 5435
23. மேலது, பாடல் 5482
24. மேலது, பாடல் 5445
25. மேலது, பாடல் 4646
26. மேலது, பாடல் 4707
27. மேலது, பாடல் 5510
28. மேலது, பாடல் 4636
29. மேலது, பாடல் 5450
30. இரா.செல்வகணபதி, கோரக்கர் சித்தர் அருள்வரலாறு, பக்கம் 55-56
31. பிறையாறு சிதம்பரசுவாமிகள், திருஅருட்பிரகாச வள்ளலார் வாழ்வியல், பக்கம்.41
32. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4745
33. மேலது, பக்கம் 42
34. திருமுருக கிருபானந்த வாரியார், திருமுருக கிருபானந்த வாரியார் வாழ்க்கை வரலாறு, பக்கம் 58
35. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4220
36. மேலது, பக்கம் 4-3
37. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 436
38. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5572
39. மேலது, பாடல் 5576
40. மேலது, பாடல் 5573
41. மேலது, பாடல் 3471
42. மேலது, பாடல் 4084
43. மேலது, பாடல் 4086
44. மேலது, பாடல் 5515
45. மேலது, பாடல் 4084
46. மேலது, அருட்பெருஞ்ஜோதி அகவல், பாடல் 4615 வரிகள் 1577-1578
47. மேலது, பாடல் 4961
48. மேலது, பாடல் 5291
49. மேலது, பாடல் 4956
50. துறவி கந்தசுவாமி, திருஅருட்பிரகாச வள்ளல் இராமலிங்கர் பெற்ற இறைவடிவமும் ஐந்தொழில் ஆற்றலும், பக்கம் 99
51. கு.சீனிவாசன், சுத்த சன்மார்க்க விளக்கம், பக்கம் 243-244
52. துறவி கந்தசுவாமி, மே.கா.நூ., பக்கம் 99-100

53. திருஅருட்பா உரைநடைப்பகுதி,பக்கம்438
54. ஊரன் அடிகள், இராமலிங்க அடிகள் வரலாறு, பின் இணைப்பு பக்கம்21
55. துறவி கந்தசுவாமி, மே.கா.நூ., பக்கம் 93-94
56. மேலது, பக்கம் 93
57. திருஅருட்பா ஆறாம் திருமுறை, திருஅருட்பா வரலாறு பாடல் 82
58. ஊரன் அடிகள், மே.கா.நூ., பின் இணைப்பு பக்கம் 21
59. மேலது, பின் இணைப்பு பக்கம் அ40
60. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5818
61. மேலது, பக்கம்540
62. பிறையாறு சிதம்பர சுவாமிகள், மே.கா.நூ., பின் அட்டை பக்கம் 56
63. மேலது, பக்கம் 56-57
64. மேலது, பக்கம் 64
65. மேலது, பக்கம் அ54
66. திரு.வி.க.இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், பக்கம் 102
67. மேலது, பக்கம் 99

## இயல் நான்கு

## வள்ளற்பெருமான் விளக்கும் சாகாக்கலை அனுபவ உடம்புகள்

வள்ளற்பெருமான், சுத்த சன்மார்க்க நெறியைப் பின்பற்றி தாம் எக்காலத்தும் நாசமடையாத சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் என்னும் சாகாக்கலை அனுபவ தேகங்களைப் பெற்றது குறித்து சமரச சுத்த சன்மார்க்க சத்தியப் பெருவிண்ணப்பம்' என்னும் உரைநடை விண்ணப்பத்தில் தெரிவித்திருக்கிறார்கள். “சன்மார்க்கத்தின் முடிவு சாகாத கல்வியைத் தெரிவிப்பதேயன்றி வேறில்லை; சாகாதவனே சன்மார்க்கி; சாகிறவன் சன்மார்க்க நிலையைப் பெற்றவன் அல்லன்” என்ற அவர்களது உபதேசமும் இங்கு நினைவுகூரத்தக்கது. அவர்கள் சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் ஆகியன பற்றி பாடல்களிலும் உரைநடைகளிலும் உபதேசங்களிலும் விரிவாகவும் தெளிவாகவும் விளக்கி இருக்கிறார்கள். அவற்றை இனி காண்போம்.

### அ.சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம்

வள்ளற்பெருமான் ‘ஜீவகாருண்ய ஒழுக்கம்’ உரைநடை நூலில் பேரின்ப லாபத்தை அடைந்தவர் பெருமையை விவரிக்கும்போது பேரின்ப லாபத்தை அடைந்தவர்கள் தோல் நரம்பு என்பு தசை இரத்தம் சுக்கிலம் முதலிய அசுத்த பூத காரியங்களும்-அவற்றின் காரணங்களாகிய அசுத்த பிரகிருதி அணுக்களுமாகிய தேகத்தை மாற்றி, மாற்றி இவ்வளவு என்று அறியப்படாத உயர்ந்த பொன்னாகிய சுத்தபூத காரிய சுத்ததேகத்தையும், பொன்வடிவாகத் தோன்றுதல் மாத்திரமேயன்றி-ஆகாயம் போல் பரிசிக்கப்படாத சுத்தபூர காரண தேகத்தையும், தோன்றப்படுதலும் இன்றி ஆகாயம்போல் விளங்குகின்ற ஞானதேகத்தையும் பெற்றவர்களாய் இருப்பார்கள் என்று கூறுகிறார்கள். இதிலிருந்து,

1. தோல் நரம்பு என்பு முதலியவற்றால் ஆகியது அசுத்த பூத உடம்பு
2. அசுத்த பூத உடம்பின் மூலகாரணம், அசுத்த பிரகிருதி அணுக்கள்.
3. அசுத்த பிரகிருதி அணுக்களும்-அவற்றால் உண்டாகும் அசுத்த உடம்பும், உயர்ந்த பொன்னாகிய சுத்த உடம்பு மாறுகின்றன.
4. பொன் வடிவமாகிய சுத்த உடம்பின் வெவ்வேறு நிலைகளே சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் ஆகியவை.

என்பனவற்றை அறியலாம்.

**<u>1.காரியம் - காரியகாரணம் - காரணம்</u>**

இனி சுத்தபூதகாரியம்-சுத்தபூத காரணம் என்ற வள்ளற்பெருமான் குறிப்பிடுவது பற்றிச் சிந்திப்போம். மல கன்மங்களாக விரவி இருப்பது பிரகிருதிமாயை என்று ‘சித்தாந்தக் கட்டளை என்று கூறுகிறது. பிரதிகிருதியில் இருந்து சத்துவம் ராஜசம் தாமசம் என்னும் முக்குணங்கள் தோன்று வதாகவும், இவற்றில் இருந்து மனம் புத்தி பஞ்ச பூதங்கள் முதலியன தோன்றுவதாகவும் ‘சிவப்பிரகாசக் கட்டளை’ தெரிவிக்கிறது. பஞ்சபூதத்தால் ஆகிய அருஉடம்பு தோன்றுவதற்கு மூலகாரணமாக ‘பிரகிருதி’ இருப்பதால்-உடம்பு தோன்றுவதற்குக் காரணமாக இருப்பன ‘பிரகிருதி அணுக்கள்’ என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். பிரகிருதியில் ஆணவமும் கன்மமும் கலந்து இருப்பதால் அதனை அசுத்த பிரகிருதி அணுக்கள் என்றும், அசுத்த உடம்பு உண்டாக காரணமாக உள்ள அணுக்களை ‘அசுத்த பிரகிருதி அணுக்கள்’ என்றும் பெருமான் கூறுகிறார்கள். ‘அசுத்த பிரகிருதி அணுக்கள்’ ஆணவம், கன்மம் முதலான குற்றங்கள் நீங்கி அசுத்த பிரகிருதி அணுக்களாக மாறிவிட்டால் அசுத்த உடம்பும் சுத்தபூத காரியங்களாலான சுத்த உடம்பாக மாறிவிடும் என்பது அவர்கள் கருத்து.

‘பொன்’ என்று வள்ளற்பெருமான் கூறுவது பற்றி சிந்திக்க வேண்டும். செம்பில் களிம்பு உண்டாகிறது. நாள்தோறும் தூய்மை செய்தாலும் அடுத்தடுத்து களிம்பு உண்டாகிக் கொண்டே இருக்கிறது. அதுபோல் உடம்பில் அழுக்கு வியர்வை மலம் சிறுநீர் முதலான அசுத்தங்கள் உண்டாகிக்கொண்டே இருக்கின்றன. உடம்பை ஒவ்வொருநாளும் தூய்மை செய்தாலும் அடுத்தடுத்து அசுத்தங்கள் உண்டாகிக் கொண்டே இருக்கின்றன. செம்பைப் பொன்னாக்குகின்ற கலை ‘இரசவாதம்’ என்று அழைக்கப்படுகின்றது. ‘இரசவாதக்கலை’ பற்றிய பல செய்திகளைச் சித்தர் நூல்களில் காண முடியும். இரசவாதக்கலையின் துணையால் செம்பு தூய்மை செய்யப்பட்டு பொன் ஆகிறது. அதன்பிறகு அதில் களிம்பு உண்டாகாது. அதுபோல் திருஅருள் துணையால் அசுத்த உடம்பு வேதிக்கப்பட்டு தூய்மை ஆகிவிடுகிறது. தூய்மையாக்கப்பட்ட உடம்பு-அழுக்கு வியர்வை மலம் சிறுநீர் முதலான அசுத்தங்கள் இல்லாமல் விளங்கும். இக்கருத்துக்கள் அனைத்தையும் உள்ளடக்கியே வள்ளற்பெருமான் அசுத்த உடம்பு உயர்ந்த பொன்னாகிய சுத்ததேகமாக மாறும் என்று தெரிவிக்கிறார்கள்.

வள்ளற்பெருமான் விளக்கில் உள்ள தீபத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது,

| | | |
|---|---|---|
| 1.சுடர் | - | காரியம் |
| 2.சுடரைச் சூழ்ந்துள்ள சோபை | - | காரிய-காரணம் |
| 3.சுடரைச் சூழ்ந்து எங்கும் பரவியுள்ள பிரகாசம் | - | காரணம் |

என்று விளக்கம் தருகிறார்கள். சுடர் முதலியன பற்றி வள்ளற்பெருமான் கூறும் விளக்கத்தினைப் பின்வரும் எடுத்துக்காட்டினாலும் விளக்கலாம்.

| | | |
|---|---|---|
| 1.பனிக்கட்டி | - | காரியம் |
| 2.நீர் | - | காரிய-காரணம் |
| 3. | - | காரணம் |

பனிகட்டி நீர் ஆவி முதலியன ஒரே பொருளின் வெவ்வேறு நிலைகள். அதுபோல் சுடர் சோபை பிரகாசம் ஆகியவை ஒரே பொருளாகிய ஒளியின் வெவ்வேறு நிலைகள். ஆகவே காரியம், காரிய காரணம், காரணம் என்பவை ஒரே பொருளின் வெவ்வேறு நிலைகளைக் குறிக்கின்றன என்று முடிவு செய்ய வேண்டும்.

| | | |
|---|---|---|
| 1.சுத்த தேகம் | - | காரிய ரூபம் |
| 2.பிரணவதேகம் | - | காரிய-காரண ரூபம் |
| 3.ஞானதேகம் | - | காரண ரூபம் |

என்று திருஅருட்பா உபதேசப்பகுதியில் வள்ளற்பெருமான் கூறி இருக்கிறார்கள். எனவே சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் முதலியவை 'சுத்த பூதத்தின்'  'பொன்வடிவத்தின்' வெவ்வேறு நிலைகள் என்பது பெறப்படுகிறது. இனி 'சுத்தபூதம்' என்பது யாது என்பது பற்றிச் சிந்திப்போம்.

## <u>2.அசுத்த பூதமே-அசுத்தம் நீங்கி சுத்தபூதம் ஆகுதல்</u>

தோல் நரம்பு என்பு முதலியவற்றாலான அசுத்த பூதகாரிய தேகமும், அவற்றின் காரணங்களாகிய அசுத்த பிரகிருதி அணுக்களும் மாற்று இவ்வளவு என்று அறியப்படாத உயர்ந்த பொன்னாகிய சுத்த பூத காரியமாக மாறுவது குறித்து வள்ளற்பெருமான் கூறி இருப்பதை முன்னரே கண்டோம். இதிலிருந்து அசுத்தபூதமே, சுத்தபூதமாகக் மாறுகிறது என்பது தெளிவு. செம்பில் களிம்பு உண்டாவது போல், அசுத்த உடம்பில் வியர்வை அழுக்கு மலம் சிறுநீர் முதலிய அசுத்தங்கள் உண்டாகிக்கொண்டே இருக்கின்றன. செம்பை பரிசனதேி' என்ற குளிகையால் தொட்டால் பொன்னாகும். செம்பை பரிசனவேதியினால் தொட்டு ஏமமாக்குவது-பொன் ஆக்குவது-பற்றி வள்ளற்பெருமானே குறிப்பிடுகிறார்கள். பரிசனவேதியால் தொட்டவுடன் செம்பு பொன் ஆவதுபோல், அசுத்த உடம்பும் திருஅருளால் ஒரு கணத்தில் தூய உடம்பாக வேதிக்கப்படும் என்பது வள்ளற்பெருமான் கருத்து.

**"அகவடிவை ஒருகணத்தே அனக வடிவாக்கி"**

என்ற வள்ளற்பெருமானின் வாக்கு, மேற்கண்ட கருத்தை உறுதி செய்கின்றது. 'அகவடிவம்' 'அனகவடிகம்' ஆகியவற்றின் பொருளை விளங்கிக்கொள்வதற்குரிய அகச்சான்றுகள் திருஅருட்பாவில் இல்லை. ஆனால் மேலே எடுத்துக்காட்டப்பட்ட

பாடல் பரிசனவேதியால், தொடப்படும் செம்பு ஒரு கணத்தில் பொன்னாக மாறுவதுபோல் உடம்புமாற்றம் ஒரு கணத்தில் நிகழ்வதுபற்றிக் கூறுகிறது என்று துணிவதில் தடை ஏதும் இல்லை.

சுத்ததேகமே பொன் உடம்பு, ஒளிஉடம்பு, இயற்கை உடம்பு முதலான வெவ்வேறு பெயர்களால் வள்ளற்பெருமானால் குறிக்கப்படுகிறது. சுத்த உடம்பு பற்றி வள்ளற்பெருமான் கூறும்போது மாற்று இவ்வளவு என்று அறியமுடியாத உயர்ந்த பொன்னாகிய 'சுத்தபூதம்' என்று கூறுகிறார்கள் பொன்னின் மாற்று உயரும்போதும், அதன் ஒளியும் அதிகமாகும்; அளவுகடந்த மாற்றுடைய பொன் அளவுகடந்த ஒளியையும் உடையதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. அதனாலேயே சுத்த உடம்பை வள்ளற்பெருமான் 'ஒளி உடம்பு' என்றும் அழைக்கிறார்கள். காலத்தால் என்றும் அழியாமல் விளங்குவது இயற்கை. வள்ளற்பெருமான் அருளை 'இயற்கைவிளக்கம்' என்றே அழைக்கிறார்கள். அதனால், என்றும் அழியாமல் விளங்கவல்ல சுத்த உடம்பை 'இயற்கைஉடம்பு' என்றும் வள்ளற்பெருமான் அழைக்கிறார்கள்.

சுத்ததேகத்தை வள்ளற்பெருமான் சுத்த உடம்பு, பொன் உடம்பு, ஒளி உடம்பு, இயற்கைஉடம்பு, வாய்மை உடம்பு, முதலான பெயர்களால் அழைப்பதை அவர்களது பாக்களால் அறியலாம்.

## 2.1.சுத்த உடம்பு

**"எய்யேன் இனி வெம்மலக் கூட்டில் இருந்தேன் உள்ளம்**
**நையேன் சுத்த நல்லுடம்பு எய்தினன்"**

## 2.2.பொன் உடம்பு

**"பொன்இயல் வடிவமும் புரைபடா உளமும்**
**. . . . . . . . . . . . . . . . . . . . ...**
**உவகையும் உதவினை எனக்கே"**

**"நீட்டி நின்றதோர் விண்ணப்பம் திருச்செவி நிறைத்தருள் புரிந்தாயே**
**பூட்டும் இவ்வுடல் எற்றையும் அழிவுறாப் பொன்வடிவாமாறே!"**

**"இடைவுறாது செய்விண்ணப்பம் திருச்செவிக் கேற்றருள் புரிந்தாயே**
**புடையின் இவ்வுடல் எற்றையும் அழிவுறாப் பொன்வடிவாமாறே!"**

**"சித்திஎலாம் போதித்து உடம்பையும் பொன் உடம்பாக்கி புத்தமுதும்**
**சாதித்தருளிய நின் அருளுக்குயான் செயத்தக்க தென்னே"**

**"....அழியாச் செழும் பொன்னேர் வடிவம் அளித்து**
**என் உயிரில் புணர்ந்தவனே"**

**"வன்பிலா மனத்தே வயங்கொளி என்கோ!**

மன்னும் அம் பலத்தர செங்கோ!
என்புரி அழியாப் பொன்புரி ஆக்கி
என்னைஆண் டருளிய நினையே!"

"திரைந்த உடல் விரைந்துடனே
பொன்உடம்பே ஆகித் திகழ்ந்தழியா
தோங்கஅருள் சித்தே! மெய்ச் சத்தே!"

"பொன்னுடம்பு எனக்குப் பொருந்திடும் பொருட்டாய்
என்னுளம் கலந்த என்தனி அன்பே"

"............ஏக்கமெலாம் நீங்கினேன் எண்ணம் நிரம்பினேன்
பொன்வடிவம் தாங்கினேன் சத்தியமாத் தான்"

"பொன்உருதந்தான் என்று ஊதாது சங்கே!"

"திரைந்து நெகிழ்ந்து தோல் உடம்பும் செழும்பொன்
வடிவாய்த் திகழ்ந்தேனே!"

2.3.ஒளி உடம்பு

"ஊக்கமும் உணர்ச்சியும் ஒளிதரும் ஆக்கையும்
ஆக்கமும் அருளிய அருட்பெருஞ்ஜோதி"

"எக்காலமும் சாகாமல் ஓங்கும் ஒளிவடிவம் பெற்றேன்!"

"ஊன்செய்த தேகம் ஒளிவடிவாக நின்று ஓங்குகின்றேன்"

"ஊனஉடம்பே ஒளிஉடம்பாய் ஓங்கி நிற்க
ஞானஅமுது எனக்கு நல்கியதே!"

2.4.இயற்கை உடம்பு

"இறந்திறந்தே இளைத்ததெலாம் போதும்! இந்த உடம்பே
இயற்கை உடம்பாக அருள் இன்னமுதம் அளித்து"

2.5.வாய்மை உடம்பு

"மனித்த உடம்பிதனை அழியா வாய்மைஉடம்பாக்கி"

3.பருஉடம்பு-நுண்ணுடம்பு-காரணஉடம்பு

வள்ளற்பெருமான் வேதாந்த தேசிகர் குறட்பாவுக்கு உரை கூறும்போது, பரு உடம்பு (தூலசரீரம்) நுண்ணுடம்பு (சூக்குமசரீரம்) காரண உடம்பு

(காரணசரீரம்) ஆகிய மூவகை உடம்புகள் பற்றி குறிப்பிடுகிறார்கள். பரு உடம்பு புறக்கண்ணுக்குப் புலனாவது ஆனால் நுண்ணுடம்பும் காரண உடம்பும் புறக்கண்ணுக்குப் புலனாகாதவை. ஆயினும் நுண்ணுடம்பு காரண உடம்பு ஆகியவை அகக்கண்ணுக்கு புலனாவது பற்றி திரு.லெட்பீட்டர் மிக விரிவாகக் கூறியிருக்கின்றார். வள்ளற்பெருமானும் அவ்வுடம்புகளை பயிற்சி பெற்ற கண்கள் காண இயலும் என்பதை தெளிவுபடுத்தி இருக்கிறார்கள். வள்ளற்பெருமான் அசுத்தபூத காரியதேகம் என்று பரு உடம்பையும், அவற்றின் காரணங்களாகிய அசுத்த பிரகிருதி அணுக்கள் என்று நுண்ணுடம்பு காரண உடம்புகளையும் குறிப்பிடுகிறார்கள்.

**அசுத்த பூத காரியம் - பருஉடம்பு(தூலசரீரம்)**
**அசுத்த பிரகிருதி - நுண்ணுடம்பு(சூக்குமசரீரம்)**
**காரண உடம்பு(காரணசரீரம்)**

பஞ்சபூதங்கள், கண் மூக்கு முதலிய அறிகருவிகள், கை கால் முதலிய தொழிற்கருவிகள் ஆகியவற்றுடன் விளங்குவது பரு உடம்பு (தூலஉடம்பு)என்றும், மனம் புத்தி பிரகிருத்தியே 'காரண உடம்பு' என்றும் கூறப்படுகிறது. தூல உடம்பை நினைவுநிலையிலும், நுண் உடம்பை கனவு நிலையிலும், காரண உடம்பை துயில் நிலையிலும் அனுபவிக்கிறோம். இவை முறையே சாக்கிரநிலை, சொப்பனநிலை, சுழுத்திநிலை என்றும் கூறப்படுகின்றன.

தியான அனுபவக் காட்சியில், தூல உடம்பு சிவப்பு நிற ஒளியாக தூல உடம்பு அளவுக்கே அனுபவமாகும் என்றும், நுண் உடம்பு வெண்ணிற ஒளியாகக் கட்டைவிரல் அளவினதாக அனுபவமாகும் என்றும், காரண உடம்பு கருப்புநிற ஒளியாய் கட்டைவிரல்நுனி அளவினதாக அனுபவமாகும் என்றும் முக்தானந்தா தெரிவிக்கிறார்.

சுரம், நீர்கோர்வை, சிரங்கு முதலான நோய்கள் பருஉடம்பில் தோன்றும் நோய்கள் - நீரிழிவு குட்டம் வாதம் முதலானவை நுண்ணுடம்பில் தோன்றும் நோய்கள் -நரை திரை பிணி மூப்பு சாக்காடு முதலானவை காரண உடம்பில் தோன்றும் நோய்கள் என்பது சித்தமருத்துவக் கோட்பாடு.

4.**அசுத்த உடம்பு சுத்த உடம்பாகுதல்**

அசுத்த பிரகிருதி அணுக்களும், அவற்றால் ஆக்கப்பட்ட அசுத்த பரு உடம்பு அசுத்த நுண்ணுடம்பு அசுத்த காரண உடம்பு ஆகியவையும், சாகாக்கலை பயிற்சியினால் முறையே சுத்த பிரகிருதி அணுக்களால் ஆகிய சுத்த பரு உடம்பு, சுத்த நுண்ணுடம்பு, சுத்த காரண உடம்பு ஆகியவையாக மாறும். இம்மாற்றங்களைப் பின்வருமாறு குறிக்கலாம்.

அ.அசுத்த பூதகாரிய அசுத்த உடம்பு(தூலசரீரம்) ➔ சுத்த பூத சுத்த உடம்பு (சுத்ததேகம்)

ஆ.அசுத்த நுண்ணுடம்பு (சூக்குமசரீரம்) ➔ சுத்த பூத காரிய காரண உடம்பு

(பிரணவதேகம்)

இ.அசுத்த காரண உடம்பு ➔ சுத்தபூத காரண உடம்பு
(காரணசரீரம்) (ஞானதேகம்)

சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் ஆகியவற்றைப்பற்றி வள்ளற்பெருமான் உபதேசித்திருப்பதை தவத்திரு ஊரன் அடிகள் அட்டவணைப்படுத்திக் காட்டியிருக்கிறார். இதில் இருந்து அவற்றின் கண்ணுக்குப் புலனாகும் தன்மை பற்றி அறிய முடிகிறது.

சுத்ததேகம் - காரிய ரூபம்;
நரை, திரை, பிணி, மூப்பு, மலம்.
ஜலம், வியர்வை, ஆகாரம்,
நித்திரை, தாகம், நிழல்
முதலியன இல்லாமல் விளங்கும்.

பிரணவதேகம் - காரியகாரண ரூபம்;
தேகம் தோன்றும் - பிடிபடாது.

ஞானதேகம் - காரண ரூபம்;
தேகம் தோன்றியும்
தோன்றாமலும் இருக்கும்.

மேற்கண்ட அட்டவணையை மேற்கூறப்பட்ட கருத்துக்களுக்கு இயைந்து கீழ்க்கண்டவாறும் அமைக்கலாம்:-

**சுத்ததேகம் - உருவம்**
**பிரணவதேகம் - உருஅருவம்**
**ஞானதேகம் - அருவம்**

மேலும் வள்ளற்பெருமான் சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் முதலியவற்றை விளக்கில் உள்ள சுடரினை உவமையாக்கி விளக்கிறார்கள். விளக்கின் சுடரைக் காரியம் என்றும், சுடரை அடுத்து நெருங்கிச் சூழ்ந்துள்ள சோபையைக் காரியகாரணம் என்றும், சுடரில் இருந்து எங்கும் பரவி நிற்கும் பிரகாசத்தை காரணம் என்றும் கூறி, இவற்றை முறையே சுத்ததேகம், பிரணவதேகம், ஞானதேகம் ஆகியவற்றிற்கு உவமையாக்கி விளக்கிறார்கள்.

**சுடர் - சுத்ததேகம்**
**சோபை - பிரணவதேகம்**
**பிரகாசம் - ஞானதேகம்**

ஒளியின் உருவநிலையாகிய சுடரை சுத்ததேகத்துடனும், உரு அருவ நிலையாகிய சோபையை பிரணவதேகத்துடனும், அருவ நிலையாகிய பிரகாசத்தை ஞானதேகத்துடனும் ஒப்பிட்டு அவர்கள் விளக்கம் தருவது மிக அற்புதமான அவர்களது விளக்கிக்கூறும் திறனை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது. “ஓம் என்னும் ஓங்காரத்துள்ளே உருஅரு” என்று கூறும் திருமந்திரமும் ஓம்

என்னும் பிரணவமந்திரத்தை உரு அரு நிலையுடன் தொடர்புபடுத்திக் கூறுவது கவனிக்கத்தக்கது.

சுத்ததேகத்தை ஒளி உடம்பு என்றும் வள்ளற்பெருமான் கூறுவதால், மேற்கூறப்பட்ட செய்திகள் எல்லாவற்றையும் தொகுத்து பின்வருமாறு முடிவாகக் கூறலாம்.

| சுத்ததேகம் | பிரணவதேகம் | ஞானதேகம் |
|---|---|---|
| 1.பசி,தாகம், நரை, திரை, பிணி, மூப்பு, மரணம் இல்லாதது. | கண்ணுக்குத் தோன்றும், கையில் பிடிபடாது. | தோன்றியும் தோன்றாமலும் இருக்கும். |
| 2. உருவ ஒளிஉடம்பு | உருஅருவ ஒளிஉடம்பு | அருவ ஒளிஉடம்பு |
| 3.சுடர் போன்றது | சோபை போன்றது | பிரகாசம் போன்றது |

## 5.ஒளிஉடம்பின் உருவ-உருஅருவ-அருவ நிலைகள்

ஒளியின் உருவநிலை உடம்பினை வள்ளற்பெருமான் சுத்ததேகம் என்று கூறுகிறார்கள். சுத்ததேகம்-வியர்வை அழுக்கு மலம் சிறுநீர் முதலிய அசுத்தங்கள் இல்லாமலும், மாயை கன்மம் முதலிய அசுத்தங்கள் இல்லாமலும் விளங்குவதால் அதனை சுத்ததேகம் என்று அழைக்கிறார்கள்.

ஒளியின் உருஅருவநிலை உடம்பினை, பிரணவதேகம் என்று வள்ளற்பெருமான் அழைக்கிறார்கள். ‘ஓம் எனும் ஓங்காரத்துக்குள்ளே உருஅரு’ என்று திருமந்திரம் கூறுகிறது. ‘ஓம்’ என்பதை பிரணவம் என்று கூறுவது வழக்கம்.

கடவுள் அருவம்; படைப்பு உருவம்; இடையில் உருஅருவமாக உள்ளது பிரணவம் என்பது தத்துவநூல்களின் கோட்பாடு. ‘ஓம்’ என்ற சொல் உச்சரிக்கப்படும்போது பரு ஒலியாக-உருவ ஒலியாக உள்ளது. ஆயினும் எழுத்தொலிகள் எதுவும் சேராமல்-வீணை மணி முதலியன உண்டாக்கும் ஒலிபோல் நுண் ஒலியாகவும்-அருவஒலியாகவும்-உள்ளது. இவ்வாறு ‘ஓம்’ என்னும் பிரணவஒலி உருவத்தன்மையையும் அருவத்தன்மையையும் - பருத்தன்மையையும் நுண்தன்மையையும் ஒருங்கே தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. அதனால் ‘ஓம்’ என்ற ஓங்காரத்துக்குள்ளே ‘உருஅரு’ நிலை இருப்பதாக திருமந்திரம் கூறுகிறது என்று கொள்ளலாம்.

உருவத்துக்கும் அருவத்துக்கும் இடையில் உள்ள ‘உருஅரு’ நிலையினை ஓம் என்ற பிரணவம் குறிக்கிறது. அதனால் ‘உருஅரு’ நிலையில் உள்ள ஒளி உடம்பை பிரணவதேகம் என்று வள்ளற்பெருமான் அழைக்கிறார்கள்.

பிரணவதேகம் புறக்கண்களுக்கு நோக்கம் தருவதால் உருவத் தன்மையினையும், தோற்றம் தந்தாலும் கையில் பிடிபடாத தன்மையுடன் விளங்குவதால் அருவத்தன்மையினையும் பெற்று, உருவமும் அருவமும் சேர்ந்த உருஅருவ உடம்பாக விளங்குகிறது. அதனால்தான் ஓம் என்னும் பிரணவத்தை

உவமையாக்கி ஒளியின் உருஅருவ நிலையில் விளங்கும் உடம்பினை வள்ளற்பெருமான் 'பிரணவதேகம்' என்று கூறுகிறார்கள்.

ஞானதேகம் ஒளி உடம்பின் அருவநிலை, இது ஆகாயம் போல் புலன்களுக்கு எட்டாமல், அறிவு வடிவாய் எங்கும் வியாபித்து, அறிவுக்கு மட்டுமே புலனாகும் தன்மையில் விலங்க வல்லது.

## 5.1.ஒளிஉடம்பு

ஒளிஉடம்பு என்று வள்ளற்பெருமான் கூறுவதில், ஒளி என்பது எந்த ஒளியை குறிக்கிறது என்பதையும் சிந்திக்க வேண்டும்.

**"கற்பூரம் கொணர்ந்திடுக தனித்தோழி! எனது**
**கணவர்வருதருணமிது! கண்ணாறு கழிப்பாம்!**
**எற்பூத நிலைஅவர்தம் திருவடித்தாமரைக் கீழ்**
**இருப்பதடி! கீழ்இருப்பதுஎன்று நினையேல் காண்!**
**பற்பூத நிலைகடந்து நாதநிலைக்கு அப்பால்**
**பரநாத நிலையதன்மேல் விளங்குகின்றதறிநீ"**

என்ற பாடலில் வள்ளற்பெருமான் எற்பூதம்-எல்பூதம்-ஒளிப்பூதம்-கீழ் இருப்பதாகிய சூரியன் முதலியவற்றிலிருந்து கிடைக்கும் ஒளிப்பூதம் அன்று என்றும், அது பல பூதங்களையும் கடந்த பரதநாதநிலையின் மேலும்-இறைவனின் திருவடிகளின் கீழும் விளங்குகின்றது என்றும் கூறுகின்றார்கள். பூதங்கள் பொறிகள் புலன்கள் மனம் முதலான அந்தக்கரணங்கள்-முதலானவற்றைக் கடந்து-நாதத்தையும் கடந்து-பரநாதம் விளங்குகிறது என்றும் அதையும், கடந்து ஒளிப்பூதம் விளங்குகின்றது என்றும் வள்ளற்பெருமான் கூறுகின்றார்கள்.

**"தத்துவ நிலைகள் தனித்தனி ஏறித்**
**தனிப்பரநாதமாம் தலத்தே**
**ஒத்துஅதன் மயமாய் நின்னைநீயின்றி**
**உற்றிடல் உயிர் அனுபவம்"**

**"தனிப்பர நாதவெளியின் மேல்நினது**
**தன்மயம் தன்மயமாக்கி**
**பனிப்பிலா தென்றும்உள்ளதாய் விளங்கி**
**பரம்பரத்து உட்புறமாகி**
**இனிப்புறவொன்றும் இயம்புறா இயல்பாய்**
**இருந்ததே அருளனுபவம்"**

மேற்கண்ட பாடல்களில் இருந்து, பூதங்களைவிட பொறிகள் நுண்ணியவை-பொறிகளைக் காட்டிலும் புலன்கள் நுண்ணியவை. புலன்களிலும் மனம் முதலான அந்தக் கரணங்கள் நுண்ணியவை என்பது பெறப்படுகிறது. இவ்வரிசையில் மிகவும் நுண்ணியதாக அமைந்துள்ளது பரநாதம். இதனிலும் நுண்ணியதாய் 'பரம்பரம்' என்ற நிலை உள்ளது. இதன் உள்ளே 'அருளனுபவம்' என்ற நிலை அமைந்துள்ளது என்றும் புலனாகிறது. அதனால் மேற்கூறப்பட்ட அனைத்திலும் 'அருள்' மிகவும் நுண்ணியது என்பதை அறியலாம்.

மேலும் பரநாத முடிவில் ‘என்வணச் சோதிக்கொடி’ யாகிய உயிரனுபவம் (என்வணம்-உயிர்வணம், உயிர்அனுபவம்) உள்ளது என்றும், அதன் மேல் திருவடி உள்ளது என்றும் வள்ளற்பெருமான் கூறுகிறார்கள்.

**“என்வணச் சோதிக்கொடி பரநாதாந்**
**தத்திலே இலங்கியது அதன்மேல்**
**தன்வணம் மணக்கும் ஒளிமலராகத்**
**தழுவினன் திருவடி நிலையே”**

பரநாதத்திற்கும் திருவடிக்கும் இடைப்பட்ட பகுதியில்-உயிர் அனுபவம்-சோதிக்கொடி-அருள் அனுபவம் பெறும் இடம் ஆகியவை உள்ளன. மேற்கூறப்பட்ட செய்திகள் யாவற்றையும் தொகுத்து பின்வருமாறு கூறலாம்:-



தத்துவங்கள் என்பவை உயிருக்கு உதவியாக அமைந்த கருவிகள். அவை பூதங்கள், பொறிகள், புலன்கள் மனம் முதலியன. இவை பூதங்கள் முதல் மேலும் மேலும் சூக்குமமாகின்றன-நுண்பொருளாகின்றன. பரநாதம் மிகவும் நுண்ணிய பொருளாய் விளங்கும் என்பதை முன்னரே கண்டோம். பரநாதத்திலும் நுண்ணியது உயிர்; உயிரினும் நுண்ணியது பரம்பரம்; பரம்பரத்துக்கு மேலும் திருவடிக்குக் கீழும் விளங்குகிறது அருள் அனுபவத்தைத் தரும் இடம். இந்த இடத்தில்தான் எற்பூதம்-ஒளிப்பூதம் விளங்குகிறது என்பதையே வள்ளற்பெருமான்.

> **"எற்பூத நிலை அவர்தம் திருவடித் தாமரைக்கீழ்**
> **இருப்பதடி! கீழ் இருப்பது என்று நினையேல் காண்!**
> **பற்பூத நிலைகடந்து நாதநிலைக்கு அப்பால்**
> **பரநாதநிலையதன் மேல் விளங்குகின்றது அறிநீ!"**

என்று கூறி இருக்கிறார்கள் என்பதை உய்த்துணர வேண்டும். என்றால் 'ஒளி' என்று பொருள்படும். ஆதலால் எற்பூதம் என்பதை ஒளிப்பூதம் என்றே கொள்ள வேண்டும்.

அளவு சொல்ல முடியாத மீநுண்மை வாய்ந்த அருள் ஒளியே திரண்டு-பருமை அடைந்து-எற்பூதமாக-ஒளிப்பூதமாக-விளங்குகிறது. இந்த ஒளிப்பூதத்தின் உருவநிலையே காரியமாகிய சுத்ததேகம் (உருவ ஒளிஉடம்பு)-உரு அருவ நிலையே காரியகாரணமாகிய பிரணவதேகம் (உருஅருவஒளிஉடம்பு)-அருவ நிலையே காரணமாகிய ஞானதேகம் (அருவ ஒளிஉடம்பு) என்று கருத வேண்டும். பஞ்சபூதம் தொடங்கி பரநாதம் வரையில் உள்ள கருவிகள் அனைத்தும் மாயையிலிருந்து தோன்றியவை. பரநாத அந்தத்தில் உள்ள உயிர் (ஆன்மா) மாயையைக் கடந்து விளங்குகிறது. உயிரையும் கடந்த நுண்வெளியாகிய அருள்வெளியில் ஒளிப் பூதமாகிய 'எற்பூதம்' விளங்குகிறது.

## <u>6.ஒளிஉடம்பின் பெருமைகள்</u>

மாயையின் தொடர்பு இல்லாத ஒளிப்பூதத்தின் திரண்ட வடிவமே சுத்ததேகம். அசுத்த பிரகிருதியில் இருந்து-அசுத்த மாயையில் இருந்து-உண்டான அசுத்தபூத காரிய அசுத்த உடம்பு, பரநாதத்தைக் கடந்து விளங்கும் அருள் ஒளி பூதஉடம்பாக மாற்றம் அடைகிறது என்பதே வள்ளற்பெருமான் வலியுறுத்தும் கருத்து என்பதையும் இங்கு நினைவுகூர்தல் வேண்டும். அதனாலேயே மாயையிலிருந்து உண்டான எதனாலும் - கல் மண் இடி மின்னல் ஒளி ஆயுதங்கள் முதலிய எதனாலும்-பாதிக்கப்படாமல் சுத்ததேகம் விளங்கும் என்று வள்ளற்பெருமான் தெரிவிக்கிறார்கள். சுத்ததேகம் தொடர்பாக அவர்கள் 'ஜீவகாருணிய ஒழுக்கம்' நூலில் கூறும் அரிய செய்திகள் பின்வருமாறு:-

### <u>சுத்ததேகம்-</u>

- ❖ கல், மண், முதலியவற்றால் தாக்கப்படுவதில்லை.
- ❖ நீரில் அழுந்தாது.
- ❖ நெருப்பில் சுடப்பட்டாலும் சூடும் வடுவும் உண்டாகா.
- ❖ காற்றால் தீண்டப்படுவதில்லை, கலக்கப்படுவது இல்லை.
- ❖ ஆதாரத்திலும் உலாவும்-நிராதாரத்திலும் உலாவும்.

- ❖ காலத்தால் தடைபடாது, நியதியான ஊழால் வரைபடாது.
- ❖ ஆகாரம் நித்திரை பயம் முதலியவற்றால் தடைபடாது.
- ❖ நிழல் வியர்வை அழுக்கு நரை திரை மூப்பு இறப்பு முதலியன இன்றி விளங்கும்.
- ❖ பனி மழை இடி வெயில் முதலியவற்றால் பாதிக்கப்படாது.
- ❖ மனிதர்களாலும் மிருகம் பறவை ஊர்வன தாவரம் முதலியவற்றாலும் பாதிக்கப்படாது.
- ❖ வாள் கத்தி முதலியவற்றால் சிதைக்கப்படாது.

**<u>சுத்ததேகிகளின்:-</u>**

- ❖ கண்களை சுவர் மலை முதலியன மறைப்பன அல்ல-அவை இருந்த இடத்தில் இருந்தே எவ்விடத்திலும் உள்ள பொருள்களையும் கண்டறியும்.
- ❖ செவிகள் எவ்விடத்திலிருந்து பேசினும் இருந்த இடத்திலிருந்தே கேட்டறியும்.
- ❖ கைகள் இருந்த இடத்திலிருந்தே எவ்விடத்தில் இருக்கின்றவர்களுக்கும் கொடுக்கும்.
- ❖ கால்கள் இருந்த இடத்திலிருந்தே எவ்விடத்திற்கும் நடக்கும்.
- ❖ வாய் எவ்விடத்தில் இருக்கின்ற எவ்வெவர்களோடும் இருந்த இடத்தில் இருந்தே பேசும்.
- ❖ மனம் எல்லா உயிர்களின் எல்லா நிலைகளையும் ஒரு நிமிடத்தில் ஒருங்கே நினைத்து விசாரித்து நிச்சயித்துக் கொள்ளும்.
- ❖ அறிவு எல்லா அண்டங்களையும் எல்லா உயிர்களையும் எல்லா பண்புகளையும் எல்லாப் பயன்களையும் ஒருங்கே ஒரு நிமிடத்தில் சுட்டி அறியும்.

**<u>சுத்ததேகம் உடையோர்-</u>**

- ❖ படைத்தல் முதல் ஐந்தொழில் செய்தல், எல்லாம் செய்ய வல்ல திறன் முதலான சித்திகளுடன் பேரின்ப மயமாய் கடவுளே தாமாய்-தாமே கடவுளாய் வாழ்வர்.

## <u>ஆ. சாகாஉடம்பிற்கும் பேரின்பத்திற்கும் உள்ள தொடர்பு</u>

சாகாக்கலை உலகியல் இன்பங்களை நுகர்வதற்காக நீண்ட ஆயுளுடன் வாழ உதவும் கலை அன்று. உலகியல் இன்பங்களின் அளவுக்குமீறி ஈடுபடுவது மரணத்தை விரைவில் உண்டாக்கும் என்பது வள்ளற்பெருமான் கருத்து.

**“சோற்றாசை யொடுகாமச் சேற்றாசைப்**
**படுவாரை துணிந்து கொல்லக்**
**கூற்றாசைப்படும்”.**

என்று வள்ளற்பெருமான் கூறுவதைச் சிந்திக்க வேண்டும்.

**"உலகியல் சிறிதும் உளம்பிடி யாவகை**
**அலகில் பேர்அருளால் அறிவது விளக்கிச்**
**சிறுநெறி செல்லாத் திறன்அளித் தழியா (து)**
**உறுநெறி உணர்ச்சிதந் தொளியுறப் புரிந்து**
**சாகாக் கல்வியின் தரமெலாம் உணர்த்திச்**
**சாகா வரத்தையும்தந்து"**

என்று வள்ளற்பெருமான் கூறுவதில் இருந்து, சாகாநிலை உலகியல் சிறுநெறியுடன் - சிற்றின்ப வாழ்வுடன் - தொடர்புடையது அன்று எனத் தெளியலாம்.

**"கற்றேன் சிற்றம்பலக் கல்வியை!**
**கற்றுகருணைநெறி**
**உற்றேன் எக்காலமும் சாகாமல்**
**ஓங்கும் ஒளிவடிவம்**
**பெற்றேன்! உயர்நிலை பெற்றேன் உலகில்**
**பிறநிலையைப்**
**பற்றேன்! சிவானந்தப் பற்றேஎன் பற்றெனப்**
**பற்றினனே!"**

என்ற பாடலில் வள்ளற்பெருமான் சாகாக்கல்வியாகிய சிற்றம்பலக் கல்வியைக் கற்றதாகவும், அதனால் எக்காலமும் சாகாமல் ஓங்கும் ஒளிவடிவம் பெற்றதாகவும், தாம் சிவானந்தப் பற்றேயன்றி உலகில் பிறநிலையைப் பற்றமாட்டார்கள் என்றும் தெரிவிப்பதை ஊன்றிச் சிந்தித்தால் சாகாமல் விளங்கும் ஒளிஉடம்பு பேரின்ப நுகர்ச்சிக்கே உரியது என்பது தெளிவாகும்.

**"சரியைநிலை நான்கும்ஒரு கிரியைநிலை நான்கும்**
**தனியோக நிலைநான்கும் தனித்தனிக் கண்டறிந்தேன்**
**உரியசிவ ஞானநிலை நான்கும்அருள் ஒளியால்**
**ஒன்றொன்றா அறிந்தேன் மேல்உண்மைநிலைப் பெற்றேன்**
**அரியசிவ சித்தாந்தம் வேதாந்தம் முதலாம்**
**ஆறந்த நிலைஅறிந்தேன் அப்பால்நின் றோங்கும்**
**பெரியசிவ அனுபவுத்தால் சமரச சன்மார்க்கம்**
**பெற்றேன் இங்கிறவாமை உற்றேன் காண்தோழி"**

என்ற பாடலில் வள்ளற்பெருமான், சரியையில் சரியை-சரியையில் கிரியை-சரியையில் யோகம்-சரியையில் ஞானம் முதலான படிகள் அனைத்தையும் கடந்து, வேதாந்தம் சித்தாந்தம் கலாந்தம் யோகாந்தம் போதாந்தம் நாதாந்தம் முதலான ஆறுஅந்தங்களையும் கடந்து விளங்கும் 'பெரிய சிவ அனுபவத்தால்' சமரச சன்மார்க்கம் பெற்று இறவா நிலையினை எய்தியதாகக் குறிப்பிடுகின்றார்கள். மேலும்,

**"வான்பதிக்கும் கிடைப்பறியார் சிற்சபையில் நடிக்கும்**
**மணவாளர் எனைப்புணர்ந்த புறப்புணர்ச்சித் தருணம்**
**தான்பதித்த பொன்வடிவம் தனைஅடைந்துக் களித்தேன்"**

என்று கூறி கடவுள் தம்மைப் புணர்ந்தபோது பொன்வடிவம் அடைந்ததாகவும் கூறுகின்றார்கள்.

**“தாயினும் பேர் அருளுடையார் என்னை அகம்புணர்ந்தார்
புறம்புணர்ந்தார் புறப்புணர்ச்சித் தருணம்
தூயஒளி பெற்றழியா தோங்கு வடிவானேன்”**

என்று கூறி இறைவனுடன் கலக்கும்போது, அழியாது ஓங்கும் ஒளிஉடம்பு கிடைத்தது பற்றி தெளிவுப்படுத்துகிறார்கள்.

‘**ஜீவகாருணிய ஒழுக்கம்**’ உரைநடை நூலில் பூரண இயற்கை உண்மை வடிவினராகிய கடவுளின் பூரண இயற்கை இன்பத்தைப் பெற்று, எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்வளவும் தடைபடாமல் அனுபவிக்கப்படுகின்ற ஒப்பற்ற பெரிய இன்பத்தையே ‘பேரின்பம்’ என்று வள்ளற்பெருமான் வரையறை செய்கிறார்கள். இத்தகைய பேரின்ப லாபத்தை அடைந்தவர்களுடைய பெருமையை விளக்கும்போது, “பேரின்ப லாபத்தை அடைந்தவர்கள்-தோல் நரம்பு என்பு தசை இரத்தம் முதலிய அசுத்த பூத காரியங்களும், அவற்றின் காரணங்களாகிய அசுத்த பிரகிருதி அணுக்களும் ஆகிய தேகத்தை மாற்றி, மாற்று இவ்வளவு என்று அறியப்படாத உயர்ந்த பொன்னாகிய சுத்தபூத காரிய சுத்ததேகத்தையும், பொன்வடிவாகத் தோன்றுதல் மாத்திரமே அன்றி ஆகாயம் போல் பரிசிக்கப்படாத சுத்தபூத காரண பிரணவதேகத்தையும், தோன்றப்படுதலும் இன்றி ஆகாயம் போல் விளங்குகின்ற ஞானதேகத்தையும் பெற்றவர்களாய் இருப்பார்கள்” என்று கூறுகிறார்கள். இவ்விளக்கத்தாலும் முன்பு எடுத்துக்காட்டப்பட்ட பாடல்களாலும் சாகாக்கலை அனுபவ உடம்புகள் பேரின்ப நுகர்ச்சிக்கே உரியவை என்பது பெறப்படுகிறது.

**<u>இ.சாகாக்கலையும் அனுபவமாகும் உடம்பின் பொதுத்தன்மைகள்</u>**

சாகாக்கலையில் அனுபவமாகும் உடம்பு பற்றி வள்ளற்பெருமான் தெரிவித்திருக்கும் கருத்துகளைத் தொகுத்தும் வகுத்தும் சாகாக்கலை அனுபவ உடம்புகளின் இயல்புகளாக பின்வருவனவற்றைக் கூறலாம்:-

1.சாகாக்கலையினைப் பயின்று பழகுவதால் அசுத்த உடம்பு சுத்த உடம்பாகிறது.

2.சுத்த உடம்பின் உருவநிலை சுத்ததேகம் என்றும், உரு அருவ நிலை பிரணவதேகம் என்றும், அருவநிலை ஞானதேகம் என்றும் கூறப்படும்.

3.சுத்ததேகம் ஒளிஉடம்பு பொன்உடம்பு இயற்கைஉடம்பு வாய்மைஉடம்பு என்ற பெயர்களாலும் அழைக்கப்படும்.

4.சுத்ததேகம் கண்ணுக்குத் தோன்றும்; பிரணவதேகம் கண்ணுக்குத் தோன்றும்-ஆனால் தொடுவதற்கும் பிடிப்பதற்கும் கூடாது; ஞானதேகம் ஆகாயம் போல் கண்ணுக்குத் தோன்றியும் தோன்றாமலும் விளங்கும்.

5.சுத்ததேகத்தை கல் முதலியவற்றாலும், நீர் நெருப்பு முதலியவற்றாலும் ஆயுதங்கள் பனி மழை இடி வெயில் முதலியவற்றாலும் அழிக்க இயலாது.

6.சுத்ததேகத்திற்கு அழுக்கு, வியர்வை, நரை, திரை, பிணி, மூப்பு, இறப்பு முதலியன இல்லை.

7.சுத்ததேகம் உடையோர், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் செய்தல் முதலான எல்லாம் செய்ய வல்லவராய் இருப்பர்.

8.சுத்ததேகம் உடையோர் தடையற்ற பேரின்பத்தில் வாழ்வர்.

<u>1:1 சாகா உடம்பின் பொதுத்தன்மைகள்-திருஅருட்பாவில் அகச்சான்றுகள்</u>

வள்ளற்பெருமான் தாம் சாகாஉடம்பு பெற்றது பற்றி கடல் மழை திறந்ததுப்போல் பாடல்கள் பலவற்றை அருளி இருக்கிறார்கள். இத் திருட்பாக்களில் சாகாஉடம்பின் தன்மைகளையும் விவரித்திருக்கிறார்கள்.

<u>2.நரை திரை பிணி மூப்பு இறப்பு இல்லாத உடம்பு</u>

**“திரையற்ற காட்சிஅளித்தின் னமுதத்தெளிவருளி**
**நரையற்று மூப்பற்று இறப்பற்று இருக்கவும் நண்ணினனே”**

என்றும்,

**“புரையும் அற்றது குறையும் அற்றது புலையும் அற்றது புன்மைசேர்**
**திரையும் அற்றது நரையும் அற்றதுதிரையும் அற்றுவிழுந்தே”**

என்றும்,

**“இச்சமயம் எழுந்தருளி இறவாத வரமும்**
**எல்லாம்செய் வல்லசித்தன் இயற்கையும் தந்தனையே”**

என்றும்,

**“எமன்எனும் அவன்இனி இலை இலை மகனே**
**எய்ப்பறநீ வாழ்கஎன்று இயம்பியஎன் அரசே”**

என்றும்,

**“என்மார்க்கம் எனக்களித்து என்னையும் மேல் ஏற்றி**
**இறவாத பெருநலம் ஈந்தமெய்ப் பொருளே”**

என்றும்,

**“எருதாகத் திரிந்தேனுக்கு இகபரத் அளித்தே**

இறவாத வரம் தந்து அருளிய ஒளியே”

என்றும்,

“எண்ணியவாறே எனக்கருள் பாதம்
இறவாநிலையில் இருத்திய பாதம்”

என்றும்,

“இசையாமல் போனவர் எல்லாம் நாண
இறவாப் பெருவரம் யான் பெற்றுக் கொண்டேன்”

என்றும்,

“இறவாமை ஈந்தான் என்று ஊதாது சங்கே
எண்ணம் பலித்தது என்று ஊதாது சங்கே”

என்றும்,

“எந்நாளும் இவ்வுடம் பேஇற வாத இயற்கைபெற்றேன்
என்னாசை அப்பனைக் கண்டு கொண் டேன்என் இதயத்திலே”

என்றும்,

“பெற்றேன்என்றும் இறவாமை பேதம்தவிர்த்தே இறைவன்எனை
உற்றேகலந்தான் நானவனை உற்றேகலந்தேன் ஒன்றானேம்”

என்றும்,

“பெரியசிவ அனுபவத்தால் சமரசசன் மார்க்கம்
பெற்றேனிங் கிறவாமை உற்றேன்காண் தோழி”

என்றும்,

“சாவாத வரம் கொடுத்துத் தனக்கடிமை பணித்தான்
தனித்தசிவ காமவல்லிக்கு இனித்தநடத் தவனே”

என்றும்,

“சாகாத வரம்தந்திங் கெனைக்காத்த அரசே
தனிநட ராஜஎன் சற்குரு மணியே”

என்றும்,

“சாகாத வரம்எனக்கே தந்ததனித் தெய்வம்
சன்மார்க்க சபையில் எனைத்தனித்து வைத்ததெய்வம்”

என்றும்,

“சாகாவரம் தந்த தாரகப் பாதம்
சச்சிதா னந்த சதோதய பாதம்”

என்றும்,

“சன்மார்க்க நெறிவைத்தீர் ஆடவாரீர்
சாகாத வரந்தந்தீர் ஆடவாரீர்”

என்றும்,

“சாகா வரந் தந்தஜோதி - என்னைத்
தானாக்கிக் கொண்டதோர் சத்தியஜோதி”

என்றும்,

“சாவாவரமும் சித்திஎலாம் தழைத்தநிலையும் சன்மார்க்கம்
சங்கமதிப்பும் பெற்றேன்”

என்றும்,

“சாவாதவரம் எனக்குத் தந்தபெரும் தகையே
தயாநிதியே சிற்சபையில் தனித்தபெரும் பதியே”

என்றும்,

“கூகாஎனக் கூடி எடாத கொடிய னேற்கே
சாகாவரம் தந்த தயாநிதித் தந்தையே”

என்றும்,

“தண்ணேர் மதியின் அமுதளித்துச்
சாகாவரந் தந்தாட்கொண்ட
கண்ணே மணியே நின்தனக்கு
கைம்மா றேது கொடுப்பேன்”

என்றும்,

“சாதல் எனும்ஓர் சங்கடத்தைத்
தவிர்த்தென் னுயிரில் தான்கலந்த
காதல் அரசே நின் றனுக்குக்
கைம்மாறேது கொடுப்பேனே”

என்றும்,

“தந்தையைக் கண்டேன் நான் சாகா வரம்பெற்றேன்

**சிந்தை களித்தேன் என்று உந்தீபற**
**சித்தெலாம் வல்லேன் என்று உந்தீபற”**

என்றும்,

**“தப்பாலே சகத்தவர் சாவே துணிந்தார்**
**தாமுளம் நாணநான்சாதலைத் தவிர்த்தே**
**எப்பாலும் எக்காலும் இருத்தலே பெற்றேன்”**

என்றும்,

**“கூகாஎன அடுத்தோர் கூடிஅழாத வண்ணம்**
**சாகாவரம் எனக்கே தந்திட்டான் -ஏகாஅன்**
**ஏகா எனமறைகள் ஏத்துஞ்சிற் றம்பலத்தான்**
**மாகா தலனா மகிழ்ந்து”**

என்றும் வள்ளற்பெருமான் தாம் நரை திரை மூப்பு சாக்காடு நீங்க பெற்றமையை தேனினும் இனிய தெள்ளிய அருட்பாக்களாக பேருவகையோடு தெரிவித்திருக்கிறார்கள்.

## 1.3. சுத்தஉடம்பு பொன்உடம்பு ஒளிஉடம்பு

சாகாக்கலையில் தமக்கு அனுபவமான சாகா உடம்பினை வள்ளற்பெருமான் சுத்தஉடம்பு பொன்உடம்பு ஒளிஉடம்பு என்று குறிப்பிடுகிறார்கள். இதனை,

**“எய்யேன் இனி வெம்மலக் கூட்டில் இருந்தென்உள்ளம்**
**நையேன் சுத்தநல் உடம்பு எய்தினன் நானிலத்தே”**

**“வன்பிலா மனத்தே வயங்கொளி என்கோ!**
**மன்னும் அம்பலத்தர சென்கோ!**
**என்புரி அழியாப் பொன்புரி ஆக்கி**
**என்னை ஆண்டருளிய நினையே”**

**(பொன்புரி-பொன்உடம்பு)**

**“திரைந்த உடல் விரைந்துடனே பொன்உடம்பு ஆகித்**
**திகழ்ந்தழியா தோங்க அருள் சித்தே! மெய்ச் சத்தே!”**

**“.........................................................ஏக்கமெலாம்**
**நீங்கினேன் எண்ணம் நிரம்பினேன் பொன்வடிவம்**
**தாங்கினேன் சத்தியமாத் தான்”**

**“பொன்உருத் தந்தான் என்று ஊதாதுசங்கே**
**பொற்சபை அப்பன் என்று ஊதூதுசங்கே”**

**“திரைந்து நெகிழ்ந்த தோலுடம்பும்**

செழும்பொன் உடம்பாய்த் திகழ்ந்தேனே"

"ஊன்செய்த தேகம் ஒளிவடிவமாக நின்று
ஓங்குகின்றேன்"

முதலான அருட்பாக்களில் வள்ளற்பெருமான் தெரிவிக்கிறார்கள்.

## 1.4.எதனாலும் அழிக்க முடியாத உடம்பு

"மருள்வடிவே எஞ்ஞான்றும் எவ்விடத்தும்
எதனாலும் மாய்விலாத
அருள்வடிவாய்இம்மையிலேஅடைந்திடப்
பெற்றாடுகின்றேன் அந்தோ அந்தோ"

"காற்றாலே புவியாலே ககனமத னாலே
கனலாலே புனலாலே கதிராதி யாலே
கூற்றாலே பிணியாலே கொலைக்கருவி யாலே
கோளாலே பிறஇயற்றும் கொடுஞ்செயல்க ளாலே
வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்
மெய்அளிக்க வேண்டும் என்றேன் விரைந்தளித்தான் எனக்கே
ஏற்றாலே இழிவெனநீர் நினையாதீர் உலகீர்
எந்தை அருட்பெருஞ்ஜோதி இறைவனைச் சார்வீரே"

"ஆராலும் அறிந்துகொளற்கு அரியபெரும் பொருளே
அம்மே என்அப்பா என்ஐயா என்அரசே
காராலும் கனலாலும் காற்றாலும் ககனக்
கலையாலும் கதிராலும் கடலாலும் கடல்சூழ்
பாராலும் படையாலும் பிறவாலும் தடுக்கப்
படுதலிலாத் தனிவடிவம் எனக்களித்த பதியே"

முதலான அருட்பாக்களில் வள்ளற்பெருமான் தாம் பெற்ற சுத்த உடம்பு, கல், மண், நீர், நெருப்பு, காற்று, கதிரவன் முதலான கோள்கள், ககனக்கலை (இடி), கொலைக்கருவிகள், மற்ற உயிர்கள் இயற்றும் கொடுஞ்செயல்கள், பிணி முதலான எதனாலும் எக்காலத்தும் அழிக்கப்பட முடியாதது என்றும் தெரிவிக்கிறார்கள்.

## 1.5. ஐந்தொழில் செய்ய வல்லபமும் எல்லாம் செயும் திறமும்

"ஓதஉலவா ஒருதோழன் தொண்டருளன்

**சாதல் ஒழித் தென்னைத் தானாக்கிப்-பூதலத்தில்**
**ஐந்தொழில் செய்என்றே அருட்சோதிக் கோல் அளித்தான்**
**வெந்தொழில் போய்நீங்க விரைந்து"**

என்று வள்ளற்பெருமான் கூறுவதால் அவர்கள் சாகாஉடம்பு பெற்றதுடன் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் முதலான ஐந்தொழில்களையும் செய்யும் வல்லமையினையும் பெற்றிருந்தார்கள் என்பதை அறிகிறோம்.

**"அருள்நெறிசேர் மலஉடம்பை அழியாத விமல**
**வடிவாக்கி எல்லாம்செய் வல்லசித்தாம் பொருளைத்**
**தருணமது தெரிந்தெனக்குத் தானேவந் தளித்த**
**தயாநிதியை எனைஈன்ற தந்தையை என்தாயை**
**கருணைஅருட் பெருஞ்ஜோதிக்கடவுளை என்கண்ணால்**
**கண்டுகொண்டேன் கலந்துக்கொண்டேன் களித்தே"**

**"புலைசார் மனத்துச் சிறியேன்தன்**
**குற்றம் அனைத்தும் பொறுத்தருளிப்**
**பொன்றா வடிவ கொடுத்தெல்லாம்**
**புரிவல் வபந்திந்தஅருட்சோதி**
**நிலைசார் இறைமை அளித்தனைநான்**
**பொதுவில் ஞான நிதிஎனும்**
**நிருத்தம் புரிகின் றேன்புரிதல்**
**நீயோ நானோ நிகழ்ந்தாயே"**

முதலான பாடல்களால் வள்ளற்பெருமான் சாகாஉடம்பு பெற்றதுடன், இறைவனைப் போலவே எல்லாம் செய்யவல்ல பேராற்றலுடன் இறைவனுடன் கலந்து-இறைவனே தாமாகவும்-தாமே இறைவனாகவும்-பேதமின்றி விளங்கும் பேறுபெற்றுத் திகழ்கிறார்கள் என்பதையும் அறிய முடிகின்றது.

மேலே எடுத்துக்காட்டப்பட்டுள்ள திருஅருட்பாக்களில் வள்ளற்பெருமான் சாகாக்கலை அனுபவ உடம்புகள் பற்றி சிறிதும் முரண்பாடு இல்லாத கோட்பாடுகளை வெளிப்படுத்தி இருக்கிறார்கள். அவர்கள் வெளிப்படுத்தி இருக்கும் கோட்பாடுகள் அனைத்தும் சாகாக்கலையில் தேர்ந்து சாகாநிலையினை பெற்ற அவர்களது உண்மை அனுபவத்தால் வெளிப்பட்டவை என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

## அடிக்குறிப்புகள்.

1. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம்453
2. மேலது, பக்கம் 307
3. மேலது, பக்கம் 77
4. கட்டளைத் திரட்டு பக்கம் 47
5. மேலது, பக்கம் 8,9
6. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 317
7. மேலது, பக்கம் 335
8. மேலது, பக்கம் 297

9. திருஅருட்பா, ஆறாம் திருமுறை, 4781
10. திருஅருட்பா, உரைநடைப்பகுதி, பக்கம் 51
11. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4715
12. மேலது, பாடல் 3849
13. மேலது, பாடல் 3859
14. மேலது, பாடல் 3860
15. மேலது, பாடல் 3866
16. மேலது, பாடல் 3869
17. மேலது, பாடல் 4020
18. மேலது, பாடல் 4096
19. மேலது, பாடல் 4615 (வரிகள் 1489-90)
20. மேலது, பாடல் 4832
21. மேலது, பாடல் 5273
22. மேலது, பாடல் 5482
23. மேலது, பாடல் 4615 (வரிகள் 13-14)
24. மேலது, பாடல் 4745
25. மேலது, பாடல் 4675
26. மேலது, பாடல் 4823
27. மேலது, பாடல் 3764
28. மேலது, பாடல் 5816
29. திருஅருட்பா உரைநடைப்பகுதி பக்கம் 463
30. C.W.Leadbeater, Man-Visible and Invisible, page10
31. திருஅருட்பா, உரைநடைப்பகுதி பக்கம் 509
32. கட்டளைத்திரட்டு, மே.கா.நூ., பக்கம் 313
33. Swami Muktananda, Play of Consciousness, page 10
34. மு.சௌரிராஜன், சரபேந்திரர் சித்த மருத்துவச்சுடர், பக்கம் 151
35. ஊரன் அடிகள், வள்ளலார் மறைந்தது எப்படி, பக்கம் 43
36. திருஅருட்பா உரைநடைப்பகுதி பக்கம் 317
37. திருமந்திரம் மூவாயிரம், பாடல் 2627
38. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5728
39. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள், பாடல் 3228
40. மேலது, பாடல் 3229
41. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 3928
42. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 77-79
43. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5606
44. மேலது, பாடல் 4615(வரிகள் 1563-1568)
45. மேலது, பாடல் 4745
46. மேலது, பாடல் 5806
47. மேலது, பாடல் 5807
48. மேலது, பாடல் 5812
49. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 76-77
50. மேலது, பக்கம் 77
51. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4740
52. மேலது, பாடல் 5435
53. மேலது, பாடல் 4638
54. மேலது, பாடல் 3702

55. மேலது, பாடல் 3703
56. மேலது, பாடல் 3708
57. மேலது, பாடல் 4333
58. மேலது, பாடல் 4953
59. மேலது, பாடல் 5278
60. மேலது, பாடல் 5412
61. மேலது, பாடல் 5486
62. மேலது, பாடல் 5806
63. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள், பாடல் 3208
64. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 3709
65. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 3910
66. மேலது, பாடல் 4328
67. மேலது, பாடல் 4464
68. மேலது, பாடல் 4583
69. மேலது, பாடல் 4631
70. மேலது, பாடல் 4635
71. மேலது, பாடல் 4707
72. மேலது, பாடல் 4791
73. மேலது, பாடல் 4796
74. மேலது, பாடல் 4903
75. மேலது, பாடல் 4956
76. மேலது, பாடல் 5510
77. மேலது, பாடல் 4715
78. மேலது, பாடல் 4020
79. மேலது, பாடல் 4096
80. மேலது, பாடல் 4832
81. மேலது, பாடல் 5273
82. மேலது, பாடல் 5482
83. மேலது, பாடல் 4675
84. மேலது, பாடல் 4516
85. மேலது, பாடல் 5450
86. மேலது, பாடல் 4636
87. மேலது, பாடல் 4828
88. மேலது, பாடல் 4013
89. மேலது, பாடல் 4628

## இயல் ஐந்து

## வள்ளற்பெருமானின் அருள்நிலையங்களில் சாகாக்கலை

வள்ளற்பெருமான் தாம் சாகாஉடம்பு பெற்றமை பற்றியும்-சாகாமல் விளங்கும் உடம்புகளாகிய சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் ஆகியன பற்றியும்-பாடல்கள் வாயிலாகவும், உரைநடைகள் வாயிலாகவும் அற்புதமான பல செய்திகளைத் தெரிவித்திருப்பதை திருஅருட்பாவைக் கண்ணுறும் எவரும் அறியலாம்.

வள்ளற்பெருமான் சென்னையில் வாழ்ந்திருந்த காலங்களில்-1858 ஆம் ஆண்டுக்கு முன்னால், -ஏறத்தாழ அவர்களது முப்பத்து ஐந்து வயதுக்கு முன்னால்-பாடிய பாடல்களிலேயே, அவர்கள் சாகாஉடம்பு பெற்றதைப்பற்றி ஒருவாறு குறிப்பிட்டிருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக பின்வரும் பாடல்களை குறிப்பிடலாம்.

**"கரிய நிறமுடைய இயமன் இனிஎனைக் கனவிலும்**
**இறப்பிக்க எண்ணம் உறுமோ!"**

**"மறப்பை அகன்ற மனத்துரவோர்**
**வாழ்த்த அவர்க்கு வான்கதியின்**
**சிறப்பை அளிக்கும் சிவபெருமான்**
**தியாகப்பெருமான் பவனிதனைப்**
**பிறப்பை அகற்றும் ஒற்றியில்போய்**
**பேரானந்தம் பெறக்கண்டேன்**
**இறப்பைத் தவிர்ந்தேன் அம்மாநான்**
**என்னதவந்தான் செய்தேனோ!"**

வடலூரை அடுத்த கருங்குழியில் அவர்கள் 1858 ஆம் ஆண்டு தொடங்கி தங்கி இருந்தார்கள். 1865 ஆம் ஆண்டு சன்மார்க்க சங்கத்தை அமைத்தார்கள். 1858 முதல் 1865 வரை உள்ள காலத்தில்தான் பெருமானின் சாகாஉடம்பின் அற்புதத்தன்மைகளை அன்பர்கள் பலரும் கண்டு வியந்து அவர்களைத் தெய்வமாக நினைத்து அவர்களை அடுத்து வாழ்த்தொடங்கி இருக்க வேண்டும். இத்தகைய அன்பர்களைத் தொகுத்து வள்ளற்பெருமான் சன்மார்க்க சங்கத்தை அமைந்திருக்க வேண்டும்.

வள்ளற்பெருமான் அன்பர்களுக்கு வாய்மொழியாக சன்மார்க்கநெறி பற்றி உபதேசம் செய்தவற்றை, அவர்கள் குறித்து வைத்திருந்தனர். அவை யாவும் தொகுக்கப்பட்டு திருஅருட்பா உரைநடைப்பகுதியில் 'உபதேசங்கள்' என்ற பிரிவில் வெளியிடப்பட்டுள்ளன. இந்த உபதேசங்களில் தான் "சன்மார்க்கத்தின் முடிவு சாகாக்கல்வியைத் தெரிவிப்பதே அன்றி வேறில்லை. சாகாதவனே சன்மார்க்கி" என்பன போன்ற சாகாக்கலைத் தொடர்பான செய்திகள் பலவும் இடம் பெற்றுள்ளன.

வள்ளற்பெருமான் 'ஜீவகாருணிய ஒழுக்கம்' என்ற உரைநடை நூலினை அருளி இருக்கிறார்கள். இந்நூலில் மனிதப் பிறப்பின் குறிக்கோள் கடவுள்

இன்பமாகிய பேரின்பத்தைப் பெறுவதே என்றும், ஜீவகாருணிய ஒழுக்கமே சன்மார்க்கநெறி என்றும் தெளிவாக தெரிவிக்கிறார்கள். மேலும் பேரின்ப லாபத்தைப் பெற்றவர்கள் தோல் நரம்பு எலும்பு முதலியவற்றால் ஆன அசுத்த உடம்பை மாற்றி-உயர்ந்த பொன்னாகிய சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் முதலியவற்றைப் பெற்றவர்களாய் இருப்பார்கள் என்றும், அவர்கள் உடம்பிற்கு பிணி மூப்பு மரணம் முதலியன இல்லை என்றும் விரிவாகக் கூறுகிறார்கள்.

**"கற்றேன் சிற்றம்பலக் கல்வியை! கற்று,**
**கருணைநெறி உற்றேன்! எக்காலமும்**
**சாகாமால் ஓங்கும் ஒளிவடிவம் பெற்றேன்"**

என்ற பாடலில் தாம் கருணைத் திருநெறியில் நின்று மரணத்தை வென்று சாகாஉடம்பு பெற்றமை பற்றி கூறுகிறார்கள்.

**<u>அ. அருள்நிலையங்கள்</u>**

உயிர் இரக்கத் திருநெறியாகிய சன்மார்க்கத்தையும் அதனோடு இணைந்து விளங்கும் சாகாக்கலையினையும் கொள்கைகூறுகளை (theoretical aspects) விளக்க 'ஜீவகாருணிய ஒழுக்கம்' என்ற நூலினை வள்ளற்பெருமான் அருளியிருக்கிறார்கள். இந்நூலில் கூறப்பட்டுள்ள கொள்கைகளின் - ஒழுக்கநெறிகளின் - நடைமுறை கூறுகளை (practical aspects) விளக்க அவர்கள் வடலூரில் சத்திய தருமச்சாலை, சத்திய ஞானசபை ஆகிய தெய்வ நிலையங்களையும் -வடலூரை அடுத்த மேட்டுக்குப்பத்தில் சித்திவளாகம் என்ற தெய்வநிலையத்தையும் அவர்கள் அமைத்திருக்கிறார்கள் என்று கொள்ளலாம்.

1. **<u>பூர்வஞான சிதம்பரமும் - உத்தரஞான சிதம்பரமும்</u>**

சன்மார்க்கநெறியினை விளக்கும் அருள்நிலையங்களை அமைக்க வடலூரை வள்ளற்பெருமான் தேர்ந்தெடுத்ததில் ஒரு சிறப்பு அமைந்துள்ளது.

சிதம்பரத்தை 'பூர்வஞான சிதம்பரம்' என்றும் வடலூரை 'உத்தரஞான சிதம்பரம்' என்றும் வள்ளற்பெருமான் குறிக்கிறார்கள்.

பூர்வம் என்பதற்கு முன்னிலை-தொடக்கநிலை என்றும் உத்தரம் என்பதற்கு பின்னிலை-முடிவுநிலை என்றும் பொருள்கொள்ளலாம். இந்த பொருளை அடிப்படையாகக் கொண்டு பூர்வஞான சிதம்பரம் சாகாக்கலையின் முன்னிலையையும்-உத்தரஞான சிதம்பரம் சாகாக்கலையின் முடிவான நிலையையும் விளக்குகின்றன என்ற கருத்தை வள்ளற்பெருமான் இத்திருப்பெயர்களின் வழியே உணர்த்துகின்றார்கள் என்று கொள்ள வேண்டும்.

பூர்வஞான சிதம்பரத்தையும் உத்தரஞான சிதம்பரத்தையும் வள்ளற்பெருமான் சாகாக்கலையுடன் தொடர்புபடுத்தி பேசுவதை திருஅருட்பா நமக்குத் தெரிவிக்கிறது.

**“வான் கலந்த மாணிக்க வாசக”**

என்றும்,

**“மெய்யுணர்ந்த வாதவூர் மலையைச் சுத்த**
**வெளியாக்கி கலந்து கொண்ட வெளியே’**

என்றும் மாணிக்கவாசகர் சிதம்பரம் சிற்சபையில் உடம்புடன் கலந்த நிகழ்ச்சியை அவர்கள் குறிப்பிடுகிறார்கள். முத்துத்தாண்டவர் சிதம்பரம் சிற்சபையில் உடம்போடு கலந்ததும் இங்கு நினைவுகூரத்தக்கது.

**“கற்றதென்றும் சாகாத கல்வி என்று கண்டுகொண்டுன்**
**அற்புத சிற்றம்பலத்தில் அன்பு வைத்தேன் ஐயாவே”**

**“நான்அந்தம் இல்லா நலம்பெறவே எண்ணி மன்றில்**
**ஆனந்த நாடகத்துக் கன்புவைத்தேன் ஐயாவே!”**

**“வாடலறச் சாகாவரம் கொடுக்கும் என்று மன்றில்**
**ஆடலடி பொன்மலர்க்கே அன்புவைத்தேன் ஐயாவே!”**

**“பொற்புறவே பொன்றாப் பொருள்அளிக்கும் என்றுமன்றில்**
**அற்புதப்பொற் சேவடிக்கே அன்புவைத்தேன் ஐயாவே!”**

**“ஈனமறுத்து என்றும் இறவாமை நல்கும் என்றே**
**ஞானமணி மன்றிடத்தே நண்பு வைத்தேன் ஐயாவே!”**

மேற்கண்ட திருஅருட்பாக்கல் அனைத்தும் பூர்வஞான சிதம்பரத்திற்கும் சாகாக்கலைக்கும் உள்ள தொடர்பினை உணர்த்துகின்றன. இவையாவும் திருஅருட்பாவில் பூர்வஞான சிதம்பரம் பற்றிய பாடல்கள் இடம்பெற்றுள்ள பகுதியில் அமைந்துள்ளன. உத்தரஞான சிதம்பரம் பற்றி அவர்கள் கூறுவதைக் காண்போம்.

**“உத்தர ஞான சிதம்பரமே**
**சித்தியெல்லாம் தரும் அம்பரமே”**

**“உலகமெலாம் தொழவுற்றது எனக்குஉண்மை ஒண்மைதந்தே**
**இலகஎலாம் படைத்து ஆரூயிர் காத்தருள் என்றது**
**கலகம்இலாச் சுத்தசன்மார்க்க சங்கம் கலந்தது பார்த்**
**திலகம்எனா நின்றது உத்தரஞான சிதம்பரமே!”**

**“...............வல்வினை தீர்த்து எனைவாழ்வித்து என்றன்**
**தேகாந்தம் நீக்கியது உத்தர ஞான சிதம்பரமே!”**

(தேகாந்தம் நீக்கியது, தேக அந்தம் நீக்கியது, மரணத்தை நீக்கியது)

மேற்கண்ட பாடல்களில்-உத்தரஞான சிதம்பரம் மரணத்தை நீக்குவதோடு, எல்லாம் படைத்து-உயிர்கள் அனைத்தையும் காக்கும் வல்லமையையும் தரவல்லது என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். உயிர்களைக் காக்கும் வல்லமை என்று இங்கு வள்ளற்பெருமான் கூறுவது படைத்தல் காத்தல் ஆகியவற்றுடன் தொடர்புடையது மட்டுமன்று-உயிர்கள் அடையும் துன்பங்கள் அனைத்திலிருந்து அவற்றைக் காப்பது என்ற பொருளையும் உடையது. இந்நிலையை சாகாக்கலையின் முடிவான நிலை என்று கொள்ளலாம்.

வடலூருக்கு வள்ளற்பெருமான் உத்தரஞான சிதம்பரம் என்று பெயரிட்டு இருப்பது, அவ்விடம் சன்மார்க்கத்திற்கு உரிய சாகாக்கலையின் முடிவான அனுபவத்தை விளக்கவல்லது-வழங்கவல்லது என்பதை உணர்த்துவதற்கே என்று கருத வேண்டும்.

அடுத்து சாகாக்கலையின் முடிவான பகுதியை விளக்கும் வகையில் வள்ளற்பெருமான் நிறுவியுள்ள அருள்நிலையங்கள் பற்றிக் காண்போம்.

## 2.சத்திய தருமச்சாலை

வடலூரில் வள்ளற்பெருமான் தொடங்கிய முதல் பணி சத்திய தருமச்சாலை அமைத்ததே ஆகும். 1867 ஆம் ஆண்டு வைகாசித் திங்கள் பதினோராம் நாள் அவர்கள் வளர்ஒளி விளக்கு (எப்போதும் அணையாது விளங்கும் தீபம் உள்ள விளக்கு-அகண்ட தீபம் விளங்கும் விளக்கு) ஒன்றினை அமைத்து கடவுளை ஒளிவடிவில் வழிபடும் முறையைக் கற்பித்து, தாம் வரைந்த **'ஜீவகாருணிய ஒழுக்கம்**' என்ற நூலை ஓதச்செய்து, சத்திய தருமச்சாலையைத் தொடங்கி வைத்தார்கள் பசி நீக்கும் பேரறத்தை சத்திய தருமச்சாலைக்கு உரியதாக்கி, **"அடுப்பு எப்போதும் புகைந்து கொண்டே இருக்கவேண்டும்"** என்று சன்மார்க்க சங்கத்தாருக்கு கட்டளை இட்டார்கள். அன்று தொடங்கி வளர்ஒளி விளக்கு இரவு பகலாக பேணப்பட்டு வழிபாடு நடைபெற்று வருகிறது. அடுப்பு அணையாமல் வைக்கப்பட்டு நாள்தோறும் தொடர்ந்து உணவு வழங்கப்பட்டு வருகிறது.

சத்திய தருமச்சாலையைத் தொடங்கியபோது வள்ளற்பெருமான் தாம் வரைந்த 'ஜீவகாருணிய ஒழுக்கம்' நூலை ஓதச்செய்தார்கள் என்பதை மேலே கண்டோம்.

'ஜீவகாருணிய ஒழுக்கம்' நூலில் ஒருவன் குடிக்கூலி கொடுத்து வாடகை வீட்டில் வாழும்போது அந்த வீட்டில் கலகம் நேர்ந்தால் வேறுவீட்டிற்கு குடிபோவது போல், ஓர் உயிர் ஆகாரகூலி கொடுத்து உடம்பில் வசிப்பதாகவும், அந்த உடம்பில் கலகம் நேரிட்டால்-நோய் முதலியவற்றால் மரணம் வந்தால்-உயிர் வேறு உடம்பிற்கு செல்லும் என்றும் தெரிவிக்கிறார்கள். ஒருவன் தனக்கு சுதந்தரமாக-சொந்தமாக வீடு கட்டிக்கொண்டால் வேறு வீட்டிற்கு குடிபோகத் தேவையில்லை. அதுபோல் ஓர் உயிர், நித்தியமாகிய மரணம் வாராத அருள்உடம்பைப் பெற்றுக்கொண்டால், வேறு உடம்பில் பிறக்கத் தேவையில்லை என்றும் தெரிவிக்கிறார்கள்.

பேரின்பம் பெற்றவர் பெருமையை விளக்கும்போது, பேரின்பம் பெற்றவர்கள், அசுத்த உடம்பை உயர்ந்த பொன்னாகிய சுத்த உடம்பாக ஆக்கிகொள்வார்கள் என்றும், அந்த உடம்பிற்கு அழுக்கு வியர்வை நிழல் நரை திரை பணி மூப்பு மரணம் முதலியன இல்லை என்றும் கூறுகிறார்கள்.

பேரின்ப லாபத்தை கடவுள் அருளால் மட்டுமே பெறமுடியும் என்றும், கடவுள் அருளை ஜீவகாருணிய ஒழுக்கத்தினால் மட்டுமே பெறமுடியும் என்றும், அதனால் சன்மார்க்கம் என்பது ஜீவ்காருணிய ஒழுக்கமே என்றும் தெளிவாக தொடர்பு தவறாமல் விளக்குகிறார்கள்.

கடவுள்விளக்கத்தையும் கடவுள் இன்பத்தையும் பல்கால் சன்மார்க்க சங்கத்தார் கண்டு அனுபவித்து பூர்த்தி அடைய வேண்டும் என்பதற்காகவே வள்ளற்பெருமான் சத்திய தருமச்சாலையை ஏற்படுத்தி இருக்கிறார்கள் என்பது தெளிவு.

ஜீவகாருணியத்தின் முக்கிய லட்சியம் கொலை நீக்கலும் பசி நீக்கலும் என்று வள்ளற்பெருமான் தெளிவுபடுத்துகிறார்கள். இடைவிடாது இப்பேரறங்களில் ஈடுபட்டு, கடவுள்விளக்கத்தையும் கடவுள் இன்பத்தையும் பல்காலும் கண்டு அனுபவித்து-அதில் முழுமையடைந்து, சாகாஉடம்பு பெற்று மரணமிலாப் பெருவாழ்வு வாழுமாறு சத்திய தருமச்சாலை நமக்கு அறிவுறுத்துகிறது. ஜீவகாருணியம் இடைவிடாது விளங்கும் தருமச்சாலையில் தவம் இயற்றிப் பெற வேண்டிய பேறுகள் அனைத்தையும் ஒரு பகலில் தாம் பெற்றதாக வள்ளற்பெருமான் தெரிவிக்கிறார்கள்.

**"காலையிலே என்றனக்கே கிடைத்த பெரும்பொருளே!**
**களிப்பே! எனகருத்தகத்தே கனிந்த நறுங்கனியே!**
**மேலையிலே இம்மையிலே ஒருமையிலே தவத்தால்**
**மேவுகின்ற பெரும்பயனாம் விளைவை எலாம்தருமச்**
**சாலையிலே ஒருபகலில் தந்ததனிப் பதியே!**
**சமரசசன்மார்க்க சங்கத் தலைஅமர்ந்த நிதியே!"**

உயிர் இரக்கத் திருநெறியில் பல்கால் பழகி, முதிர்ச்சி உண்டாகும்போது அகத்தில் ஒளி அனுபவங்கள் உண்டாகும். இதைக் குறிப்பாக உணர்த்துவதற்காகவே சத்திய தருமச்சாலையில் வளர் ஒளி வழிபாட்டினை வள்ளற்பெருமான் அமைத்திருக்கிறார்கள் என்று கருதவேண்டி இருக்கிறது.

உயிர் இரக்கத் திருநெறியில் பழகுவோர் அகத்தில் காணும் அனுபவங்களை விளக்கவே வடலூரில் சத்திய தருமச்சாலையை அடுத்து ஞானசபையை அவர்கள் அமைத்திருக்கிறார்கள்.

இனி சத்திய ஞானசபையில் சாகாக்கலை இடம்பெற்றுள்ள பாண்மையினைக் காண்போம்.

## 3.சத்திய ஞானசபை

வள்ளற்பெருமான், ஆன்மப்பிரகாசமே ஞானசபை' என்றும் 'ஆன்மப்பிரகாசத்திற்குள் இருக்கும் பிரகாசமே கடவுள், இந்த உள்ளொளியின் அசைவே நடனம்' என்றும் உபதேசித்திருக்கிறார்கள்.

இயற்கைவிளக்க நிறைவாகிய ஞானசபையில், இயற்கை உண்மை நிறைவாகிய திருவுருவைத் தரித்து, இயற்கை இன்ப நிறைவாகிய சிவானந்த ஒருமைத் திருநடனச் செய்கையை எவ்வுயிரும் இன்பமடைதற்பொருட்டே கடவுள் செய்தருளுகின்றார் என்று பெருமான் கூறுகிறார்கள். மேலும் ஞானசபையில் கடவுள் அருட்பெருஞ்ஜோதியாய் விளங்குவதாகவும் அவர்களது 'சபை விளம்பரம்' தெரிவிக்கிறது.

வள்ளற்பெருமான் 'ஜீவகாருணிய ஒழுக்கம்' நூலில் "அருள் என்பது கடவுள் தயவு, கடவுள் இயற்கைவிளக்கம்; ஜீவகாருணியம் என்பது ஜீவர்கள் தயவு, ஜீவர்கள் ஆன்ம இயற்கைவிளக்கம்; தயவைக் கொண்டு தயவைப் பெறுதலும், விளக்கத்தைக்கொண்டு விளக்கத்தை பெறுதலும் கூடும்" என்ற ஓர் அருமையான விளக்கத்தையும் தந்திருக்கிறார்கள், ஜீவகாருணியம் என்பது 'அருளின் ஏகதேச (சிறிய) விளக்கம் என்றும் கூறுகிறார்கள். மேற்கூறப்பட்ட கருத்துகள் அனைத்தையும் தொடர்புபடுத்திச் சிந்தித்தால் பின்வரும் உண்மைகள் புலனாகும்.

1. ஜீவர்களின் ஆன்ம இயற்கைவிளக்கமே, ஜீவகாருணியம் -ஜீவர்கள் காட்டும் தயவு!

2. கடவுளின் இயற்கைவிளக்கமே, அருள்-கடவுள் காட்டும் தயவு!

3. விளக்கத்தைக் கொண்டு விளக்கத்தையும், தயவைக் கொண்டு தயவையும் பெற முடியும். அதாவது உயிர் இரக்கத்தைக் கொண்டு கடவுள் அருளைப் பெற முடியும்.

4. ஞானசபை என்பது இயற்கை விளக்க நிறைவு.

மேற்கூறப்பட்ட கருத்துத் தொடர்பில் இருந்து பின்வரும் சமன்பாட்டினை உருவாக்கலாம்:-

**ஞானசபை - இயற்கைவிளக்க நிறைவு**

**இயற்கைவிளக்க நிறைவு - கடவுள்அருள், கடவுள்தயவு**

**கடவுள் அருள் - உயிர்இரக்கத்தின் முழுமை**

**அதனால்,**

**உயிர்இரக்கத்தின் முழுமை - ஞானசபை**

மேற்கண்ட சமன்பாட்டில், முழுமையான ஜீவகாருணியமே முழுமையான தயவே-முழுமையான உயிர் இரக்கமே-ஞானசபை என்று வள்ளற்பெருமான் உணர்த்துகிறார்கள் என்ற கருத்து பெறப்படுகின்றது. வேறுவகையில்

சொல்வதானால் ஒருவன் தயவே வடிவானால், அவன் ஞானசபை அனுபவத்தை அகத்தே பெறுவான் என்று கூறலாம்.

"என் உயிர்தான் உயிர் இரக்கந்தான் ஒன்றதே இரண்டிலை' 'இரக்கம் என்னுயிர் வேறிலையே' என்பன போன்ற திருஅருட்பாக்கள் வள்ளற்பெருமான் உயிர் இரக்கமே வடிவாக வாழ்ந்தார்கள் என்பதைப் புலப்படுத்துகின்றன. அதனால் ஞானசபை அனுபவத்தை அகத்தே அவர்கள் பெற்றார்கள். சத்திய ஞானசபையை அகத்தே கண்டு சன்மார்க்க சித்தியாகிய சாகாஉடம்பு பெறுதல் முதலியவற்றையும் பெற்றார்கள் என்பதை பின்வரும் அவர்களது அருட்பாவினால் அறியலாம்.

**"சத்தியஞானசபை என்னுள் கண்டனன்**
**சன்மார்க்கச் சித்தியை நான்பெற்றுக் கொண்டனன்"**

**'ஆன்மப்பிரகாசமே ஞானசபை'** என வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். அவர்கள் தாம் அகத்தில் ஞானசபையை ஆன்மப் பிரகாசமாய்-ஒருவகை ஒளியாய்-அனுபவித்திருக்கிறார்கள் என்பது தெளிவு. ஆன்மப்பிரகாசம் என்பதை உயிர் இரக்கம் என்று கொள்ள வேண்டும். ஏனெனில், ஜீவகாருணியத்தை வள்ளற்பெருமான் ஆன்ம இயற்கைவிளக்கம் என்றே கருதுகிறார்கள். பிரகாசம் என்பதற்கு விளக்கம் என்ற பொருள் பொருந்தி நிற்கிறது. ஆன்மப் பிரகாசமாகிய ஞானசபையில்-உயிர் இரக்க ஒளியில்-அருட்பெருஞ்ஜோதியைக் கண்டு, சாகாஉடம்பு பெற்றது குறித்து 'அருட்பெருஞ்ஜோதி அகவலில் வள்ளற்பெருமான் விவரிக்கிறார்கள்.

**"சபைஎன துளமென தானமர்ந் தெனக்கே**
**அபயம் அளித்ததோர் அருட்பெருஞ் ஜோதி"**

**"ஊக்கமும் உணர்ச்சியும் ஒளிதரும் ஆக்கையும்**
**ஆக்கமும் அருளிய அருட்பெருஞ் ஜோதி"**

**"இறவாவரம் அளித்து என்னை மேலேற்றிய**
**அறவாழி யாம்தனி அருட்பெருஞ் ஜோதி"**

**"நான்அந்தம் இல்லாநலம் பெற எனக்கே**
**ஆனந்தம் நல்கிய அருட்பெருஞ் ஜோதி"**

**"சாவா நிலையிது தந்தனம் உனக்கே**
**ஆவா எனஅருள் அருட்பெருஞ் ஜோதி"**

**"சாமாறு அனைத்தையும் தவிர்த்திங் கெனக்கே**
**ஆமாறு அருளிய அருட்பெருஞ் ஜோதி"**

**"ஓமயத் திருஉரு உவப்புடன் அளித்தெனக்கு**
**ஆமயத் தடைதவிர் அருட்பெருஞ் ஜோதி"**

**"முத்திறல் வடிவமும் முன்னியாங்கு எய்துறும்**

**அத்திறல் எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி"**

## 3.1. ஞானசபையும்-திரைகளும்

'ஆன்மா (உயிர்) கோடி சூரியப் பிரகாசம் உடையது' என்றும் ஆன்மப் பிரகாசத்தை மாயாசத்திகளாகிய திரைகள் மறைத்து உள்ளன என்றும் வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். வள்ளற்பெருமான் அருட்பெருஞ்ஜோதி அகவலில் திரைகளின் நிறங்கள் முதலியவற்றை தெரிவித்திருப்பதோடு அவை எவ்வெவற்றை மறைத்திருக்கின்றன என்பதையும் தெரிவித்திருக்கிறார்கள்.

**"கரைவின்மா மாயைக் கரும்பெருந் திரையால்**
**அரைசது மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி**

**பேருறு நீலப் பெருந்திரை அதனால்**
**ஆருயிர் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி**

**பச்சைத் திரையால் பரவெளி அதனை**
**அச்சுற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி**

**செம்மைத் திரையால் சித்துறு வெளியை**
**அம்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி**

**பொன்மைத் திரையால் பொருளுறு வெளியை**
**அன்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி**

**வெண்மைத் திரையால் மெய்ப்பதி வெளியை**
**அண்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி**

**கலப்புத் திரையால் கருதனு பவங்களை**
**அலப்புற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி"**

வடலூர் ஞானசபையில் அருட்பெருஞ்ஜோதி தரிசனம் செய்யும் போது, ஞானசபைக் கதவுகள் திறக்கப்பட்டதும், திரைகள் ஒவ்வொன்றாக நீக்கப்படுகின்றன; கடைசி திரை நீக்கப்பட்டதும் அருட்பெருஞ்ஜோதியை தரிசிக்கிறோம். இந்த வகையில் ஞானசபைக் கட்டிடத்தினை உருவாக்கி, திரைகள் ஏழும் நீக்கப்பட்டு அருட்பெருஞ்ஜோதியை தரிசிக்கும் ஏற்பாட்டை வள்ளற்பெருமான் செய்திருப்பது, அகத்தில் அருட்பெருஞ்ஜோதியைக் கண்டு அனுபவிக்க வேண்டிய நெறியை நமக்கு விளக்குவதற்கே ஆகும்.

மாயை என்பது மிக நுண்ணிய ஒளியாக தியானத்தில் அனுபவமாகும் பொருள். விந்து என்பது சுத்த மாயையின் கூறு என்று தத்துவ நூல்கள் கூறுகின்றன. விந்து ஒளிவடிவாக அனுபவமாவதாக யோகநூல்கள் கூறுகின்றன. அதனால் விந்து சுத்தமாயை முதலியன ஒளிவடிவங்கல் என்பதை அறியலாம். எனவே மாயாத் திரைகளும் பல்வேறு நிற ஒளிகளாகவே தியானத்தில் அனுபவமாகும் என்று தெரிகிறது.

புதுவையில் வாழ்ந்த அரவிந்தர் தியானத்தில் அனுபவமாகும். ஒளிகள் பற்றிக் குறிப்பிடும்போது, அவற்றின் நிறங்கள்-அந்நிறங்கள் குறிக்கும் ஆற்றல்கள் ஆகியவற்றைப் பற்றி விரிவாகக் கூறுகிறார்.

தியான ஒளியால் உடம்பில் சில மாற்றங்கள் உண்டாகும் அளவுக்கு அனுபவங்களைப் பெற்றவர் அரவிந்தர். அவர் மகாசமாதி அடைந்த ஐந்து நாள்கள் வரை உடலில் ஓர் ஒளி விளங்கியது என்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

## 3.2.ஒளியெலாம் கடந்த ஜோதி

விந்து முதலான மாயையின் தொடர்புடைய ஒளிகள் அனைத்தையும் கடந்து-அருட்பெருஞ்ஜோதி விளங்குவதை பின்வரும் பாடல்களில் வள்ளற்பெருமான் தெரிவிக்கிறார்கள்.

**“விந்துஒளி நடுஜோதி - பர**
**விந்து ஒளிக்குள் விளங்கிய ஜோதி”**

பரை என்று கூறப்படும் திரையை தூக்கியபின் (விலக்கிய பின்) ஒவ்வொரு திரையாக நீக்கி ஜோதி தரிசனம் செய்விக்கப்படுவதை வள்ளற்பெருமான் கூறுகிறார்கள்.

**“பரைதூக்கிக் காட்டியகாலே-ஆதி**
**பரை இவர்க்கு அப்பால் அப்பால் என்று மேலே**
**திரைதூக்கிக் காட்டுதல் பாரீர்-திருச்**
**சிற்றம்பலத்தே திருநட ஜோதி”**

பரை என்பது பராசக்தி; இதனை பச்சைத்திரை என்று வள்ளற்பெருமானின் உபதேசம் கூறுகிறது.

இதிலிருந்து அருட்பெருஞ்ஜோதி, பச்சைநிற ஒளி முதலான மாயையின் சார்பான பல ஒளிகளையும்-பல திரைகளையும்-கடந்து விளங்குகிறது என்பதைத் தெளிவாக அறியலாம்.

### 3.2.1. ஒளி அனுபவங்கள் புருவமையத்தில் உண்டாகுதல்

“ஆன்மா கோடி சூரியப்பிரகாசம் உடையது” என்று கூறும் வள்ளற்பெருமான், உடம்பில் ஆன்மா இருக்கும் இடம் ‘லலாடம்’ என்று கூறுகிறார்கள். நெற்றிக்கண், விந்துஸ்தானம், முச்சுடரிடம், புருவமத்தி, சித்சபா அங்கம், மகாமேரு முதலான பெயர்களால் லலாடம் அழைக்கப்படும் என்றும் அவர்கள் தெரிவிக்கிறார்கள். ஆதலால் புருவமத்தியில்தான் ஒளி அனுபவங்கள் தோன்றும் என்று கொள்ள வேண்டும்.

**“கண்களிக்கப் புகைசிறிதும் காட்டாதே புருவக்**

**கலைநடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே!"**

என்று அவர்கள் இறைவனை அழைப்பது மேற்கூறப்பட்ட கருத்தை வலியுறுத்தும். அவர்கள் புருவமையத்தில் நிறைந்த ஒளி அனுபவத்தினை பெற்றார்கள் என்பதை,

**"வளத்தே அருட்பெருஞ் ஜோதியினால் ஒளிவாய்ந்து எனது**
**குளத்தே நிறைந்துஅணையும் கடந்து உயிர் ஓங்கி"**

என்ற அவர்களது பாடலில் இருந்து அறியலாம்.

'குளத்தே' என்று அவர்கள் குறிப்பிடுவது 'நெற்றியில்' 'புருவமத்தியில்' என்று பொருள்படும். சுப்பிரமணியர் 'ஞானமந்திரம்' என்ற நூலில் 'குளப்பார்வை பார்க்கலாகும்' என்ற சொற்றொடர்கள் காணப்படுகின்றன. இது 'நெற்றிக்கண் பார்வை' என்ற பொருளில் கூறப்படுவதையும், கழகத் தமிழ் அகராதி 'குளம்' என்பதற்கு 'நெற்றி' என்ற பொருளைக் கூறுவதையும் நோக்கி 'ஒளிவாய்ந்து எனது குளத்தே நிறைந்து" என்று வள்ளற்பெருமான் குறிப்பிடுவது புருவமையத்தில் அவர்கள் அருட்பெருஞ்ஜோதியினால் பெற்ற அருள் ஒளி அனுபவத்தையே என்று நாம் அறியலாம். மேலும் அவர்கள் நெற்றியில் இருக்கும் நடுக்கண்ணை திறந்து கொண்டால் எல்லாம் பட்டப்பகல்போல் தெரியும் என்றும், தயவே வடிவானால் நெற்றிக்கண் திறக்கும் என்றும் அன்பர்களுக்கு உபதேச மொழியாகக் கூறியிருப்பதும் கவனத்தில் கொள்ள வேண்டிய கருத்தாகும்.

### 3.2.2. அருட்பெருஞ்ஜோதியும் பெரும் தயவும்

பெரும் தயவுமயமான பேரறிவே அருட்பெருஞ்ஜோதி என்று வள்ளற்பெருமான் கருதுகிறார்கள். சத்திய தருமச்சாலையில் விளக்கப்பட்டுள்ள ஜீவகாருணிய ஒழுக்கத்தை இடைவிடாது கடைப்பிடித்து, அதனால் அருளைப்பெற்று, அருளின் துணையால் சத்திய ஞானசபையில் காட்டப்பட்டுள்ள ஒளி அனுபவங்களைப் பெற்று-முடிவில் அருட்பெருஞ்ஜோதியை தரிசித்து, சாகாவரம் பெறலாம். இதனை விளக்குவதற்காகவே சத்திய தருமச்சாலையை அடுத்து சத்திய ஞானசபையை வள்ளற்பெருமான் வடலூரில் அமைந்திருக்கிறார்கள்.

இனி வடலூரை அடுத்த மேட்டுக்குப்பத்தில் அவர்கள் அமைத்துள்ள சித்திவளாகம் என்னும் அருள்நிலையத்தைப் பற்றிச் சிந்திப்போம்.

## 4.சித்திவளாகம்

சென்னையை விட்டு வந்தது தொடங்கி 1867 ஆம் ஆண்டு வரை வள்ளற்பெருமான் கருங்குழியில் தங்கி இருந்தார்கள். 1867 முதல் 1869 வரை வடலூர் தருமச்சாலையில் தங்கி இருந்தார்கள். 1870 முதல் வடலூரை அடுத்த மேட்டுக்குப்பத்தில் உறையத் தொடங்கினார்கள். மேட்டுக்குப்பத்தில் அவர்கள் தங்கி இருந்த குடிலை 'சித்திவளாகம்' என்ற பெயருடன் விளங்கச் செய்தார்கள். 'வளாகம்' என்பதற்கு 'இடம்' என்பது பொருள். 'சித்திவளாகம்' என்பதற்கு சித்தி விளங்கும் இடம் என்று பொருள் கொள்ளலாம். கருமசித்தி யோகசித்தி ஞானசித்தி

முதலானவற்றைப் பற்றிக் கூறும் வள்ளற்பெருமான் ஞானசித்தி என்பது “அறுபத்து நாலாயிரம் சத்திகளையும் தன்னிஷ்டம் போல் நடத்துவது, காலம் கடந்தது. அடிநிலை முடிநிலை சுத்தகர்ம சுத்தயோக சுத்தஞான சித்தி வல்லபங்களைத் தன் சுதந்திரத்தால் நடத்துவது” என்று விளக்கி இருக்கிறார்கள். எனவே ‘சித்திவளாகம்’ என்பது அவர்கள் விளக்கி உள்ள ஞானசித்திகள் முதலான அனைத்து சித்திகளும் வழங்கும் இடம் என்று கொள்ள வேண்டும்.

சன்மார்க்க நெறியை உயிர் இரக்கத் திருநெறி என்று கொண்டு, சன்மார்க்க நெறியின் முடிவான சித்திநிலை-உயிர் இரக்கத் திருநெறியின் முடிவான சித்திநிலை-சன்மார்க்கத்தின் முடிவாகிய சாகாக்கலையின் முடிவான சித்திநிலை-விளங்கும் இடம் என்றும் சித்திவளாகம் என்பதற்கு பொருள் கொள்ளலாம்.

மேட்டுக்குப்பம்-சித்திவளாகத்தில் அனைத்து உயிர்களுக்கும் இடையே உள்ள ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையையும் சகோதரத்துவத்தையும் பற்றி மிக விரிவாக வள்ளற்பெருமான் உபதேசித்ததாக அவர்களுடைய தலைமாணாக்கர் தொழுவூர் வேலாயுதனார் கூறுகிறார். ஆகவே உயிர் இரக்கத் திருநெறியாகிய சன்மார்க்கநெறியைப் பின்பற்றி அதன் விளைவாக வள்ளற்பெருமான் பெற்ற **மரணமிலாப் பெருவாழ்வு** முதலான சித்திகள் விளங்கும் இடம் அல்லது மேற்கண்ட சித்திகளை விளக்கும் இடம் என்றும் **‘சித்திவளாகம்’** என்பதற்கு பொருள் கூறலாம்.

## 4.1.பேருபதேசமும் சன்மார்க்க கொடிகட்டுதலும்

வள்ளற்பெருமான் ஆன்மாவின் இருப்பிடம் ‘லலாடம்’ என்றும் ‘லலாடம்’ என்பது புருவமத்தியைக் குறிக்கும் என்றும் விளக்கி இருக்கிறார்கள். ஆன்மா கோடி சூரியப் பிரகாசம் உடையது என்றும், கால் பங்கு பொன்மையும் முக்கால் பங்கு வெண்மையும் கொண்ட நிறமுடையது என்றும் அவர்கள் கூறி இருக்கிறார்கள்.

மேட்டுக்குப்பம் சித்திவளாகத்தில் 1873 ஆம் ஆண்டு ஐப்பசித் திங்கள் ஏழாம் நாள் சன்மார்க்க கொடிகட்டி, பேரூபதேசம் செய்யும் போது, சன்மார்க்க கொடி குறிக்கும் பொருளையும் வள்ளற்பெருமான் விளக்குகிறார்கள். புருவமத்தியில் அடிப்புறம் வெண்மை நிறமும் மேல்புறம் மஞ்சள் நிறமும் கொண்ட சாய்வு ஒன்று தொங்குவதாகவும் இதன் அடையாள வண்ணமாகவே சன்மார்க்க கொடி கட்டியுள்ளதாகவும் தெரிவிக்கிறார்கள். சன்மார்க்க கொடியை புருவமத்தியில் உள்ள சவ்வுடன் தொடர்புபடுத்தி அவர்கள் பேசுவதாலும், ஆன்மப் பிரகாசத்தின் நிறமாக அவர்கள் கூறும் வெண்மை-பொன்மையையே கொடிக்கும் அவர்கள் அமைத்து இருப்பதாலும், பிரகாசம் நிறைந்த ஆன்மாவை-ஒளி வாய்க்கப் பெற்ற உயிரை புறமுகத்தில் விளக்கிக் காட்டவே சன்மார்க்க கொடியை அவர்கள் அமைத்திருக்கிறார்கள் என்று கருதலாம். உயிர் இரக்கத்தை ஆன்ம விளக்கம் என்று அவர்கள் கூறுவதால் சன்மார்க்க கொடி உயிர் இரக்கம் நிறைந்த உயிரை குறிக்கிறது என்றும் கொள்ளலாம்.

சன்மார்க்க கொடி பற்றி விளக்கும் அவர்களது பேருபதேசத்தில், எல்லாரிடத்தும் அவர்கள் கொண்டிருக்கும் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமை குறித்தும் தெரிவிக்கிறார்கள். “என்னை ஏறா நிலைமிசை ஏற்றிவிட்டது யாதெனில், தயவு, **தயவு** என்னும் கருணைதான் என்னைத் தூக்கி விட்டது” என்று கூறி

எவரும் பெறுதற்கரிய சித்திகளைப் பெற உதவியது தாம் கடைபிடித்த உயிர் இரக்கமே என்று தெளிவுப்படுத்துகிறார்கள். மேலும், அவர்கள்

**"அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி"**

என்பதை **'மகாமந்திரம்'**என்று அழைத்து, 'பெருந்தயவுடைய பேரறிவே பூரண இன்பம்' என்று அம்மந்திரத்தின் பொருளையும் விளக்குகின்றார்கள். அருட்பெருஞ்ஜோதியை அவர்கள் பெருந்தயவுடைய பேரறிவு என்றே கருதுகிறார்கள்.

## 4.2.சன்மார்க்கநெறி எங்கும் பரவவேண்டும் என்று வள்ளற்பெருமான் கொண்டிருந்த இலட்சியம்

'எவ்வுலகமும் எத்தேவரும் எவ்வுயிரும் சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றிடுதல் வேண்டும்' என்றும், 'புரைசேரும் புலைநெறியும் கொலைநெறியும் சிறிதும் பொருந்தாமல் எவ்வுயிரும் புரிந்துவத்தல் வேண்டும்' என்றும் வள்ளற்பெருமான் இரவும் பகலும் இறைவனிடம் வேண்டிநின்றார்கள். எல்லா உயிர்களையும் சன்மார்க்கநெறியில் அடைவிக்கும் பொருட்டு,

**"படிவானும் படைத்தல்முதல் ஐந்தொழிலும்**
**ஞானம்படைத்தல் முதல் ஐந்தொழிலும்**
**நான்புரிதல் வேண்டும்"**

என்று இறைவனிடம் வேண்டினார்கள். அவர்களது வேண்டுகோளினை ஏற்று, இறைவன் அவர்களுக்கு ஐந்தொழில்செய் வல்லபத்தை வழங்கினான் என்பதை,

**"உலகுயிர்த் திரள்எலாம் ஒளிநெறி பெற்றிட**
**இலகும் ஐந்தொழிலையும் யான்செயத் தந்தனை!"**

என்பன போன்ற அருட்பாக்கள் பலவற்றில் மீண்டும் மீண்டும் கூறி இருக்கிறார்கள்.

இத்தகைய சித்திகளைப் பெற்றதால் எல்லா உயிர்களையும் சன்மார்க்கநெறியில் நிறுவும் திறனோடும் தாம் திகழ்வதை,

**"எவ்வுலகும் அண்டங்கள் எத்தனையும் நான்காண**
**இவ்வுலகில் எந்தை எனக்களித்தான்-எவ்வுயிரும்**
**சன்மார்க்க சங்கம்தனை அடையச் செய்வித்தே**
**என்மார்க்கம் காண்பேன் இனி"**

என்று கூறுகிறார்கள்.

படைத்தல் முதல் ஐந்தொழிலும் செய்து, படைப்பிலேயே சன்மார்க்க நெறிக்குரிய உணர்வு வளருமாறு செய்யும் தமது அருட்பெரும் சித்தி

நிலையினையே வள்ளற்பெருமான் சித்திவளாகத்தில் விளக்கி இருக்கிறார்கள் என்று கருதலாம்.

"அனைத்து உயிர்களும் சன்மார்க்கநெறி நின்று சாகாநிலை அடைய (வள்ளற்பெருமான்) திருவருட் செங்கோல் செலுத்துகிறார்கள் என்பதே சித்திவளாகத் தத்துவம்" என்று டாக்டர்.வை.இரத்தினசபாபதி அவர்கள் மிகப் பொருத்தமாக எடுத்துக்காட்டி இருப்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

### 4.3.சித்திவளாகத்தில் வளரொளி விளக்கு

வள்ளற்பெருமான் தாம் படைத்தல் முதலான ஐந்தொழில் புரிந்து, உலகை மாற்றி அமைத்து, சன்மார்க்கநெறியில் எல்லா உயிர்களையும் ஈடுபடுத்தும் பணியைத் தொடங்க எண்ணம் கொண்டார்கள். இதனைச் சன்மார்க்க அன்பர்களுக்கு விளக்க 1873 ஆம் ஆண்டு கார்த்திகைத் திங்களில் தாம் சித்திவளாகத்தில் உள்ளே வைத்திருந்த விளக்கை புறத்தே வைத்து, "இதைத் தடைபடாது ஆராதியுங்கள். நான் இப்போது இந்த உடம்பில் இருக்கிறேன். இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன்!" என்று அறிவித்தார்கள். சுத்த சன்மார்க்க நெறியில் அனுபவமாகும் சாகாக்கலை அனுபவ உடம்புகளான சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் முதலியவற்றில், ஞானதேகம் ஆகாயம்போல் எங்கும் பரந்து வியாபித்து விளங்குவது என்று வள்ளற்பெருமான் விளக்கி இருப்பதால் அவர்கள், ஞானதேகத்தினால் எல்லா உடம்புகளிலும் புகுந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. ஞானதேகத்தை அவர்கள் தீபத்தில் இருந்து பரந்து பரவும் பிரகாசத்துடன் ஒப்பிட்டு விளக்குகிறார்கள். அதனாலேயே தாம் எல்லா உடம்புகளிலும் புகுந்து எப்போதும் அழியாத ஞானதேகத்துடன் விளங்குவதைக் குறிக்கும் வெளிமுக அடையாளமாக, தடைபடாது விளங்கும் தீபத்தைச் சித்திவளாகத்தில் அமைத்திருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

வள்ளற்பெருமான் 1874 ஆம் ஆண்டு தைப்பூச நாளில் திருக்காப்பிட்டுக் கொண்டது பற்றி முன் இயலில் கண்டோம். மற்ற ஞானிகளைப் போல உடம்புடன் விக்கிரகத்தில் கலத்தல்-ஒளியில் கலத்தல்-வெளியில் கலத்தல் போல அல்லாமல் வள்ளற்பெருமான் சித்திவளாகத்தில் இருந்த அறையினுட்சென்று அவ்வறையை திருக்காப்பிட்டுச் செய்ததில் ஒரு சிறப்பு உண்டு. அவர்கள் சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் ஆகியவற்றுடன் - கடவுளுடன் கலந்து நின்று-உயிர்களைச் சன்மார்க்கநெறியில் நிறுவும் பணியைச் செய்தவாறு-பெரும்பாலும் புறக்கண்களுக்கு தோற்றப்படாமல் காவலுடன் - காப்புடன் - பாதுகாப்புடன் - திருக்காப்புடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதையே சித்திவளாகத் திருவறையில் திருக்காப்பிட்டுக் கொண்ட நிகழ்ச்சியின் மூலம் அவர்கள் உணர்த்தி இருக்கிறார்கள்.

**"உன்னைவிடமாட்டேன் நான், உன்ஆணை! எம்பெருமான்**
**என்னைவிடமாட்டாய்! இருவருமாய்-மன்னிஎன்றும்**
**வண்மைஎலாம் வல்ல வாய்மைஅருளால் உலகுக்கு**
**உண்மைஇன்பல் செய்தும் உவந்து"**

என்ற அருட்பா வள்ளற்பெருமானின் ஒப்புயர்வற்ற அற்புதமான சித்தி நிலையை விளக்குகிறது.

## 5.சத்திய தருமச்சாலை சத்திய ஞானசபை சித்திவளாகம் ஆகியவற்றிற்கு இடையே உள்ள தொடர்பு

சன்மார்க்கநெறியின் உயிர்நிலையாக விளங்கும் ஜீவகாருணிய ஒழுக்கத்தில் பழகும் நெறியை விளக்க வள்ளற்பெருமான் சத்திய தருமச்சாலையை ஏற்படுத்தி இருக்கிறார்கள் என்றும், ஜீவகாருணிய ஒழுக்கத்தில் நிற்பதால் கிட்டும் அருளின் துணையால் உண்டாகும் ஒளி அனுபவங்களை விளக்க சத்திய ஞானசபையை அமைத்திருக்கிறார்கள் என்றும், அகத்தில் உண்டாகும் 'அருட்பெருஞ்ஜோதி' அனுபவம் மரணத்தை நீக்குவது மட்டும் அன்றி-எல்லா உயிர்களுக்கும் நலம் விளைவிக்கும் ஒப்பற்ற சித்தி நிலையையும் வழங்கவல்லது என்பதை விளக்க சித்திவளாகத்தை அமைத்திருக்கிறார்கள் என்றும் கொள்ளலாம்.

எனவே சாகாக்கலையையும் உயிர் இரக்கத் திருநெறியையும் இணைத்து வள்ளற்பெருமான் அற்புதமாக விளக்கி இருக்கும் சமரச சுத்த சன்மார்க்கநெறியால் உயிர் இரக்கத்தில் பழகுவதை சத்திய தருமச்சாலையும், உயிர் இரக்கத்தால் அகத்தில் கிடைக்கும் ஒளி அனுபவங்களை சத்திய ஞானசபையும், ஒளி அனுபவங்களால் மரணத்தை வென்று இறைவனோடு கலந்து நின்று உயிர்களுக்கு உதவியவாறு வாழும் பெருவாழ்வை சித்திவளாகமும் விளக்குகின்றன என்று கொள்வது சாலவும் பொருத்தமுடையதே ஆகும்.

## ஆ. அருள்நிலையங்களில் சாகாக்கலை - வரலாற்றுப் பின்னணி

சன்மார்க்க சங்கம் சத்திய தருமச்சாலை சத்திய ஞானசபை சித்திவளாகம் ஆகியவற்றின் வழியே வள்ளற்பெருமான் சாகாக்கலையினைப் படிமுறையாகவும் தொடர்பு தவறாமலும் விளக்கி இருக்கிறார்கள். இவை அமைவதற்குக் காரணமான வரலாற்றுப் பின்னணியையும் நாம் சிந்திக்க வேண்டும்.

சாகாக்கலையினை விளங்க வைக்கவே தம்மை இறைவன் ஈன்றதாகக் கூறுகிறார்கள்.

**"ஆன்ற சன்மார்க்கம் அணிபெற எனைத்தான்**
**ஈன்ற முதளித்த இனிய நற்றாயே"**

என்ற பாடலில் சன்மார்க்கம் என்று அவர்கள் கூறுவது சன்மார்க்க நெறியோடு சார்ந்து விளங்கும் சாகாக்கலையினையே என்று கொள்ள வேண்டும். "என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம்" என்று அவர்கள் கூறுவதும் கவனிக்கத்தக்கது.

இறைவனே அவர்களுக்கு சாகாக்கல்வியினைப் பயிற்றுவித்தான் என்பதை பின்வரும் அவர்களது பாடல்களினால் அறியலாம்.

**"சாகாக் கல்வியின் தரமெலாம் கற்பித்து**
**ஏகாக் கரபொருள் ஈந்த சற்குருவே"**

**"சாகாக்கல்வி எனக்குப்பயிற்றி தந்த சோதியே"**

**“சாகாக் கல்வி பயிற்றி என்னுள்**
**சார்ந்து விளங்கும் சற்குருவே”**

**“இறவாக் கல்வி அடியேற்கீய்ந்த குரவனே”**

வள்ளற்பெருமான் சென்னையில் வதிந்த காலத்தில் பாடிய பாடல்களிலும் அவர்கள் சாகாநிலை பெற்றமை, சாகாக்கல்வியினை எல்லோரும் பயிலுதல் வேண்டும் என்பதில் அவர்களுக்கு இருந்த ஆன்மநேய ஆர்வம் ஆகியவற்றை காண முடிகிறது.

**“மறப்பை அகன்ற மனத்துரவோர்**
**வாழ்ந்த அவர்க்கு வான்கதியின்**
**சிறப்பை அளிக்கும் சிவபெருமான்**
**தியாகப்பெருமான் திருநடத்தைப்**
**பிறப்பை அகற்றும் ஒற்றியில்போய்**
**பேரானந்தம் பெறக் கண்டேன்**
**இறப்பைத் தவிர்ந்தேன் அம்மாநான்**
**என்ன தவந்தான் செய்தேனே”**

என்ற திருவொற்றியூர் பாடலில் அவர்களுக்கு இறப்பு நீங்கியது பற்றி பெருங்களிப்போடு குறிப்பிடுகிறார்கள். வள்ளற்பெருமான் உயிர் இரக்கமே வடிவாக விளங்கினார்கள். அதனால் நரை திரை பிணி மூப்பு முதலியவற்றால் மக்கள் படும் துயரங்களை எண்ணி வருந்தி, மக்களுக்கு சாகாக்கல்வியினைப் பயிற்றுவிக்க இறைவன் தமக்கு அருள்செய்தல் வேண்டும் என்னும் குறிப்பு அவர்கள் சென்னையில் வாழ்ந்தபோது திருவொற்றியூர் இறைவனை வழிபட்டு பாடிய பாடலிலும் காணப்படுகின்றது.

**“பற்று நோக்கிய பாவியேன் தனக்குப்**
**பரிந்து நீஅருட் பதம் அளித் திலையே**
**மற்று நோக்கிய வல்வினை அதனால்,**
**வஞ்ச மாயையின், வாழ்க்கையின், மனத்தின்**
**அற்று நோக்கிய நோய்களின், மூப்பின் -**
**அலைதந் திவ்வுல கம்படும் பாட்டை**
**உற்று நோக்கினால் உருகுதென் உள்ளம்**
**ஒற்றி மேவிய உலகுடை யோனே”**

சன்மார்க்க நெறியினைத் தழைக்கச்செய்து, மக்கள் சாகாக்கலையினில் தேர்ந்து வாழ்ந்து இன்புறுதல் வேண்டும் என்று விரும்பிய வள்ளற்பெருமான், அது தொடர்பான பணிகளைத் தொடங்குவதற்கே சிதம்பரத்திற்கு அருகில் உள்ள கருங்குழியில், 1858 ஆம் ஆண்டு முதல் ஏறத்தாழ ஒன்பது ஆண்டு காலம் தங்கி இருந்தார்கள். சிதம்பரம் தொடர்பான அருட்பாக்களை அவர்கள் கருங்குழியில் தங்கி இருந்த காலத்தில்தான் பாடியிருக்க வேண்டும். இப்பாடல்களிலும் அவர்கள் மரணத்தை வென்றது பற்றிய அகச்சான்றுகள் பல இடம் பெற்றுள்ளன.

வள்ளற்பெருமான் 'அதிசய மாலை' என்னும் தலைப்பில் பதினைந்து பாடல்களை அருளி இருக்கிறார்கள். இப்பாடல்கள் அனைத்திலும் தனித்த சிவகாமவல்லிக்கு இனித்த நடத்தவனாகிய இறைவன், தமக்கு:-

**"தக்கோன்என் றுலகிசைப்பத் தன்வணம்ஒன் றளித்தான்"**

**"தச்சோதி வணப்பொருள்ஒன் றெனக்களித்துக் களித்தான்"**

**"சந்தோட முறஎனக்கும் சித்தியொன்று கொடுத்தான்"**

**"தப்பாத ஒளிவண்ணந் தந்துஎனை அளித்தான்"**

**"தம்மான முறவியந்து சம்மானம் அளித்தான்"**

என்று கூறி -தாம் மரணத்தை வென்றதனைக் குறிப்பால் உணர்த்தி, ஒரு பாடலில் வெளிப்படையாகவும் தெரிவிக்கிறார்கள்.

**"தீவாய நரகினிடை விழக்கடவேன் எனைத்தான்**
**சிவாயநம எனப்புகலும் தெளிவுடையன் ஆக்கிச்**
**சாவாத வரங்கொடுத்துத் தனக்கடிமை பணித்தான்**
**தனித்தசிவ காமவல்லிக்கு இனித்தநடத்தவனே"**

மேலும் வள்ளற்பெருமான் **'அருட்பிரகாச மாலை'** என்ற தலைப்பில் நூறு பாடல்களை அருளி இருக்கிறார்கள். இப்பாடல்கள் அனைத்திலும், இறைவன் ஒருநாள் இரவில் தாம் இருக்கும் இடம் தேடி வந்து, பொருள் ஒன்றினைத் தந்தமையை எண்ணி எண்ணி அன்புருவமாகி உருகுகின்றார்கள். ஒரு பாடலில் இறைவன் **'செம்பருக்கைக் கல்உறுத்த'** நடந்து வந்ததாக கூறுகிறார்கள். கருங்குழியில் செம்பருக்கைக் கற்கள் தரையில் ஏராளமாகக் கிடைப்பதை இன்றும் காண முடியும். ஆகவே இந்த அருள் நிகழ்ச்சி அவர்கள் சென்னை வாழ்வை விடுத்த பின் வதிந்திருந்த கருங்குழியில் நடந்ததாகவே கொள்ள வேண்டும். 'அருட்பிரகாச மாலை'யில் அவர்களுக்கு இறைவன் 'விளைவு ஒன்று கொடுத்தான்' என்றும், 'தன்னுருவம் போன்றதொன்று' கொடுத்தான் என்றும், 'சத்தி ஒன்று கொடுத்தான்' என்றும் கூறுகிறார்கள். இதனைப் பெற்று 'புலவர் தொழ வாழ்க' என்றும், 'துயர்நீங்க வாழ்க' என்றும், 'பேரறம் செய்து இன்புறுக' என்றும், 'புலை ஒழிந்த நெறியினிலே பொருந்துக' என்றும், 'தயவினொடும் வாழ்க' என்றும் இறைவன் கூறி, 'மரணமற்று வாழ்க' என்று திருவார்த்தை அளித்ததாகவும் கூறுகிறார்கள்.

**'பிரசாத மாலை'** என்னும் தலைப்பில் அருளியுள்ள பாடல்களில் வள்ளற்பெருமான் - தம்மை இறைவன் அடியார் கழக நடு இருத்தி அவர்க்கொல்லாம் திருநீறு அளித்ததாகவும், தமக்கு மட்டும் **'செஞ்சுடர்ப்பூ'** ஒன்றை அளித்ததாகவும் தெரிவிக்கிறார்கள். வள்ளற்பெருமான் பெற்ற செஞ்சுடர்ப்பூ சாகாஉடம்பே-ஒளி உடம்பே-பொன் உடம்பே-என்பதை சன்மார்க்கப் பேரறிஞர் 'குங்குலியம்' பழ.சண்முகனார் அவர்கள் ஓர் அற்புதமான விளக்கவுரை தந்து நிறுவி இருக்கிறார்.

மேற்கூறப்பட்ட செய்திகள் அனைத்தையும் ஆழ்ந்து சிந்தித்தால், அவர்கள் கருங்குழியில் வாழ்ந்த காலத்திலும் மரணத்தை வென்று சாகாஉடம்பாகிய சுத்ததேகத்துடன் வாழ்ந்திருக்கிறார்கள் என்றும், மற்றவர்களையும் சாகாக்கல்வியினைப் பயிலச் செய்வதாகிய பேரறம் செய்து இன்புறும் உயர்நிலையினில் திகழ்ந்திருக்கிறார்கள் என்றும் உய்த்துணர முடியும். வள்ளற்பெருமான் கருங்குழியில் இருந்த காலங்களில் நீண்ட காலம் மறைந்திருப்பார்கள் என்றும், அவர்கள் எங்கு சென்றார்கள் என்பதை எவரும் அறியமாட்டார்கள் என்றும் அவர்களின் தலைமாணாக்கர் தொழுவூர் வேலாயுதனார் தெரிவிக்கிறார். இந்தக் காலங்களில் அவர்கள் 'ஆகாயம் போல் விளங்குகின்ற ஞான தேகத்துடன் இருந்திருக்க வேண்டும். அவர்கள், வேலி புதர் முதலிய எதனாலும் தடைபடாது நடப்பார்கள் என்றும், அவர்கள் உடம்பு நிழல் இல்லாமல் விளங்கியது என்றும் பிறையாறு சிதம்பர சுவாமிகள் கூறுகிறார். காரணப்பட்டு கந்தசாமிப்பிள்ளை என்னும் பெரியார் வள்ளற்பெருமானை நேரில் கண்டு, அவர்களால் நோய் நீங்கும் பேறு பெற்றவர். அவர் வள்ளற்பெருமான் நடக்கும்போது அடிச்சுவடு இல்லாமல் இருந்தது என்றும், மாசிலாமணி என்ற நிழற்பட் நிபுணர் எட்டுமுறை வள்ளற்பெருமான் நிழற்படம் எடுத்தார் என்றும், உடைகளைத் தவிர பெருமானின் உருவம் ஒளிப்படத் தகட்டில் பதிவாகவில்லை என்றும் கூறுகிறார். திருஅருட்பா சுத்தபதிப்பு ஆசிரியர் திரு.ஆ.பாலகிருஷ்ண பிள்ளை அவர்களிடம் சென்னை முத்துவீரப்பிள்ளை தாம் நேரில் இதனைக் கண்டதாக கூறியிருக்கிறார். மேற்கண்டவாறு வள்ளற்பெருமான் ஒளிஉடம்புடன் விளங்கிய இவ்வற்புதங்களை அன்பர்கள் பலரும் கண்டிருக்க வேண்டும். அவர்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து வள்ளற்பெருமான் சன்மார்க்க சங்கத்தை அமைத்திருக்க வேண்டும். சன்மார்க்க சங்கத்தார் மரணமிலாப் பெருவாழ்வு பெறும் நெறியினை விளக்கமாக அறிந்து பழகுவதற்காகவே வள்ளற்பெருமான் சத்திய தருமச்சாலை சத்திய ஞானசபை சித்திவளாகம் முதலியவற்றை அமைத்திருக்கிறார்கள். இம்மூன்று நிலையங்களையும் உருவாக்குவதற்கான முன்னேற்பாடுகளை செய்யவே அவர்கள் வடலூருக்கு அருகில் கருங்குழியில் தங்கி இருந்தார்கள் என்று நாம் கருத வேண்டி இருக்கிறது.

வடலூரில் சத்திய தருமச்சாலை 1867 ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட பிறகு அவர்கள் கருங்குழியில் தங்காமல், தருமச்சாலையிலேயே தங்கி இருந்தார்கள். அதன் பிறகு வடலூரில் சத்திய ஞானசபை அமைக்கப்படும்போது, அவர்கள் மேட்டுக்குப்பத்தில் 'சித்திவளாகம்' என்ற குடிலில் தங்கி இருந்தார்கள். இந்தக்காலங்களில் எல்லாம் அவர்கள் பாடல்கள் வாயிலாகவும்-உரைநடை நூல்கள் வாயிலாகவும் வாய்மொழி உபதேசங்களாகவும்-சாகாக்கலையின் நுட்ப திட்பங்களை வெளிப்படுத்திக் கொண்டே இருந்தார்கள். அவற்றை அடுத்த இயலில் காணலாம்.

## <u>அடிக்குறிப்புகள்</u>

1. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள் பக்கம் 35
2. மேலது, பாடல் 27
3. மேலது, படல் 1365
4. மேலது, பக்கம் 35

5. திருஅருட்பா உரைநடைப்பகுதி பக்கம் 307
6. மேலது, பக்கம் 51 52
7. மேலது, பக்கம் 77
8. திருஅருட்பா, ஆறாம் திருமுறை, பாடல் 4745
9. திருஅருட்பா, உரைநடைப்பகுதி, பக்கம் 444
10. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள், பாடல் 3263
11. மேலது, பாடல் 2122
12. மேலது, பாடல் 2950
13. மேலது, பாடல் 2952
14. மேலது, பாடல் 2953
15. மேலது, பாடல் 2951
16. மேலது, பாடல் 2955
17. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5081
18. மேலது, பாடல் 4048
19. மேலது, பாடல் 4056
20. பிறையாறு சிதம்பர சுவாமிகள், திருவருட்பிரகாச வள்ளலார் வாழ்வியல், பக்கம்27
21. மேலது, பக்கம் 27
22. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 85
23. மேலது, பக்கம் 77 78
24. மேலது, பக்கம் 52
25. மேலது, பக்கம் 52
26. மேலது, பக்கம் 59
27. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4181
28. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 248
29. மேலது, பக்கம் 457
30. மேலது, பக்கம் 433
31. மேலது, பக்கம் 51-52
32. மேலது, பக்கம் 56
33. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 3506
34. மேலது, பாடல் 3507
35. மேலது, பாடல் 4909
36. மேலது, பாடல் 4615 (வரிகள் 1555-1556)
37. மேலது, பாடல் 4615 (வரிகள் 13-14)
38. மேலது, பாடல் 4615 (வரிகள் 157-158)
39. மேலது, பாடல் 4615 (வரிகள் 159-160)
40. மேலது, பாடல் 4615 (வரிகள் 209-210)
41. மேலது, பாடல் 4615 (வரிகள் 205-206)
42. மேலது, பாடல் 4615 (வரிகள் 189-190)
43. மேலது, பாடல் 4615 (வரிகள் 237-238)
44. திருஅருட்பா ஆறாம் உரைநடைப்பகுதி, பக்கம் 329
45. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4615(வரிகள் 813-826)
46. கட்டளைத் திரட்டு, பக்கம் 47-48
47. Sir John Woodroffe,The Serpent power, page 402
48. T.R.Thulasiram, Arut Perum Jothi and Deathless Body, volume 1, pp399-400
49. Nirodbaran, Twelve years with sri Aurobindo, Page 402

50. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4578
51. மேலது, பாடல் 4594
52. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 326
53. மேலது பக்கம் 329
54. மேலது, பக்கம் 268
55. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4108
56. மேலது, பாடல் 268
57. வைத்திய வாதயோக ஞான சாஸ்திர திரட்டு, முதற்பாகம் பக்கம் 110
58. கழகத்தழிழ் அகராதி, பக்கம் 366
59. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 335
60. மேலது, பாடல் 359
61. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறை, பக்கம் 335
62. கழகத்தமிழ் அகராதி, பக்கம் 824
63. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 335
64. ஊரன் அடிகள், இராமலிங்க அடிகள் வரலாறு, பின்னிணைப்பு, பக்கம் 21
65. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 329, பக்கம் 268
66. மேலது, பாடல் 326
67. மேலது, பாடல் 360
68. மேலது, பாடல் 356
69. மேலது, பாடல் 359
70. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4084
71. மேலது, பாடல் 4083
72. மேலது, பாடல் 4084
73. மேலது, பாடல் 5615 (வரிகள் 577-1578)
74. மேலது, பாடல் 5514
75. வை.இரத்தினசபாபதி, சிதம்பரம் இராமலிங்கரின் சித்தி வளாகம் பக்கம் 59-160
76. திருஅருட்பா உரைநடைப்பகுதி பக்கம் 438
77. மேலது, பக்கம் 335
78. மேலது, பக்கம் 317
79. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5394
80. திருஅருட்பா திருமுறை, பாடல் 4615 (வரிகள் 1075-1076)
81. மேலது, பாட்ல் 5601
82. மேலது, பாடல் 4615 (வரிகள் 1065-1066)
83. மேலது, பாடல் 5061
84. மேலது, பாடல் 4628
85. மேலது, பாடல் 5045
86. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள் பாடல் 1365
87. மேலது, பாடல் 1109
88. மேலது, பக்கம் 35
89. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள், ஊரன் அடிகள் முன்னுரை, பக்கம் 15
90. மேலது, பாடல் 3202
91. மேலது, பாடல் 3203
92. மேலது, பாடல் 3204
93. மேலது, பாடல் 3206
94. மேலது, பாடல் 3139
95. மேலது, பாடல் 3208

96. மேலது, பாடல் 3138
97. மேலது, பாடல் 3128
98. மேலது, பாடல் 3110
99. மேலது, பாடல் 3120
100.மேலது, பாடல் 3159
101.மேலது, பாடல் 3138
102.மேலது, பாடல் 3158
103.மேலது, பாடல் 3103
104.மேலது, பாடல் 3106
105.மேலது, பாடல் 3704
106.திருஅருட்பா, முதல் ஐந்து திருமுறைகள், பாடல் 3162
107.குங்கிலியம் பழ.சண்முகனார்.திருஅருட்பிரகாச வள்ளலார், பக்கம் 11-46
108.ஊரன் அடிகள், மே.கா.நூ., பின் இணைப்பு பக்கம் 21
109.பிறையாறு சிதம்பர சுவாமிகள், மே.கா.நூ., பக்கம் 42
110. கு.சீனிவாசன், சுத்த சன்மார்க்க விளக்கம் பக்கம் 242
111.மேலது, பக்கம் 222
112.ஆ.பாலகிருஷ்ணபிள்ளை, திருஅருட்பா திருமுகப்பகுதி, பாயிரம், பக்கம்25

## பொருளடக்கம்

# இயல் ஆறு

## திருஅருட்பா விளக்கும் சாகாக்கலையின் தனித்தன்மைகள்

### அ. வேதஆகமநெறியில் சாகாக்கலை

திருஅருட்பாவில் வள்ளற்பெருமான் விளக்கி இருக்கும் சாகாக்கலை ஒப்பற்ற பல தனித்தன்மைகளைப் பெற்று திகழ்கிறது. வேதங்கள்-உபநிடதங்கள்-திருமந்திரம் முதலான சிவாகமங்கள்-சித்தர்களின் இலக்கியங்கள்-ஆகியவற்றையும், திருஅருட்பாவையும் ஒப்பிட்டு ஆராய்ந்தால் இந்த உண்மை தெளிவாகப் புலப்படும்.

'இந்து வேத ஆகமங்களில் சாகாக்கல்வி கூறப்பட்டிருக்கிறது' என்று வள்ளற்பெருமான் தெரிவிக்கிறார்கள். சித்தமார்க்கத்தை பின்பற்றுவோரில் சிலர் உபநிடதங்களில் சாகாக்கலை இடம் பெற்றிருப்பதாகவும் அந்தப் பகுதிகள் வெளிப்படையாக வழங்கப்படவில்லை என்றும் கருதுகின்றனர்.

### 1.பகவத்கீதை

வேதங்களின் சாரம் என்று பகவத்கீதை கூறப்படுகிறது. இதில் ஆறாவது அத்தியாயத்தில் பன்னிரண்டாவது சுலோகம் தொடங்கி யோகப் பயிற்சி பற்றி கண்ணன் உபதேசிக்கத் தொடங்குகிறார். இவ்வுபதேசங்களுக்கு ஞானேசுவரர் விளக்கவுரை அருளி இருக்கிறார். பதினான்காவது சுலோகத்திற்கு அவர் விளக்கம் தருங்கால் குண்டலினி சக்தி மூலாதாரத்தில் விழித்தெழும்போது உடம்பில் ஏற்படும் மாற்றங்கள் பற்றி மிக விரிவாக விவரிக்கின்றார். அதன் சுருக்கம் பின்வருமாறு:-

1. **குண்டலினி விழித்தெழுந்து மேல்நோக்கிச் சென்று வாயு மாமிசம் முதலியவற்றை உண்பாள்.**

2. **தோல் எலும்பு முதலியவற்றையும் ஊடுருவிச் சென்று மயிர்க்கால்களை தீய்ந்துபோகச் செய்வாள்.**

3. **மேகக்கூட்டம் விலகி சூரியன் பிரகாசமாய் தோன்றுவதுபோல், அசுத்தங்கள் நீங்கி உடம்பு பிரகாசமாய் விளங்கும்.**

4. **நெல்லில் உமி நீங்குவதுபோல தோல் மறைந்து புதிய தோல் உண்டாகி உடம்பு சிவந்து விளங்கும்.**

5. **புதிய நகங்கள் உண்டாகும்.**

6. **பற்கள் விழுந்து அழகிய புதிய பற்கள் உண்டாகும்.**

7. **மாணிக்கப் பொடிகள் போன்று புதிய உரோமங்கள் தோன்றும்.**

8. **கண்கள் ஒளியுடன் விளங்கும்.**

9. **வயோதிகம் நீங்கி இளமை உண்டாகும்.**

10. **எமன் பயந்து விலகி விடுவான்.**

பகவத்கீதையில் கூறப்பட்டிருக்கும் யோகப்பயிற்சிக்கு ஞானேசுவரர் தந்திருக்கும் விளக்கம் சாகாக்கலையினைச் சார்ந்ததாக இருக்கிறது. உடம்பில் புதிய பற்கள் முளைத்தல்-முதுமை நீங்குதல் -உடம்பு மரணம் இல்லாது விளங்குதல் ஆகியவை அனைத்தும் சாகாக்கலைக்கு உரியவை.

பகவத்கீதையின் சுலோகங்களில் ஆழ்ந்து மறைபொருளாக இருக்கும் சாகாக்கலையினை ஞானேசுவரரின் உரையினால் மட்டுமே அறியமுடிகிறது. மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது மேற்கண்ட சுலோகங்களில் சாகாக்கலை உள்ளுறைப் பொருளாக இருப்பது ஓர் அணுவளவும் எவருக்கும் புலப்படாது. ஞானேசுவரர் போன்ற உயர்ந்த ஆசிரியர்கள் விளக்கும்போதுதான் மேற்கண்ட சுலோகங்களின் உள்ளே மறைபொருளாகக் கூறப்பட்டிருக்கும் சாகாக்கலையினை அறிய முடியும்.

**2.உபநிடதங்கள்**

ஆன்ம அனுபவத்தால் மரணம் நீங்கும் என்று மரணத்தின் அதிபதிகளான எமன் நசிகேதனுக்கு கூறியதாக கடோபநிடதத்தில் ஒரு செய்தி காணப்படுகிறது. இதில் சாகாக்கலை இலைமறைகாய் போல் கூறப்பட்டிருப்பதாக்வே கொள்ள

முடியும். சகோபநிடதத்தைப் போலவே, மற்ற உபநிடதங்களிலும் வேதங்களிலும் ஆங்காங்கே சாகாக்கலை கூறப்பட்டிருக்கலாம். தகுதிவாய்ந்த உரையாசிரியர்கள் விளக்கும் போதுதான் அவை நமக்கு புலப்படும்.

ஆனால் திருஅருட்பாவில் சாகாக்கலை தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. உரையாசிரியர்கள் துணை இன்றி, எளிய கல்வி உடையவரும் தெளிவாகத் தெரிந்துகொள்ளும் நிலையில் வெளிப்படையாக சாகாக்கலை கூறப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக,

**"கற்றேன் சிற்றம்பலக் கல்வியை! கற்று, கருணைநெறி**
**உற்றேன்! எக்காலமும் சாகாமல் ஓங்கும் ஒளிவடிவம் பெற்றேன்!"**

என்பன போன்ற வள்ளற்பெருமானின் பாடல்கள் சாகாக்கலையினை கற்போருக்கு ஐயம் திரிபு மயக்கம் ஏற்படாதவாறு-உரையாசிரியர்களின் உரை தேவையில்லாத நிலையில்-எளிமையாக விளக்குகின்றன.

## 3.திருமந்திரம்

**"அந்தி மதிபுனை அரனடி நாள்தோறும்**
**சிந்தை செய்துஆகமம் செப்பலுற் றேனே"**

என்று திருமூலர் கூறுவதால் அவரது திருமந்திரத்தை செந்தமிழ் ஆகமநூல் என்றே கொள்ள வேண்டும். மற்ற ஆகமங்களில் இருந்து இது வேறுபட்டது என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். நரை திரை நீங்குதல், உடம்பு அழியாமல் விளங்குதல் முதலான சாகாக்கலை தொடர்பான பாடல்கள் சிலவற்றை திருமந்திரத்தில் காணமுடியும்.

**"புறப்பட்டு புக்குத் திரிகின்ற வாயுவை**
**நெறிப்பட உள்ளே நின்மல மாக்கினால்**
**உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்**
**புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே"**

**"நீல நிறனுடை நேரிழையா ளொடும்**
**சாலவும் புல்லிச் சதம்என்றுஇருப் பார்க்கு**
**ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்**
**பாலனு மாவர் பராநந்தி ஆணையே"**

**"நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்**
**வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை"**

**"கட்டக் கழன்று கீழ்நான்று வீழாமல்**
**அட்டத்தைக் கட்டி அடுப்பை அணைகோலி**
**விட்டத்தைப் பூட்டி மேற்பையைத் தாட்கோத்து**
**நட்டம் இருக்க நமனில்லை தானே"**

**"இடக்கை வலக்கை இரண்டையும் மாற்றித்**

**துதிக்கையால் உண்பார்க்கு சோரவும் வேண்டாம்
உறக்கத்தை நீக்கி உணரவல் லார்கட்கு
இறக்கவும் வேண்டாம் இருக்கலும் ஆமே"**

**"எழுகின்ற தீயில் கற்பூரத்தை ஒக்க
பொழிகின்ற இவ்வுடல் போம் அப்பரத்தே"**

**"ஒன்றே குலமும்! ஒருவனே தேவனும்!
நன்றே நினைமின்! நமனிலை நாளுமே"**

மேற்கண்ட பாடல்களில் நரை திரை நீங்குதல்-உடம்பு மரணமின்றி விளங்குதல்-கற்பூரம் தீயில் கலந்து மறைவதுபோல் உடம்பு ஒளியில் அல்லது வெளியில் கலத்தல்-போன்ற சாகாக்கலைத் தொடர்பான செய்திகளைக் காண முடிகிறது. ஆனால் இவற்றில் காணப்பெறும் 'அட்டத்தைக் கட்டி அடுப்பை அணை கோலுதல்' 'இடக்கை வலக்கை இரண்டையும் மாற்றி துதிக்கையால் உண்ணுதல்' போன்ற தொடர்களுக்கு எளிதில் பொருள் காண முடியாது. ஆனால், திருஅருட்பாவோ,

**"ஈரமும் அன்பும் கொண்டு இன்னருள் பெற்றேன்
என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம்"**

என்று எளிமையாக-இரக்கம் அன்பு ஆகியவற்றின் துணையால் இறவாமை எய்தலாம் என்று தெரிவிக்கிறது. "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் நன்றே நினைமின் நமனிலை நாளுமே" என்ற திருமந்திரத்தில், உயிர்கள் அனைத்தையும் ஓர் குலமாக எண்ணி ஆன்மநேயத்துடன் தொண்டு செய்து வாழ்ந்தால் மரணத்தை வெல்லலாம் என்று திருமூலர் கருதுவதாகக் கொள்ளலாம். இக்கருத்து திருஅருட்பா காட்டும் சாகாக்கலையுடன் ஒருவாறு ஒத்து இருக்கிறது என்றும் கருதலாம்.

**"சாற்றும்சன் மார்க்கமாம் தற்சிவத் தத்துவத்
தோற்றங்க ளான சுருதிச் சுடர்க்கண்டு
சீற்றம் ஒழிந்து சிவயோகச் சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே"**

என்ற பாடலில் திருமூலர் சன்மார்க்கநெறி நிற்போர் கூற்றத்தை வெல்வர் என்று குறிப்பிடுகிறார். இக்கருத்து **'சாகாதவனே சன்மார்க்கி'**என்ற வள்ளற்பெருமானின் அறிவிப்புடன் ஒத்து இருக்கிறது.

திருமூலர் காட்டும் சாகாக்கலையினை, வள்ளற்பெருமான் அவர்களுக்கே உரியமுறையில் எளிமைப்படுத்தி-இனிமையும் எளிமையும் நிறைந்த பாடல்கள் உரைநடைகள் ஆகியவற்றின் துணைக்கொண்டு விளக்கியிருக்கிறார்கள் என்று கொள்ளலாம். திருமந்திரத்தில் காணப்படும் சாகாக்கலையினைப் பற்றிய

விளக்கத்தைக் காட்டிலும்-திருஅருட்பாவில் காணப்படும் சாகாக்கலைப் பற்றிய விளக்கம் விரிவாக அமைந்துள்ளது என்றும் கருதலாம். எடுத்துக்காட்டாக 'வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை' 'இறக்கவும் வேண்டாம் இருக்கலும் ஆமே' 'நன்றே நினைமின் நமனிலை நாளுமே' என்பன போன்ற தொடர்களால் திருமூலர் சாகாநிலையினை குறிப்பிடுகின்றார். சாகாஉடம்பு எக்காலத்தும் எதனாலும் அழியாதது-நரை திரை பிணி மூப்பு இல்லாதது-ஒளிவடிவில் அமைந்தது-என்பன போன்ற உண்மைகள் எல்லாம் புலப்படுமாறு வள்ளற்பெருமான் விளக்கமாகவும் விரிவாகவும் கூறுகிறார்கள்.

**"காராலும் கனலாலும் காற்றாலும் ககனக்**
**கலையாலும் கதிராலும் கடலாலும் கடல்சூழ்**
**பாராலும் படையாலும் பிறவாலும் தடுக்கப்**
**படுதலிலாத் தனிவடிவம் எனக்களித்துப் பதியே"**

**"நரையற்று மூப்பற்று இறப்பற்று**
**இருக்கவும் நண்ணினனே"**

**"கூகாஎன அடுத்தோர் கூடி அழாத வண்ணம்**
**சாகாவரம் எனக்கே தந்திட்டான்"**

**"ஊன்செய்த தேகம் ஒளிவடிவாய் நின்றோங்குகின்றேன்"**

**"உலகமெலாம் போற்ற ஒளிவடிவனாகி இலக அருள் செய்தான்"**

என்பன போன்ற அருட்பாக்களில் வள்ளற்பெருமான் சாகாஉடம்பின் இயல்புகளைக் கூறி இருப்பதோடு-'ஜீவகாருணிய ஒழுக்கம்' உரைநடை நூலிலும் மிக விரிவாக விளக்கி இருக்கிறார்கள். இதனை திருமந்திரம் கூறும் 'நமனிலை நாளுமே' என்ற தொடருக்கு உரிய விரிவுரை என்றே கருதலாம்.

**<u>ஆ.சித்தர்கள்நெறியில் சாகாக்கலை</u>**

ஆன்மீக நெறியாளர்களின் உடம்பு அழிந்தாலும் அவர்களுடைய உயிர் முத்தியடையும் என்ற கோட்பாட்டினைச் சித்தர்கள் ஏற்பதில்லை.

**"தேகம் இழப்பதற்குச் செபம் செய்தேன்! தவம் செய்தேன்!**
**யோகம் மட்டும் செய்தாலென்!"**

என்று இடைக்காட்டுச் சித்தர் கூறுகிறார். மேலும்,

**"சாகாது இருப்பதற்கு தான்கற்ற கல்வியன்றோ**
**வாகான மெய்க்கல்வி"**

என்றும் அவர் அறிவுறுத்துகிறார்.

**"ஞானம் அறிந்தோர்க்கு நமனில்லை! நாள்தோறும்**

**பானமதை உண்டு பசியாறில்-ஞானமது**
**கண்டால் உடல்உயிரும் காயம் வலுவாகும்**
**உண்டால் அமிர்தரசம் உண்"**

என்று திருவள்ளுவர் என்ற சித்தர் கூறுகிறார்.

சித்தர்களின் சாகாக்கலையில் மூலிகைகள் மருந்துகள் ஆகியவற்றைப் பயன்படுத்தி உடம்பை வலுவாக்குதல், பிராணாயாமத்தால் ஆயுளை வளர்த்தல், உடம்பை சுடர் ஒளி போல் ஆக்குதல் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

1.**மூலிகை**

சித்தர்கள் மூலிகைகளைப் பயன்படுத்தி உடம்பை வலுவாக்கி ஆயுளை நீட்டித்துக் கொள்ளும் திறன் படைத்தவர்கள். இதனை,

**"தின்ற கரிசாலை தேகம் திரை போக்கும்**
**தின்ற கரிசாலை சிறந்த நரைபோக்கும்**
**தின்ற கரிசாலை தேகம் சிறுபிள்ளை**
**தின்ற கரிசாலை சிதையாது இவ்வாக்கையே"**

என்பன போன்ற பாடல்களால் அறியலாம்.

2. **'முப்பூ' என்னும் சிறப்பு மருந்து**

சித்தர்களுக்கே உரிய சிறப்பு மருந்து 'முப்பூ'. இது மூன்று உப்புக்களால் ஆனது என்று கூறப்படுகிறது.

**'முப்பூக் கண்டார் மூப்பினை அற்றார்'**

என்று 'நந்திஞானம்' கூறுவதில் இருந்து இம்மருந்து முதுமையை நீக்கி இளமையை அளிக்கவல்லது என்று அறியலாம். 'திருவள்ளுவர் கற்பம் 300' என்ற நூலில் முப்பூச் சுண்ணத்தால் நோய் முதுமை ஆகியன நீங்கி உடம்பு இளமை அடைவது பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. முப்பூவை பன்னிரண்டு பூண்டு காலம் உட்கொண்டால் 'காயசித்தி' உண்டாகும் என்றும் அந்நூலில் கூறப்பட்டுள்ளது. முப்பூ செய்யும் முறை எல்லார்க்கும் எளிதாக விளங்காது என்பதையும் அன்பாலே தெரிவிக்கிறது.

2.பிராணாயாமம்-தியானம்

சித்தர்கள் கூறும் பிராணாயாமம் தனித்தன்மை வாய்ந்தது. இதனைப் பழகும்போது முதுமை நீங்கி இளமை உண்டாகும் என்பதனை,

**"உருத்தரித்த நாடியில் ஒடுங்குகின்ற வாயுவை**
**கருத்தினால் இருத்தியே கபாலமேற்ற வல்லீரேல்**
**விருத்தரும் பாலராவார் மேனியும் சிவந்திடும்**
**அருள்தரித்த நாதர்பாதம் அம்மைபாதம் உண்மையே"**

**“மூலநாடி தானிலே முளைத்தெழுந்த சோதியை**
**நாலுநாழி உம்முள்ளே நாடியே இருந்தபின்**
**பாலனாகி வாழலாம்”**

என்ற சிவவாக்கியர் பாடலால் அறியலாம்.

உயிர்ப்பினை-பிராணசக்தியை-சுழிமுனை நாடியில் செலுத்தி புருவமையத்தில் மனதை நிலைபெறச் செய்தால் ஆயுள் முடியாது என்று பின்வரும் சித்தர்நெறி பாடல் கூறுகிறது:-

**“கடினம் என்று தள்ளாதே மவுனயோகம்**
**கண்மூக்கு மத்தியிலே கருதிப்பாரு**
**துடிமிகுந்த சுழிமுனையின் ஊடுதாக்கு**
**சூரியனும் சந்திரனும் ஒன்றாய்ப்போகும்**
**குடியிருப்பு சாக்கிரத்தின் கோட்டையாச்சு**
**கோடானு கோடியுகம் வாழலாச்சு”**

**3.சொருபமுத்தி**

சித்தர்களின் நெறியில் ‘சொருபமுத்தி’ என்று ஒரு நிலை பேசப்படுகிறது. இந்நிலையில் உடம்பு ஒளியாகி சுடர்போல் விளங்கும் என்று கூறப்படுகிறது.

**“சூடேறி மாண்டவர்கள் கோடா கோடி**
**சொருபமுத்தி பெற்றவர்கள் சுருக்கமாச்சே”**

**“சொருப முத்திக்கு அடையாளம் ஏதென்றாக்கால்**
**சுடர்போல காணுமடா தூல தேகம்”**

என்று உரோமரிஷி கூறுகிறார்.

சித்தர்நெறியில் கூறப்படும் மூலிகைகளில் வள்ளற்பெருமான் கரிசலாங்கண்ணியை சிறப்பானதாகக் கருதுகிறார்கள். உயிர்ப்பை அடக்கி மரணத்தை வெல்லுதல் பற்றி வள்ளற்பெருமான் எதுவும் கூறியதாக தெரியவில்லை. ஜீவகாருணியத்தால், அருளைப் பெற்று, அருளின் துணையால் மரணத்தை வெல்ல வேண்டும் என்பதே அவர்களது கோட்பாடு. உடம்பு சுடர்போல் விளங்கும் நிலை பற்றி சித்தர்களின் நூல்களில் விரிவான செய்திகள் காணப்படவில்லை. ஆனால் வள்ளற்பெருமான் சாகாக்கலையில் சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் முதலான உடம்புகள் பற்றியும், அவற்றின் இயல்புகள் ஆற்றல்கள் முதலியன பற்றியும் மிக விரிவாக ‘ஜீவகாருணிய ஒழுக்கம்’ என்ற நூலில் கூறி இருக்கிறார்கள்.

**இ. சமயநெறியில் சாகாக்கலை**

‘செத்தேபோனால் சிரியாரோ’ என்று மணிவாசகப் பெருமான் அஞ்சுகிறார். இறைவன் தமக்கு ‘அள்ளூறாக்கை அமைத்தனன்’ என்றும் அவர் கூறுகிறார். அள்ளூறாக்கை என்பது என்பது பேரின்பம் ஊறும் உடம்பு. ‘கற்பூர தீபம் போல் எந்தன் உடலை கனகசபையில் கலந்து கொள்வாயே’ என்று முத்துத்தாண்டவர் வேண்டுகிறார். திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரர், ஆண்டாள், திருப்பாணாழ்வார், மீராபாய், துக்காரம் முதலியோர் உடம்போடு மறைந்தனர். இவர்தம் இலக்கியங்கள் அனைத்திலும் பக்திச் சுவையினைக் காண முடிகிறதே அன்றி, சாகாக்கலையினை பற்றி எதுவும் தெரிந்து கொள்ள இயலவில்லை. ஆனால், வள்ளற்பெருமான் சாகாக்கலைப் பற்றிய விளக்கமான செய்திகள் பலவற்றை பக்திச்சுவை மிகுந்த பாடல்களில் தெளிவாக விளக்கி இருக்கிறார்கள்.

> **“ஐயன் எனக்குஈந்த அதிசயத்தை என்புகல்வேன்**
> **பொய்யடியேன் குற்றம் பொறுத்தருளி-வையத்து**
> **அழியாமல் ஓங்கும் அருள்வடிவம் நான்ஓர்**
> **மொழிஆடு தற்கு முனம்”**

என்ற பாடலை இதற்கு எடுத்துக்காட்டாக கொள்ளலாம். இனி திருஅருட்பா விளக்கும் சாகாக்கலையின் தனித்தன்மைகளைக் காண்போம்.

## ஈ. திருஅருட்பாவில் சாகாக்கலை-தனித்தன்மைகள்

### 1.மறைமொழிகள் இல்லாத விளக்கம்

ஒரு கலையை, மக்கள் விரும்பிப் பின்பற்றுவதற்கு உரிய முதல்படி-அக்கலை மக்கள் புரிந்து கொள்ளக்கூடிய எளிய மொழியில் விளக்கப்பட வேண்டும் என்பதே ஆகும். சித்தர்களின் நூல்களில் அமைந்துள்ள சாகாக்கலை பெரும்பாலும் மறைமொழிகளால் அமைந்துள்ளது. எடுத்துக்காட்டாக,

> **“காயாம்பட்டிக் குளத்துக்குள்ளே வெள்ளைக்**
> **காயா வேரு முளைத்திருக்கு - அதை**
> **வாயால் தின்று நிமிர்ந்தாக்கால் உடல்**
> **மாயா தல்லவோ ஞானப்பெண்ணே”**

என்ற பாடலில் சாகாக்கலை கூறப்பட்டிருந்தாலும், அது எளிதில் விளங்காத மறைமொழிகளில் அமைந்திருக்கக் காண்கிறோம். சாகாக்கலையினை மக்கள் எளிமையாக உணர்ந்து பயின்று வெற்றிபெற பெரிதும் துணைசெய்யாத நிலையில் இவைபோன்ற பாடல்கள் அமைந்துள்ளன.

ஆனால் திருஅருட்பாவில் சாகாக்கலை ஒளிவுமறைவு இன்றி எளிய மொழிகளால் விளக்கப்பட்டுள்ளது. அந்த நூலை ஒரு முறை கண்ணுறும் எவரும் சாகாக்கலையினை முழுமையாக விளங்கிக் கொள்ள இயலும்.

### 3. சாகாக்கலையினைக் கடவுள்பக்தி உயிர் இரக்கம் ஆகியவற்றுடன் இணைத்துள்ள சிறப்பு

மூலிகைகள் காய கல்பமருந்துகள் யோகம் தியானம் முதலியவற்றால்- ஆயுளை நீடிக்கச் செய்தல், மரணத்தை வெல்லுதல் போன்ற பேறுகள் கிட்டும் நெறியினை சித்தர்கள் விளக்கி இருக்கிறார்கள். மாணிக்கவாசகர் போன்ற பெரியோர்கள் கடவுள் மீது அன்பு கொண்டு, அருளைப் பெற்று மரணத்தை வெல்லும் நெறியினைக் காட்டி இருக்கிறார்கள். வள்ளற்பெருமானோ கடவுள் அருள் நம்மை வந்தடையும் ஜீவகாருணியத்தைக் கடைப்பிடித்து மரணமிலாப் பெருவாழ்வில் சாகாஉடம்பு பெற்று வாழும் நெறியினை வெளிப்படுத்தி இருக்கிறார்கள். "சுத்த சன்மார்க்க சாதனம் இரண்டு வகைப்படும்.

**1.பரோபகாரம்**

**2.சத்விசாரம்.**

பரோபகாரம் என்பது தேகத்தாலும் வாக்காலும் திரவியத்தாலும் உபகாரம் செய்வது; சத்விசாரம் என்பது ஆன்மநேய சம்பந்தமான தயா விசாரத்தோடு இருப்பது, கடவுளது புகழை விசாரித்தல், ஆன்மாவின் உண்மையை விசாரித்தல், தன் சிறுமையைக் கடவுளிடத்தில் விண்ணப்பித்தல்; இந்த மார்க்கத்தில்தான் சுத்தமாதி மூன்று தேகங்களையும் பெற வேண்டும் என்று வள்ளற்பெருமான் தெளிவாக உபதேசித்து இருக்கிறார்கள். இந்த உபதேசத்தை திருஅருட்பாவில்,

**நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே**
**நிறைந்துநிறைந்து ஊற்றெழுங்கண்ணீரதனால் உடம்பு**
**நனைந்துநனைந்து அருளமுதே நன்னிதியே ஞான**
**நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று**
**வனைந்து வனைந்து ஏத்துதும்நாம் வம்மின் உலகியலீர்**
**மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்"**

என்றும், 'ஜீவகாருணிய ஒழுக்கம்' நூலில் கடவுள் தயவாகிய அருளால் மட்டுமே பேரின்ப லாபத்தை அடைய முடியும் என்றும், 'கடவுள் அருளை ஜீவகாருணியம் ஒன்றினால்தான் பெறமுடியும்'-என்றும் பேரின்ப லாபத்தைப் பெற்றவர்கள் அசுத்த உடம்பை உயர்ந்த பொன்னாகிய சுத்ததேகம், பிரணவதேகம், ஞானதேகம் ஆகியவையாக மாற்றிக்கொண்டு விளங்குவார்கள்' என்றும் விளக்கி இருக்கிறார்கள். மேலும்,

**"நான்சொல்லும் இதுகேளீர் சத்தியமே**
**நடராஜ எனில்வரும் நித்தியமே!"**

**"இறவா வரம்தரும் நற்சபையே**
**எனமறை புகல்வது சிற்சபையே!"**

என்று கடவுள் மீது கொண்ட அன்பினால் மரணம் நீங்குவது பற்றியும்,

**"கற்றேன் சிற்றம்பலக்கல்வியை! கற்று, கருணைநெறி**
**உற்றேன்! எக்காலமும்சாகாமல் ஓங்கும் ஒளிவடிவம்**
**பெற்றேன்!"**

**"ஈரமும் அன்பும் கொண்டு இன்னருள் பெற்றேன்!**
**என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம்!"**

என்று உயிர் இரக்கத் திருநெறியால் மரணம் நீங்கி சாகாஉடம்பு பெறுவது குறித்தும் வள்ளற்பெருமான் கடல்மடை திறந்ததுபோல் பாடல்கள் பலவற்றில் தெரிவிக்கிறார்கள்.

### 4. <u>தனித்தன்மை வாய்ந்த தியானநெறி</u>

சாகாக்கலைக்கு இன்றியமையாதது புருவநடுத் தியானம். புருவ நடுவை அறிவிடம் நெற்றிக்கண் முதலான பெயர்களால் வள்ளற்பெருமான் அழைக்கிறார்கள். நெற்றிக்கண்ணைத் திறந்து கொண்டால் எல்லாம் பட்டப்பகல் போல் தெரியும் என்றும் நெற்றிக்கண் திறக்கப் பெற்றவர்கள் இறந்தவர்களை எழுப்பமுடியும் என்றும் கூறுகிறார்கள். நெற்றிக்கண்ணைத் திறப்பது பெரும் தயவே வடிவானால் மட்டுமே சாத்தியமாகும் என்றும் கூறுகிறார்கள். இறந்தோரை எழுப்ப வல்லவர்களுக்கு மரணம் இருக்காது என்பது உறுதி. அதனால் நெற்றிக்கண் திறப்பது பற்றி வள்ளற்பெருமான் கூறுவது சாகாக்கலைக்கு தொடர்புடையது என்றே கருதவேண்டும்,

சாகாக்கலையினை பக்தியோடு இணைத்து வாழ்ந்த பெரியோர்கள் இருந்து இருக்கிறார்கள். ஆனால் சாகாக்கலையினை உயிர் இரக்கத்துடன் இணைத்து, நடைமுறையில் வாழ்ந்து காட்டி நமக்கும் உபதேசிக்கும் ஒரே ஆசிரியர் வள்ளற்பெருமானே ஆவர். தியான யோகத்தால் மரணம் நீங்குவது பற்றி,

**"புருவத்திடை இருந்து புண்ணியனைக் கண்டால்**
**உருவற்று நிற்கும் உடம்பு"**

**"நெற்றிக்கு நேரே நிறைந்த ஒளிகாணில்**
**முற்றும் அழியாது உடம்பு"**

என்பன போன்ற பாடல்கள் வாயிலாக அறிகிறோம். மேலாதார தியானத்தால் உடம்பு புகைபோல் ஆகி, 'கத்தி நடு ஓடும்' என்று 'வாதஞான சௌமியம் 1200' கூறுகிறது. இந்த நிலையினைப் பெறுவதற்காக சில நுணுக்கமான பயிற்சிகளையும் இந்நூல் தெரிவிக்கிறது. இவையனைத்தும் எளிதில் விளங்காத மறைமொழிகளால் கூறப்பட்டுள்ளன. சாகாஉடம்பு பற்றிய செய்திகளும் மிகவும் சுருக்கமாகவே உள்ளன. ஆனால், வள்ளற்பெருமான் சாகாக்கலைப் பயிற்சிகள் பற்றியும் சாகாஉடம்பு பற்றியும் கூறும் செய்திகள் விளக்கமாகவும் விரிவாகவும் வெளிப்படையாகவும் உள்ளன.

யோகநூல்களில்-சுழிமுனை நாடி பற்றியும்-சுழிமுனை நாடியிளைளே வஜ்ரநாடி அமைந்திருப்பது பற்றியும்-அதன் உள்ளே சித்திரநாடி அமைந்திருப்பது பற்றியும்-அதன் உள்ளே பிரம்மநாடி அமைந்திருப்பது பற்றியும்-கூறப்பட்டுள்ளது. இவை யாவும் ஒன்றைவிட ஒன்று மிக நுண்மையானவை என்றும் கூறப்படுகின்றது.

வள்ளற்பெருமான் பிரம்மநாடியையும் விட நுண்ணிய நாடி ஒன்றினைப் பற்றி கூறுகிறார்கள். இது நாபியில் தொடங்கி மேல்நோக்கிச் செல்லச்செல்ல மிகவும்

நுண்மையாகி-ஜீவனுக்கும் புலப்படாமல்-ஆன்மக் காட்சியில் அருகித் தோன்றும் என்றும், 'சிவாகார பூரணத் தம்பம்' என அழைக்கப்படும் என்றும் விளக்கி இருக்கிறார்கள்.

1. **படிகமேடை**
2. **ஆயிரத்தெட்டு கமல இதழ்**
3. **ஓங்காரபீடம்**
4. **குண்டலி வட்டம்**
5. **ஜோதிஸ்தம்பம்**
6. **சுத்த நடனம்**

முதலானவற்றைக் கூறி 'இவை நிராதார லட்சணம்' என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். படிகமேடை நெற்றியிலும், ஆயிரத்தெட்டு கமல இதழ் உச்சியின் மேலும்-மற்றவை அதே வரிசையில் ஆயிரத்தெட்டு கமலத்திற்கு மேலே ஒன்றன் மேல் ஒன்றாக அமைந்திருப்பதாக கொள்ளலாம். இவை தலை முதலான உடல் உறுப்புக்களின் ஆதாரம் இன்றி உச்சிக்கு மேல் விளங்குவதால் இவற்றை நிராதாரம் என்று வள்ளற்பெருமான் அழைக்கிறார்கள். புருவமத்தியில் இருந்து மேலே இரண்டரை அங்குலத்தில் பரவிந்துவும், அதற்குமேலே இரண்டரை அங்குலத்தில் பரநாதமும், அதற்குமேல் திக்கிராந்தம் அதிக்கிராந்தம் முதலியனவும் அமைந்துள்ளன. இதற்கும் மேலே பரம்பரவெளி பராபரவெளி ஆகியவை அமைந்துள்ளன. இதற்கும் மேலே பெருவெளி, அருட்பெருஞ்ஜோதி ஆகியவை அமைந்திருப்பதாகக் கருதவேண்டும். கீழ் ஆதாரங்களை ஊடுருவி சுழிமுனை நாடி செல்வதுபோல், நிராதாரத்தில் உள்ள ஆதாரங்களை 'சிவாகார பூரணஸ்தம்பம்' என்னும் பொன் வண்ணமான நாடி ஊடுருவிச் செல்வதாகக் கருதலாம்.

**"தனக்கு நிகரிங்கில்லாதுயர்ந்த தம்பம் ஒன்றதே**
**தாவிப் போகபோக நூலின் தரத்தில் நின்றதே**
**கனக்கத் திகைப்புற்று அங்கேநானும் கலங்கி வருந்தவே**
**கலக்கம் நீக்கி தூக்கிவைத்தாய் நிலைபொருந்தவே!"**

**"ஏய்ந்த பொன்மலைமேல் தம்பத்தில் ஏறி ஏகவும் ஏகவும் நுணுகித்**
**தேய்ந்தபோது அடியேன் பயந்தவெம்பயத்தைத் தீர்த்து மேல் ஏற்றிய திறத்தை"**

என்ற அவர்களது பாக்கள் ஆழ்ந்த சிந்தனைக்குரியன. கடவுளின் திருவருள் துணையால் மேற்குறப்பட்ட நிராதாரம்-பொன் தம்பம் முதலியன அனுபவமாகும் போதுதான் அசுத்த உடம்பின் அணுக்கள் மாற்றம் அடைந்து சுத்ததேகமாக மாறுகிறது என்று உய்த்துணர வேண்டும். நிராதாரம் பொன் தம்பம் போன்ற மிக மிக நுட்பமான அனுபவங்கள் வேறு எந்த நூலிலும் இடம் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை.

## 3.1. சுத்தசிவ துரியாதீதம் என்ற தனிப்பேரனுபவம்

உயிர் -புருவமத்தியில் எல்லாக் கருவிகளுடனும் இருப்பது சாக்கிரம் அல்லது நினைவுநிலை என்றும், கீழ் இறங்கி கண்டத்தில் நிற்பது சொப்பனம் அல்லது கனவுநிலை என்றும், இதயத்தில் நிற்பது சுழுத்தி அல்லது துயில்நிலை

என்றும், உந்தியில் நிற்பது துரியநிலை என்றும், மூலத்தில் நிற்பது துரியாதீதநிலை என்றும்-தத்துவ சாத்திரங்களில் விளக்கப்பட்டுள்ளது. இவ்வுணர்வு நிலைகளில் உயிர் உடம்பில் படிப்படியாக கீழ்நோக்கி இறங்குவதால் இவை 'கீழால் அவத்தை' என்று அழைக்கப்படுகின்றன.

சாக்கிரத்தில்-சாக்கிரம், சாக்கிரத்தில் சொப்பனம்-சாக்கிரத்தில் கழுத்தி, சாக்கிரத்தில்-துரியம். சாக்கிரத்தில் துரியாதீதம் முதலியவை 'மத்தியாவத்தை' என்று கூறப்படுகின்றன. இவை புருவமத்தியில் அனுபவிக்கப்படுகின்றன என்று கொள்ளலாம்.

இதுபோலவே சீவசாக்கிரம் முதலாகத் தொடங்கி நிகழும் சீவதுரியம் முதலியனவும், பரசாக்கிரம் முதலாகத் தொடங்கி நிகழும் பரதுரியம் முதலியனவும், சிவசாக்கிரம் முதலாக தொடங்கி நிகழும் சிவதுரியம் முதலியனவுமான உணர்வு நிலைகளைத் திருமந்திரம் குறிப்பிடுகிறது. சிவதுரியம், குருதுரியம் என்றும் கூறப்படும்.

வள்ளற்பெருமான் குருதுரியத்துக்கு அப்பால்-சிவ துரியத்துக்கு அப்பால்-சுத்தசிவ சாக்கிரம், சுத்தசிவ சொப்பனம், சுத்தசிவ துரியம், சுத்தசிவ துரியாதீதம் என்று யாரும் இதுவரை கூறாத அனுபவ நிலைகளைக் குறிப்பிடுகிறார்கள். வேத ஆகமங்களும் தத்துவராயர் முதலியோரும் குருதுரியம் வரையில் கூறி இருப்பதாகவும், அவற்றிற்கும் மேலே உள்ளவை சுத்த சன்மார்க்க நெறியில் மட்டுமே அனுபவமாகும் என்றும் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

**"தோன்று பரசாக்கிரமும் கண்டோம்; அந்தச்**
**சொப்பனமும் கண்டோம்; மேல்சுழுத்தி கண்டோம்;**
**ஆன்ற பரதுரியநிலை கண்டோம்; அப்பால்**
**அதுகண்டோம்; அப்பாலாம் அதுவும் கண்டோம்;**
**ஏன்ற உபசாந்திநிலை கண்டோம்; அப்பால்**
**இருந்தநினைக் காண்கிலோம் என்னே என்று**
**சான்ற உபநிடங்கள் எல்லாம் வழுத்தநின்ற**
**தன்மயமே சின்மயமே சகசத்தேவே!"**

என்ற பாடலில், உபநிடதங்கள்-பரதுரியநிலையினைக் கண்டு அதற்கு அப்பால் உள்ள சிவசாக்கிரம் சிவசொப்பனம் சிவசுழுத்தி சிவதுரியம் முதலியவற்றைக் கண்டதாகவும்-அதற்கு அப்பால் இருந்த கடவுளைக் காண முடியவில்லை என்றும் வள்ளற்பெருமான் தெரிவிக்கிறார்கள்.

பரசாக்கிரம் முதலாக சிவதுரியம் வரை உள்ள அனுபவங்களையும்-அதற்கும் மேலாக சமரச சுத்த சன்மார்க்க நெறியில் மட்டுமே அனுபவமாகும் சுத்தசிவ சாக்கிரம் சுத்தசிவ சொப்பனம் சுத்தசிவ துரியம் சுத்தசிவ துரியாதீதம் ஆகிய அனுபவங்களையும்-தாம் பெற்றது குறித்து வள்ளற்பெருமான் பின்வரும் பாடல்களில் தெரிவிக்கிறார்கள்.

**"துருவுபர சாக்கிரத்தைக் கண்டுகொண்டேன்; பரம**

**சொப்பனங்கண்டேன்; பரமசுழுத்தியும் கண்டுணர்ந்தேன்;**
**"குருபிரம சாக்கிரத்தைக் கண்டேன்; பின்பிரமம்**
**குலவிய சொப்பனம் கண்டேன்; சிவசுழுத்தி கண்டேன்**
**குருதுரியம் காண்கின்றேன்; சமரச சன்மார்க்கம்**
**கூடினேன்; பொதுவில் அருட்கூத்தாடும் கணவர்**
**மருவிடப்பெற்று அவர் வடிவம் நான் ஆனேன்; களித்து**
**வாழ்கின்றேன் எதிரற்ற வாழ்க்கையில் என்தோழி!"**

**"தனிப்படுமோர் சுத்தசிவ சாக்கிர நன்னிலையில்**
**தனித்திருந்தேன்; சுத்தசிவ சொப்பனத்தே சார்ந்தேன்;**
**கனிப்படுமெய்ச் சுத்தசிவ சுழுத்தியிலே களித்தேன்;**
**கலந்துகொண்டேன் சுத்தசிவ துரியநிலையது வாய்;**
**செனிப்பிலதாய் எல்லாமாய் அல்லதுவாய் சுத்த**
**சிவதுரியா தீதத்தே சிவமயமாய் நிறைந்தேன்!**
**இனிப்புறுசிற் சபைஇறையைப் பெற்ற பரிசதனால்**
**இத்தனையும் பெற்றுஇங்கே இருக்கின்றேன் தோழி!"**

'இத்தனையும் பெற்று இங்கே இருக்கின்றேன்' என்று வள்ளற்பெருமான் கூறுவது-சுத்தசிவ துரியாதீதத்தே-உடம்பு 'தீயில் கற்பூரம் போல்' கரைந்துவிடாமல், உணர்வோடு மரணமிலாப் பெருவாழ்வில் அவர்கள் வாழ்ந்துகொண்டிருப்பதை குறிப்பாக அமைந்து உள்ளது.

**"நான்புகலும் இம்மொழி இதுகேள் என்னுடைய**
**தோழிநாயகனார்தனிஉருவம்**
**நான்தழுவும் தருணம், வான்புகழும் சுத்தசிவ சாக்கிரம்**
**என்றுணர்ந்தோர் வழுத்துநிலை ஆகும்"**

என்று கடவுளைப் புறத்தில் தழுவும் நிலை சுத்தசிவ சாக்கிரம் என்றும்,

**"வான்பதிக்கும் கிடைப்பரியார் சிற்சபையில் நடிக்கும்**
**மணவாளர் எனைப் புணர்ந்த புறப்புணர்ச்சி தருணம்**
**தான்பதித்த பொன்வடிவம் தனை அடைந்து களித்தேன்"**

என்ற பாடலில் கடவுளை புறத்தில் தழுவும்போது உடம்பு பொன்னாகும் என்று கூறுவதையும்-தொடர்புபடுத்திச் சிந்தித்தால், சுத்தசிவ சாக்கிரம் என்ற உணர்வு நிலையில் உடம்பு பொன்னாகும் என்ற உண்மையினை அவர்கள் வெளிப்படுத்தி இருப்பதைக் கண்டுகொள்ள முடியும்.

**"பெரியசிவ அனுபவத்தால் சமரச சன்மார்க்கம்**
**பெற்றேனிங் கிறவாமை உற்றேன்"**

என்ற பாடலில் 'பெரியசிவஅனுபவம்' என்று அவர்கள் குறிப்பது, சுத்தசிவ சாக்கிரம் என்ற உணர்வு நிலை அனுபவத்தையே என்பதில் ஐயம் இல்லை.

## 5. <u>காலத்தால் என்றும் அழியாத உடம்பு</u>

சமய மத சன்மார்க்க நெறிகளிலும், தேகசித்தி-சாகாக்கலை உண்டு என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். அவற்றில் கூறப்பட்டுள்ள நெறியில் பழகி கிடைக்கப்பெறும் சாகாஉடம்பு-பொன்வடிவம்-சுவர்ணதேகம்-நெடுங்காலம் இருந்தாலும், காலத்தால் அழியக் கூடியதே என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள்.

ஐந்து மாற்றுள்ள சுவர்ணதேகியாகிய பிரம்மாவின் ஆயுள் நான்கு லட்சத்து முப்பத்து இரண்டாயிரம் ஆண்டுகள், ஆறு மாற்றுள்ள சுவர்ண தேகியாகிய விஷ்ணுவின் ஆயுள் எட்டு லட்சத்து அறுபத்து நான்காயிரம் ஆண்டுகள் என்று கூறி, எட்டு மாற்று ஒன்பது மாற்று உள்ள சுவர்ண தேகிகளின் ஆயுள்பற்றியும் விவரிக்கிறார்கள்.

ஆனால் 'ஜீவகாருணிய ஒழுக்கம்' நூலில் பேரின்ப லாபத்தை அடைந்தவர் பெருமையை விளக்கும்போது, பேரின்ப லாபத்தை அடைந்தவர்கள் மாற்று இவ்வளவு என்று அறியாத உயர்ந்த பொன்னாகிய சுத்ததேகத்தையும் பிரணவதேகத்தையும் ஞானதேகத்தையும் பெற்றவர்களாய் இருப்பார்கள். என்று வள்ளற்பெருமான் குறிப்பிடுவதில் இருந்து, ஜீவகாருணிய நெறியில் நின்று சுவர்ணதேகம் பெறுவோரின் ஆயுளுக்கு முடிவே இல்லை. அவர்கள் மரணத்தை வென்று காலத்தால் தடைபடாது வாழ வல்லவர்கள் என்பதைப் புலப்படுத்தியிருக்கிறார்கள் என்று உணரலாம்.

## <u>5.ஐந்தொழில் புரியும் ஆற்றல்</u>

**"ஒளிமருவும் உனது திருஅருள் அணுத் துணையேனும் உற்றிடில்
சிறுதுரும்பும் உலகம்படைத்தல் முதல் ஐந்தொழில் இயற்றும்"**

**"அருள்பெறில் துரும்பும்ஓர் ஐந்தொழில் புரியும்
தெருள்இது எனவே செப்பிய சிவமே"**

என்று கூறி, திருவருளைப் பெற்றால் படைத்தல் முதல் ஐந்தொழிலையும் செய்யக்கூடும் என்ற கருத்தினை வள்ளற்பெருமான் மிகத் தெளிவாக வலியுறுத்துகிறார்கள். படைத்தல் காத்தல் மறைத்தல் அழித்தல் அருளுதல் ஆகியன ஐந்தொழில் எனப்படும்.

'ஜீவகாருணிய ஒழுக்கம்' உரைநடை நூலில் பேரின்ப லாபத்தைப் பெற்றவர்கள் நரை திரை பிணி மூப்பு மரணம் இல்லாத சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் முதலான உடம்புகளைப் பெற்றவர்களாய் இருப்பார்கள் என்றும், படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களும் அவர்கள் நினைத்த மாத்திரத்தில் நடக்கும் என்றும் வள்ளற்பெருமான் விளக்கமாக கூறுகிறார்கள்.

**"பன்னுகின்ற தொழில் ஐந்தும் செய்திடவேப் பணித்து
பண்புற என்அகம் புறமும் விளங்குகின்ற பதியே"**

**“ஓதஉலவா ஒருதோழன் தொண்ட ருளன்
சாதல்ஒழித்து என்னைத் தானாக்கிப் பூதலத்தில்
ஐந்தொழில் செய்என்றே அருட்சோதிக்கோல் அளித்தான்
வெந்தொழில் போய்நீங்க விரைந்து”**

என்ற பாடலில் சாகாக்கலையில் அவர்கள் பெற்ற வெற்றியுடன், அவர்கள்பால் விலங்கும் ஐந்தொழில்செய் வல்லமையினையும் இணைத்துப்பேசுவது எண்ணிப்பார்க்க வேண்டிய ஒன்றாகும். ‘வெந்தொழில் போய்நீங்க’ அவர்கள் ஐந்தொழில் செய்வதாக கூறும் கருத்து,

**“உலகுயிர்த் திரள்எலாம் ஒளிநெறி பெற்றிட
இலகும் ஐந்தொழிலையும் யான்செய்த தந்தனை!”**

என்று அருட்பெருஞ்ஜோதி அகவல் அடிகளிலும் காணப்படுவது கவனிக்கத்தக்கது. வள்ளற்பெருமான் பேருபதேசம் செய்யுங்கால் ஆன்ம அறிவை மறைத்திருக்கின்ற திரைகளில், பொன்மையில் பச்சை வண்ணமுடைய சுத்த மாயாத்திரை நீங்கியதும் ஐந்தொழில்செய்யும் ஆற்றல் உண்டாகும் என்று விளக்கி இருப்பது கவனிக்கத்தக்கது.

## 6. <u>இறந்தாரை எழுப்பும் ஆற்றல்</u>

‘நெற்றிக்கண்ணைத் திறந்து கொண்ட ஞானி-ஒரு பிரதேத்தை தயவோடு பார்த்த மாத்திரத்தில் அது உயிர்பெற்று எழும்’ என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். இறந்தபின் கல்லறையில் அடக்கம் செய்யப்பட்ட ‘லாசரஸ்’ என்பவரின் உடலுக்கு உயிர் கொடுத்து ஏசுநாதர் எழுப்பிய வரலாறு பைபிளில் கூறப்பட்டுள்ளது. இமயமலை பத்திரிநார் பகுதியில் பாபாஜி என்ற சித்தர்-மலை உச்சியில் இருந்து வீழ்ந்து உடல் பல துண்டங்களாகி இறந்தவர் ஒருவரை-சிதறிய துண்டங்களை எல்லாம் சேர்த்துக் குவித்து அவற்றை உடலாக்கி உயிர்பெறச் செய்த நிகழ்ச்சி ‘ஒரு யோகியின் தன் வரலாறு’ என்ற நூலில் காணப்படுகிறது.

இறைவன், தனக்கு இருப்பது போன்ற நெற்றிக் கண்ணை வள்ளறெபெருமானுக்கும் தந்தான் என்று திருவருட்பா ‘மெய்யருள்வியப்பு மாலை’ தெரிவிக்கிறது. நெற்றிக்கண் திறக்கப்பெற்றால் இறந்தோரை எழுப்பும் ஆற்றல் கிட்டும் என்று வள்ளற்பெருமான் கூறுவதால் இறந்தோரை எழுப்பும் ஆற்றல் அவர்கள்பால் விளங்கியிருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. இதனை,

**“மாய்ந்தவர் மீட்டும் வருநெறிதந் திதை
ஆய்ந்திடென்று உரைத்த அருட்பெருஞ்ஜோதி”!**

**“யான்புரிதல் வேண்டுங்கொல் இவ்வுலகில் செத்தாரை
ஊன்புரிந்து மீண்டும் உயிர்ப்பித்தல்-வான்புரிந்த
அம்பலத்தான் நல்அருளால் அந்தோ நான் மேற்போர்த்த
கம்பலத்தால் ஆகும் களித்து”**

என்பன போன்ற அருட்பாக்களால் அறியலாம்.

சன்மார்க்கநெறியிலும் சாகாக்கலையிலும் மக்களுக்கு நம்பிக்கையையும் ஆர்வத்தையும் உண்டாக்கி, சன்மார்க்கநெறியைத் தழைக்கச் செய்வதற்காக, தம்பால் விளங்கிய இறந்தாரை எழுப்பும் ஆற்றலைப் பயன்படுத்த வள்ளற்பெருமான் விரும்பினார்கள். இதனை அவர்களது 'சாலை சம்பந்திகளுக்கு இட்ட சமாதிக் கட்டளை'யின் மூலம் அறியலாம். இதில், சத்திய தருமச்சாலைக்கு ஏதாவது ஒரு வகையில் தொண்டு செய்த அன்பர்கள் இறந்தால் உடம்பை சமாதியில் வைக்க வேண்டும் என்றும், சன்மார்க்க சங்கத்தையும் தருமச்சாலையையும் விருத்தி செய்வதற்காக, கடவுள் முன்கூறியவாறு, சமாதியில் வைக்கப்பட்டவர்களை எழுப்பித்தர இருக்கிறார் என்று அறிவித்தார்கள். இந்த அறிவிப்பு 30-3-1871 ல் அவர்களால் வெளியிடப்பட்டது. ஆனால் 9-3-1873 ல், அவர்கள் சத்திய தருமச்சாலையால் தமக்கு 'மிகவும் சலிப்பு உண்டாகிறது' என்றும் அந்த சலிப்பு இரண்டு பக்கமும் உபத்திரவம் பண்ணும்' என்றும், சாலையில் இருக்கிறவர்கள் எல்லாம் சன்மார்க்கத்துக்கு இத்து வாயடங்கி மனமடங்கி இருக்க வேண்டும். என்மேல் பழி இல்லை. சொல்லிவிட்டேன். பின்பு வந்ததைப் படவேண்டும். என்றும் மிகவும் மனம் நொந்து ஓர் அறிவிப்பை வெளியிட்டார்கள். இதிலிருந்து இறந்தாரை எழுப்பித்தரும் வாக்குறுதியை அவர்கள் வெளியிட்ட பின்னும்கூட, 1871 முதல் சாலையில் இருந்தவர்கள் சன்மார்க்க நெறியில் இல்லை என்பதோடு-வாயடங்கி மனமடங்கி வாழும் சாதாரண அடிப்படை ஒழுக்கங்களைக் கூட பின்பற்றாமல் இருந்திருக்கிறார்கள் என்பதும் புலனாகிறது.

'அற்புதம் விளங்குவது மெய்யோ பொய்யோ! இந்தக் காலமோ எந்தக் காலமோ!' என்றும், 'அற்புதம் விளங்குவதாக நம்பி பொருள் வகையாலும், தேகவகையாலும் உழைப்பெடுத்துக்கொண்டு பின்பு நிட்டூரப்பட்டுக்கொள்ள வேண்டாம்' என்றும் ஓர் அறிவிப்பை 8-9-1873 ல் வெளியிட்டார்கள். இந்த அறிவிப்பில் இருந்து சாலையில் இருந்த சன்மார்க்க அன்பர்களின் நெறியற்ற போக்கினால் இறந்தாரை எழுப்பும் அருட்செயலை ஒத்திவைக்கவும் தேவைப்பட்டால் நிறுத்திவைக்கவும் அவர்கள் முடிவு செய்திருந்தார்கள் என்பது புலனாகிறது.

'இறந்தாரை எழுப்புதல்' முதலிய அற்புதங்களை நிகழ்த்தி சன்மார்க்கநெறியினை பரவச் செய்யும். எண்ணத்தைக் கைவிட்டபின்பு வள்ளற்பெருமான், 1873 ஆம் ஆண்டு இறுதியில் (நவம்பர், டிசம்பர் பக்கமாக) 'இப்போது இந்த உடம்பில் இருக்கிறேன். இனி எல்லா-உடம்புகளிலும் புகுந்து கொள்வேன்' என்ற அறிவிப்பை வெளியிட்டார்கள். 1874 ஆம் ஆண்டு ஜனவரியில் மேட்டுக்குப்பம் சித்திவளாகத்தில் அவர்கள் திருக்காப்பிட்டுக் கொண்டார்கள். இவ்வாறு அவர்கள் திருக்காப்பிட்டுக் கொண்டது எல்லா உடம்புகளிலும் புகுந்து அருளியல் வேதிமாற்றங்களை உண்டாக்கி காலப்போக்கில் சன்மார்க்க நெறியில் எல்லா உயிர்களையும் நிலைபெறச் செய்வதற்கே என்பது தெளிவு.

## 7. முழுமையான விளக்கம்

திருஅருட்பாக்கள், உரைநடை நூல்கள், வாய்மொழி உபதேசங்கள் ஆகியவற்றின் வாயிலாக வள்ளற்பெருமான் சாகாக்கலையினைப் பற்றிய உண்மைகள்-அனுபவங்கள், அதனைப் பயிலுதற்குரிய நெறிமுறைகள் ஆகியவற்றை முழுமையான நிலையில் உலகிற்கு அறிவித்திருக்கிறார்கள். சாகாக்கலையினை அறியவும் பழகவும் வேண்டும் என்ற குறிக்கோள் உடையவர்களுக்கும் திருஅருட்பா

மிகச் சிறந்த முழுமையான வழிகாட்டுதலை வழங்கி இருக்கிறது என்பதில் எந்த ஐயமும் இல்லை.

சாகாக்கலையின் முன்பகுதியாக விளங்கும் ஆயுள் நீடிப்பிற்கு மூலிகைகளைப் பயன்படுத்துதல் எளிய சிறந்த வழி என்று கூறலாம். எளிதில் எங்கும் கிடைக்கக்கூடிய-பயிரிடக்கூடிய-மூலிகையான கரிசலாங்கண்ணியைப் பயன்படுத்தி நீண்ட ஆயுளைப் பெறலாம். என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள்.

இல்லறத்தார்-உணவு இணைவிழைச்சு (போகம்) உறக்கம் முதலியவற்றை அளவுபடுத்திக்கொள்வதாலும், அச்சத்தைத் தவிர்த்துக்கொள்வதாலும் நீண்ட ஆயுளைப் பெறமுடியும் என்று வலியுறுத்துகிறார்கள்.

கடவுளிடத்தில் இலட்சியமும் ஜீவர்களிடத்தில் தயவும் உலகியலுக்கு காமம் நீங்கும் என்றும், அவனுக்கு நீண்ட ஆயுள் உண்டாகும் என்றும் விளக்குகின்றார்கள்.

நாம் பெற வேண்டிய பேறுகளில் ஒன்றாக சாகாக்கல்வியைச் கூறி-அதனைப் பெறத் தேவையான இந்திரிய ஒழுக்கம் கரண ஒழுக்கம் ஜீவ ஒழுக்கம் ஆன்ம ஒழுக்கம் ஆகியவற்றைப் பற்றி ‘உண்மைநெறி’ என்னும் தலைப்பில் வள்ளற்பெருமான் வகை விவரமாக கூறுகிறார்கள்.

இறைவனை நினைந்து, உணர்ந்து, நெகிழ்ந்து, அன்பே நிறைந்து, ஊற்றெழும் கண்ணீரினால் உடம்பு நனைந்து, உருகி பாடிப் பணிந்து அன்புருவமானால் மரணமிலாப் பெருவாழ்வு கிட்டும் என்று சத்தியம் செய்து உரைக்கின்றார்கள்.

ஜீவகாருணிய ஒழுக்கத்தில் நின்று கடவுள் அருளைப் பூரணமாகப் பெற்றால்-சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் ஆகியவற்றைப் பெற்று மரணத்தை வென்று வாழும் பேரின்ப வாழ்வு கிட்டும் என்று உபதேசிக்கிறார்கள்.

இவ்வாறு சாகாக்கலையினைப் படித்தரமாக வள்ளற்பெருமான் விளக்கி இருக்கிறார்கள். சாகாக்கலையினைப் பயில விரும்புவோர் அவரவர்தம் பக்குவத்திற்கேற்ப மேற்கண்ட நெறிகளைக் கடைப்பிடித்து பயன்பெறமுடியும் அல்லது ஒருவரே கரிசலாங்கண்ணி மூலிகையினைப் பயன்படுத்தத் தொடங்கி படிப்படியாக மற்ற பயிற்சிகளையும் மேற்கொண்டு மரணத்தை வெல்லமுடியும்.

## 8. வீழ்ச்சிக்கு இடம்தராத வழிகாட்டுதல்

‘காலம் தாழ்த்தாது எல்லா உயிரையும் தன் உயிர்போல் பார்க்கும் பாவனையை உடனே வரவழைத்துக் கொள்ள வேண்டும் என்றும், இந்த நிலையினை எய்தியவன் இறந்தவரை எழுப்பும் வல்லமை உடையவன்’ என்றும், ‘அவனே கடவுள் நிலையினைப் பெற்றவன்’ என்றும் வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். இறந்தவரை எழுப்பும் வல்லமை உடையவன் முதலில் தான் மரணத்தை வென்றவனாய் இருத்தல் வேண்டும். ஆதலால் இந்த உபதேசத்தின் மூலம் வள்ளற்பெருமான், எல்லா உயிரையும் தன் உயிர்போல் பார்ப்பவன் சாகாஉடம்பு பெற்று மரணத்தை வென்று வாழவல்லவனாக விளங்குவான் என்ற

உண்மையினைத் தெரிவிக்கிறார்கள் என்றே கொள்ள வேண்டும். மேலும், வேறு சாதனங்களை (பயிற்சிகளை) மேற்கொள்ள வேண்டாம் என்றும் கூறுகிறார்கள். வேறு பயிற்சிகளை மேற்கொண்டால் சிறுஒளி (சிறு சித்திகள்) உண்டாகும். அதைக் கண்டு அகங்கரித்து மயங்கி பல் இளித்து இறுமாந்து தடைபட்டு நின்று மரணமிலாப் பெருவாழ்வினைப் பெறும் குறிக்கோள் தவறிவிடும் வாய்ப்பு இருக்கிறது என்றும் எச்சரிக்கை செய்து வழிகாட்டி இருக்கிறார்கள்.

## 9. <u>சிறந்த இலக்கிய உத்திகளைக் கையாண்டு சாகாக்கலையினை விளக்கி உள்ள சிறப்பு</u>

வள்ளற்பெருமானின் திருஅருட்பாக்கள் எளியவை, இனியவை, உள்ளத்தை உருக்கும் தன்மை உடையவை. அவர்களது பாக்களில் காணப்படும் சொல்லோட்டமும், எதுகையும், மோனையும், ஓசையும் வேறு எவருடைய பாடல்களிலும் இல்லை என்றே துணிந்து கூறலாம். இத்தகைய சிறப்புக்களோடு அமைந்துள்ள ஈடும் எடுப்பும் அற்ற பாக்களில் சாகாக்கலையினை அவர்கள் விளக்கி இருக்கிறார்கள்.

**"கற்றேன் சிற்றம்பலக் கல்வியை; கர்று, கருணை நெறி**
**உற்றேன்! எக்காலமும் சாகாமல் ஓங்கும் ஒளிவடிவம்**
**பெற்றேன்! உயர்நிலை பெற்றேன்! உலகின் பிறநிலையைப்**
**பற்றேன்! சிவானந்தப் பற்றே என் பற்றெனப் பற்றினனே!"**

என்ற அவர்களது பாடலில் எதுகையும் மோனையும் ஒசையும் சொல்லோட்டமும் இனிமையும் எளிமையும் அமைந்திருப்பது மட்டும் இன்றி, வள்ளற்பெருமான் சாகாநிலை பெற்றமை, அந்நிலையினைப் பெற-அவர்கள் உயிர் இரக்கத் திருநெறியினை பின்பற்றியமை முதலான செய்திகளையும் சுருக்கமாகவும் தெளிவாகவும் அற்புதமாகவும் விளக்கி இருக்கிறார்கள்.

### <u>அகத்துறையில் அமைந்த பாடல்கள்</u>

உள்ளும் புறமும் காதல் உணர்வுப் பெருக்கெடுத்தோடும் அகத்துறைப் பாடல்களாலும் வள்ளற்பெருமான் சாகாக்கலையினைப் பற்றிய செய்திகளை கூறுகிறார்கள்.

**"தாயினும்பேர் அருளுடையார், என்னுயிரில் கலந்த**
**தனித்தலைவர், நான்செய்பெருந்தவத்தாலே கிடைத்தார்,**
**வாயினும்ஓர் மனத்தினும்மா மதியினும் எத்திறத்தும்**
**மதித்தளத்திற்கு அருந்துரிய மன்றில் நடம் புரிவார்**
**ஆயினும்என் அளவில் மிகஎளியர் என என்னை**
**அகம்புணர்ந்தார் புறம்புணர்ந்தார் புறப்புணர்ச்சி தருணம்**
**தூயஒளி பெற்றுஅழியாது ஒங்குவடி வானேன்**
**சுகமயமாகும் அகப்புணர்ச்சி சொல்லுவது எப்படியோ"**

என்பது போன்ற அகத்துறையில் அமைந்த பாடல்கள் பலவற்றில் சாகாக்கலையினை வள்ளற்பெருமான் விளக்கி இருக்கிறார்கள்.

3. <u>இசைப்பாடல்கள்</u>

“ஆடேடி பந்து ஆடேடி பந்து ஆடேடி பந்து ஆடேடி பந்து
இன்பாலே உலகத்தார் எல்லாரும் காண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்”

“இசையாமல் போனவர் எல்லாரும் நாண
இறவாப் பெருவரம் யான் பெற்றுக்கொண்டேன்”

“ஏகாந்த மாகிய ஜோதி-என்றும்
என்னுள் பிரியாது இருக்கின்ற ஜோதி
சாகாத வரம் தந்த ஜோதி - என்னைத்
தானாக்கிக் கொண்டதோர் சத்திய ஜோதி”

“ஊகமிவேன் பெற்ற தேகம் அழியாத
யோகம் கொடுத்தீரே வாரீர்
போகம் கொடுத்தீரே வாரீர்”

“இறவா வரம்தரு நற்சபையே
எனமறை புகழ்வது சிற்சபையே”

“என்னிரு கண்ணினுள் இருந்தவனே
இறவாது அருளும் மருந்தவனே”

என்பன போன்ற வள்ளற்பெருமானின் இசைப்பாடல்கள் சாதாரண மக்களுக்கும் சாகாக்கல்வியை அறிமுகம் செய்கின்றவையாய்த் திகழ்கின்றன.

<u>4.சாகாக்கலையினை ஆன்மநேயத்துடன் வலியுறுத்தும் பான்மை</u>

ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையே வடிவாக விளங்கிய வள்ளற்பெருமான் மக்கட் பிறப்பினர் அனைவருக்கும் சாகாக்கலையினை வலியுறுத்தி உபதேசிக்கும் பாடல்கள் பலவற்றைத் திருஅருட்பாவில் காணலாம்.

“நாறாத மலர்போலும் வாழ்கின்றீர்! மூப்பு
தத்துவ மரணத்துக்கு என்செயக் கடவீர்”

“காமத்துர் ஆகாத தரம்சிறிது உணரீர்!
தத்துவ ஞானத்தை இற்றெனத் தெரியீர்!”

“கூடுவிட்டுப் போயினபின் எதுபுரிவீர்! எங்கே
குடிஇருப்பீர்! ஐயோ! நீர் குறித்து அறியீர்”

“ஐவிளக்கு மூப்பு மரணாதிகளை நினைத்தால்
அடிவயிற்றை முறுக்காதோ! கொடியமுயற் றுலகீர்!”

**"ஐவகைய பூதஉடம்பு அழிந்திடில் என்புரிவீர்!**
**அழிஉடம்பை அழியாமை ஆக்கும்வகை அறியீர்!"**

**"சினமுடைய கூற்றுவரும் செய்தி அறியீரோ!**
**செத்துநுமது இனத்தாரை சிறிது நினையீரோ!"**

என்றெல்லாம் வள்ளற்பெருமான் உலகோருக்கு அறிவுறுத்தி, மரணத்தை வெல்லும் நெறியினைக் கடைப்பிடிக்குமாறு அடுத்தடுத்து மன்றாடி வேண்டுகிறார்கள்.

**"நீர்பிறரோ! யான் உமக்கு நேயஉற வலனோ!**
**நெடுமொழியே உரைப்பன் அன்றிக் கொடுமொழி சொல்வேனோ!"**

**"ஊனேயும் உடலழியா தூழிதொறும் ஓங்கும்**
**உத்தமச் சித்தியைப் பெறுவீர்! சத்தியம் சொன்னேனே!"**

**"உற்றமொழி உரைக்கின்றேன், ஒருமையினால்! உமக்கே**
**உறவன் அன்றி பகைவன் என உன்னாதீர், உலகீர்!**
**கற்றவரும் கல்லாரும் அழிந்திடக் காண்கின்றீர்!**
**கரணம்எலாம் கலங்கவரும் மரணமும்சம் மதமோ!**
**சற்றும் இதசிச் சம்மதியாது என்மனந்தான் உமது**
**தன்மனந்தான் கன்மனமோ வன்மனமோ அறியேன்!**
**இற்றிதனைத் தடுத்திடலாம் என்னொடும் சேர்ந்திடுமின்**
**என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம் தானே"**

வள்ளற்பெருமான் மரணமிலாப் பெருவாழ்வினை தாம் பெற்றதோடு நிறைவடையாது, தாயன்போடு மக்களை அறைகூவி அழைத்து, சாகாக்கலையினை பயின்று பெருவாழ்வு வாழுமாறு அறிவுறுத்துகிறார்கள். சித்தர்களின் இலக்கியங்கள், ஆகமங்கள் முதலியவற்றில் சாகாக்கலை கூறப்பட்டிருப்பினும், வள்ளற்பெருமான் வலியுறுத்தி அழைக்கும் அளவுக்கு அவை சாகாக்கலையினைப் பயில வருமாறு மக்களை அழைப்பதாகத் தெரியவில்லை.

## 10. <u>பெண்களுக்கும் உரிமைதரும் பாங்கு</u>

**"பாடகக்கால் மடந்தையரும் மைந்தரும் சன்மார்க்கப்**
**பயன்பெற நல்அருள் அளித்த பரம்பரனே"**

என்றுகூறி, வள்ளற்பெருமான், பெண்களும் சன்மார்க்கப் பயன்பெற சாகாக்கலையினைப் பயின்று பயன்பெற-உரிமை உடையவர்கள் என்று புலப்படுத்து கின்றார்கள்.

பெண்களுக்கு எவ்வித வேறுபாடும் இல்லாமல் கல்வி அளித்து தத்துவங்களைத் தெரிவிக்க வேண்டும் என்றும், யோகம் முதலிய பயிற்சிகளை கற்பிக்க வேண்டும் என்றும் அவர்கள் வலியுறுத்துகிறார்கள். சாகாக்கலையின் ஆசிரியர்கள் எவரும் பெண்களும் சாகாக்கலையினைப் பயிலுதல் வேண்டும் என்று வள்ளற்பெருமான் அளவுக்கு வலியுறுத்திக் கூறவே இல்லை.

11. <u>மறைமொழிகளையும் அருள்நெறியுடன் இணைத்துள்ள மாண்பு</u>

சாகாததலை வேகாக்கால் போகாப்புனல் என்பவை சித்தர் நூல்கள் பலவற்றிலும் மீண்டும் மீண்டும் கூறப்படும் பொருள்கள் மறைமொழிகளால் கூறப்படும் இவற்றின் உண்மையை எவரும் எளிதில் விளங்கிக்கொள்ள இயலாத நிலையில் இவை அந்நூல்களில் இடம்பெற்றுள்ளன. ஆயினும் இம் மறைமொழிகளால் சித்தர்கள் குறிக்கும் உட்பொருள்களை வெளிப்படையாக வள்ளற்பெருமான் கூறுகின்றார்கள். மேலும் சாகாத்தலை என்பது அருள், வேகாக்கால் என்பது அன்பு, போகாப்புனல் என்பது இரக்கம் என்று புதிய பொருளையும் கூறி, இவை சாகாக்கல்வியைத் தெரிவிக்கும் என்றும் கூறுகிறார்கள். இத்தகைய விளக்கத்தால் சித்தர்களின் மறைமொழிகளையும் வள்ளற்பெருமான் தாம் விளக்கும் அருள்நெறி சார்ந்த சாகாக்கல்விக்கும் பொருத்தமுடையதாக்கி உபதேசித்திருக்கிறார்கள் என்று கொள்ள வேண்டும்.

<u>ஒப்பில்லா உயர்நிலை</u>

வள்ளற்பெருமான் விளக்கும் சாகாக்கலையில் மேற்கூறப்பட்ட தனித்தன்மைகளுடன் விளக்கம் காண முடியாத சிற்சில உயர்நிலை அனுபவங்கள் பற்றிய குறிப்புக்களும் காணப்படுகின்றன.

**“பொற்பங்கயத்தின் புதுநறவும் சுத்த சலமும் புகல்கின்ற**
**வெற்பந் தரமா மதிமதுவும் விளங்கு பசுவின் தீம்பாலும்**
**நற்பஞ் சகமும் ஒன்றாகக் கலந்து மரண நவைதீர்க்கும்**
**கற்பம் கொடுத்தாய் நின்தனக்குக் கைம்மா றேது கொடுப்பேனே”**

என்ற பாடலில் அற்புதமான ஓர் அருளனுபவம் உடலை அழியாமல் ஆக்கும் கற்ப மருந்தாக அமைவது பற்றி தெரிவிக்கிறார்கள்.

**“சாகாதகல்வியிலே தலைக்காட்டிக் கொடுத்தீர்!**
**போகாத புனலாலே சுத்த உடம் பினராம்**
**புண்ணியரும் நண்ணரிய பொதுநிலையும் தந்தீர்!”**

என்று கூறி, சாகாஉடம்பு பெற்றவர்களும் பெறுதற்கரிய அருட்பேறு ஒன்று இருப்பது பற்றி குறிப்பாக அவர்கள் தெரிவிக்கிறார்கள். இத்தகைய பாடல்களுக்கு ஆய்வு முறையில் பொருள் காணுவது எளிது அன்று ஆயினும்,

**“உன்னைவிடமாட்டேன் நான், உன் ஆணை! எம்பெருமான்**
**என்னைவிடமாட்டாய்! இருவருமாய்.... மன்னிஎன்றும்**
**வண்மைஎலாம் வல்ல வாய்மைஅருளால் உலகுக்**
**குண்மைஇன்பம் செய்தும் உவந்து!”**

என்ற அவர்களது பாடலில் இருந்து-கடவுளோடு கலந்து நின்று உயிர்களுக்கு உதவியவாறு மரணமின்றி கடவுளைப் போல் வாழ்வதே சுத்த உடம்பினராம்

புண்ணியரும் பெறுதற்கரிய பொதுநிலை என்ற முடிவு ஒருவாறு நமக்குக் கிட்டுகிறது. இனி திருஅருட்பா விளக்கும் சாகாக்கலைப் பயிற்சிகளை அடுத்த இயலில் காண்போம்.

## அடிக்குறிப்புகள்

1. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 333
2. ஊரன் அடிகள், வள்ளலார் மறைந்தது எப்படி, பக்கம் 205
3. ஞானேச்சுவரி, பக்கம் 200-202
4. கடோபநிஷத் பொருள் விளக்கம், பக்கம் 72
5. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4745
6. திருமந்திரம் மூவாயிரம், பாடல் 135
7. மேலது, பாடல் 555
8. மேலது, பாடல் 714
9. மேலது, பாடல் 584
10. மேலது, பாடல் 779
11. மேலது, பாடல் 781
12. மேலது, பாடல் 2542
13. மேலது, பாடல் 2066
14. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4960
15. திருமந்திரம் மூவாயிரம், பாடல் 1450
16. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4636
17. மேலது, பாடல் 4740
18. மேலது, பாடல் 5510
19. மேலது, பாடல் 4675
20. மேலது, பாடல் 5391
21. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 77-70
22. பதினெண் சித்தர்கள் பெரிய ஞானக்கோவை, இடைக்காட்டுச்சித்தர் பாடல், கண்ணி 65
23. மேலது, இடைக்காட்டுச் சித்தர் பாடல், கண்ணி 65
24. மேலது, திருவள்ளுவர் ஞானம், பாடல் 10
25. திருமூலர் வைத்தியம், 145
26. சி.கண்ணுசாமிப் பிள்ளை, கண்ணுசாமிப் பரம்பரை வைத்தியம், பக்கம் 12
27. திருவள்ளுவ நாயனார் கற்பம் 300, பக்கம் 30
28. மேலது, பக்கம் 39
29. மேலது, பக்கம் 30
30. பதினெண் சித்தர் பெரிய ஞானக்கோவை, மே.கா.நூ., சிவவாக்கியர் பாடல், 5
31. மேலது, சிவவாக்கியர் பாடல் 70
32. வைத்திய வாதயோக ஞான சாஸ்திரத் திரட்டு, நான்காம் புத்தகம், கூர்மானந்தர் ஞானசூத்திரம் 50, பாடல் 10
33. மேலது உரோம ரிஷி ஞானம் பாடல் 11
34. மேலது, உரோம ரிஷி ஞானம் பாடல் 12
35. திருஅருட்பா உரைநடைப் பகுதி, பக்கம் 77-79
36. திருவாசகம், கோயில் மூத்த திருப்பதிகம், பாடல் 8
37. திருவாசகம், திருவண்டப்பகுதி, அடி 177
38. முத்துத் தாண்டவர் கீர்த்தனைகள், பக்கம் 52

39. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4826
40. சித்தர் பாடல்கள், ஞானக்கும்மி, பாடல் 135
41. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 311
42. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5576
43. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 51
44. மேலது, பாடல், பக்கம் 77
45. திருஅருட்பா ஆறாம் திருமுறை பாடல் 5106
46. மேலது, பாடல், 5111
47. மேலது, பாடல் 4745
48. மேலது, பாடல் 4960
49. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 268
50. மேலது, பக்கம் 316-247
51. ஔவைக் குறள், பாடல் 243
52. மேலது, பாடல் 238
53. வாதஞான செள்மியம் 1200, பாடல் 1075-1080
54. Sir John Woodroffe, The Serpent Power, PP. 320-323
55. திருஅருட்பா உரைநடைப் பகுதி, பக்கம் 267
56. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 332
57. திருஅருட்பா உரைநடைப் பகுதி, பக்கம் 266
58. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள், பாடல்கள் 3228, 3229
59. திருஅருட்பா ஆறாம் திருமுறை பாடல், 4964
60. மேலது, பாடல் 3529
61. கட்டளைத் திரட்டு, பக்கம் 33
62. மேலது, பக்கம் 33
63. திருமந்திரம் மூவாயிரம், பாடல் 2427
64. திருஅருட்பா உரைநடைப் பகுதி, பக்கம் 268
65. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள், பாடல் 2133
66. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5808
67. மேலது, பாடல் 5809
68. மேலது, பாடல் 5788
69. மேலது, பாடல் 5807
70. மேலது, பாடல் 5806
71. திருஅருட்பா உரைநடைப் பகுதி, பக்கம் 284
72. மேலது, பக்கம் 335-336
73. மேலது, பக்கம் 77
74. திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள், பாடல் 2599
75. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4615(வரிகள் 983-984)
76. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 79
77. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4150
78. மேலது, பாடல் 4828
79. மேலது, பாடல் 4615 (வரிகள் 1577-1578)
80. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 353
81. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 317
82. பரிசுத்த வேதாகமம் பக்கம் 125

83. Pramahansa Yogananda, Autobiography of a Yogi, Page 301
84. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5001
85. மேலது, பாடல் 4615 (வரிகள் 231-232)
86. மேலது, பாடல் 4828
87. திருஅருட்பா உரைநடைப்பகுதி பக்கம் 430
88. மேலது, பக்கம் 434
89. மேலது, பக்கம் 436
90. மேலது, பக்கம் 438
91. மேலது, பக்கம் 327
92. மேலது, பக்கம் 319-320
93. மேலது, பக்கம் 319
94. மேலது, பக்கம் 308-309
95. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5578
96. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 77-80
97. மேலது, பக்கம் 312
98. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4745
99. மேலது, பாடல் 581
100.மேலது, பாடல் 4954
101.மேலது, பாடல் 4953
102.மேலது, பாடல் 4553
103.மேலது, பாடல் 4413
104.மேலது, பாடல் 5111
105.மேலது, பாடல் 5112
106.மேலது, பாடல் 5557
107.மேலது, பாடல் 5559
108.மேலது, பாடல் 5567
109.மேலது, பாடல் 5569
110.மேலது, பாடல் 5579
111.மேலது, பாடல் 5573
112.மேலது, பாடல் 5582
113.மேலது, பாடல் 5589
114.மேலது, பாடல் 5601
115.மேலது, பாடல் 4642
116.திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 322
117.மேலது, பக்கம் 332
118.திருஅருட்பா, ஆறாம் திருமுறை, பாடல் 4785
119.மேலது, பாடல் 4748
120.மேலது, பாடல் 5394

# இயல் ஏழு

## திருஅருட்பாவும் சாகாக்கலைப் பயிற்சியும்

### அ.சாகாக்கலையும் திருஅருளும்

நரை திரை பணி மூப்பு மரணம் ஆகியவற்றை நிவர்த்தி செய்து கொண்டு, உடம்பை நித்தியதேகமாக்கி, எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எத்துணையும் தடைபடாத பேரின்பச் சித்திப் பெருவாழ்வில் வாழ்தல்-கடவுளின் திருவருள் சுதந்திரம் ஒன்றினாலேயே கூடும் என்ற உண்மையை சமரச சுத்த சன்மார்க்க சங்க சத்திய விண்ணப்பம் என்ற உரைநடை விண்ணப்பத்தின் வழியே வள்ளற்பெருமான் புலப்படுத்துகிறார்கள்.

கடவுளை-உண்மை அன்பால் கருத்தில் கருதி வழிபாடு செய்தால், கடவுளின் அருள் கருத்தின்கண் வெளிப்படும் என்றும், அத்திருவருள் விளக்கத்தால் நரை திரை பிணி மூப்பு பயம் துன்பம் மரணம் முதலியவற்றைத் தவிர்த்துக்கொண்டு பேரின்ப சித்திய பெருவாழ்வில் வாழமுடியும் என்றும் அவர்களது 'சுத்தசன்மார்க்க சத்தியச் சிறு விண்ணப்பம்' தெரிவிக்கிறது.

"நம்முடைய தலைவராகிய கடவுளை அடைவதற்கு அவர் எழுந்தருளி இருக்கும் கோட்டையின் சாவியாகிய அருள் வேண்டும்; அவ்வருள் அன்பினால் அல்லது வேறுவகையால் அடைவது அரிது. இவ்வன்பு ஜீவகாருணியத்தால் அல்லது வேறுவகையால் வாராது; ஜீவகாருணியத்தின் லாபமே அன்பு" என்றும் வள்ளற்பெருமான் உபதேசித்திருக்கிறார்கள். மேலும்"ஜீவகாருணியம் உண்டானால் அருள் உண்டாகும். அருள் உண்டானால் அன்பு உண்டாகும். அன்பு உண்டானால் சிவானுபவம் (கடவுள் அனுபவம்) உண்டாகும்" என்று கூறி ஜீவகாருணியம், அருள், அன்பு, கடவுள் அனுபவம் ஆகியவற்றிற்கு இடையே உள்ள தொடர்பினை விளக்கி இருக்கிறார்கள்.

ஜீவகாருணியம் எவ்வாறு உண்டாகும் என்பதை விளக்க 'ஜீவகாருணியம் உண்டாக்க மார்க்கம் யாதெனில், கடவுளுடைய பெருமையையும் தரத்தையும் நம்முடைய சிறுமையையும் தரத்தையும் ஊன்றி விசாரித்தலே" என்ற உபதேச மொழிகளை வழங்கி இருக்கிறார்கள்.

மேற்கூறப்பட்ட அவர்களது உபதேச மொழிகள் யாவற்றையும் தொகுத்து, தொடர்பாகச் சிந்தித்தால், அவற்றில் கீழ்கண்ட உண்மைகள் அமைந்திருப்பதை உணரலாம்.

1. கடவுளது பெருமையையும் தரத்தையும்-நம்முடைய சிறுமையையும் தரத்தையும் ஊன்றி விசாரித்தால் ஜீவகாருணியம் உண்டாகும்.
2. ஜீவஜாருணியம் உண்டானால் அருள் உண்டாகும். அதாவது கடவுள் நம்மீது இரங்குவார்-அன்பு காட்டுவார்.
3. கடவுள் நம்மீது அன்பு காட்டுவதால் நமக்கு கடவுள் மீதும் அன்பு உண்டாகும்.
4. கடவுளை உண்மை அன்பால் கருத்தில் கருதி வழிபட்டால் பயம் துன்பம் நரை திரை பிணி மூப்பு மரணம் ஆகியவை நீங்கும்.

இவ்வாறு கடவுளது புகழை விசாரிப்பதால் உண்டாகும் ஜீவகாருணியம்-முடிவில் மரணமிலாப் பெருவாழ்வைத்தரும் என்ற உண்மையை-சிக்கல்கள் இல்லாமல்-முரண்பாடுகள் இல்லாமல்-காரண காரியத் தொடர்புடன் - வள்ளற்பெருமான் விளக்கி இருக்கிறார்கள்.

கடவுளது பெருமையையும் நம்முடைய சிறுமையையும் எடுத்துக்காட்டி உள்ளத்தை உருக்கும் வகையில் அமைந்துள்ள பாடல்கள் பலவற்றை திருஅருட்பாவில் காண்கிறோம். இந்தப் பாடல்களை ஓதுவார் எவருக்கும் கடவுளின் பெருமைகளும் தனது சிறுமைகளும் குற்றங்களும் புலப்படாமல் இருக்காது-ஜீவகாருணியம் உண்டாகாமல் இருக்காது. ஜீவகாருணிய உணர்வை நம்முன் தூண்டுவதற்காகவே வள்ளற்பெருமான் திருஅருட்பாவை நமக்கு வழங்கி இருக்கிறார்கள் என்றே கொள்ளலாம்.

## ஆ. சாகாக்கலைப் பயிற்சிகள்

### 1.ஜீவகாருணியம்

மரணமிலாப் பெருவாழ்வைப் பெறுவதற்கு ஜீவகாருணிய ஒழுக்கமே முதன்மையான நெறி என்று வள்ளற்பெருமான் கருதுகிறார்கள். ஜீவகாருணிய ஒழுக்கத்தின் எல்லாக் கூறுகளையும் விளக்கி அவர்கள் அருளியுள்ள 'ஜீவகாருணிய ஒழுக்கம்' உரைநடை நூலில், ஜீவகாருணியத்தால் பேரின்ப லாபம் கிடைப்பது பற்றியும், பேரின்ப லாபத்தைப் பெற்றவர்தம் உடம்பு கடவுளின் அருளால் வேதிக்கப்பட்டு சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் முதலான சாகாத உடம்புகளாக விளங்குவது பற்றியும் கூறி இருக்கிறார்கள்.

ஜீவகாருணிய ஒழுக்கத்தின் மேன்மையைப் பலவாறாக எடுத்துக்கூறி, ஜீவகாருணிய ஒழுக்கமுடையவர்களாகி-அருந்தல் பொருந்தல் முதலான பிரபஞ்ச போகமுடைய இல்லறத்தாருக்கும் கடவுள் அருள் உறுதியாக கிட்டும் என்று வள்ளற்பெருமான் தெரிவிக்கிறார்கள். இதனால் சாகாக்கலையை இல்லறத்தாருக்கும் அவர்கள் உரியதாக்கியிருக்கிறார்கள் என்பது தெளிவாக விளங்குகின்றது. அவர்களுடைய 'ஜீவகாருணிய ஒழுக்கம்' நூலை ஆழ்ந்து பயின்று விருப்பு வெறுப்பு இன்றிச் சிந்தித்தால்-அவர்கள் சாகாக்கலையினை இல்லறத்தாருக்கே உரியதாக்கி இருக்கிறார்கள் என்றும் தோன்றுகின்றது. அருளாளர்கள் சிந்திப்பார்களாக!

**"ஆரே என்னினும் இரங்குகின் றார்க்குச்**
**சீரே அளிக்கும் சிதம்பரசிவமே"**

என்ற அவர்களது அருட்பெருஞ்ஜோதி அகவல் வரிகளும் இங்கு நினைவுகூரத்தக்கன.

### 1.1.ஜீவகாருணியத்தின் முக்கிய லட்சியம்

ஜீவகாருணிய ஒழிக்கத்திற்கு முக்கிய லட்சியம் கொலைநீக்குதலும்-பசிநீக்குதலும் என்று 'ஜீவகாருணிய ஒழுக்கம்' நூலில் வள்ளற்பெருமான் வலியுறுத்துகிறார்கள்.

ஓர் உயிர் கொலை செய்யப்படும்போது-கரும்பையும் என்னையும் ஆலையிலும், செக்கிலும் இட்டு நசுக்கும்போது-இரசமும் நெய்யும் கலங்கி வருவது போல்-உயிர் உடலில் இருந்து அறிவுகெட்டு திகைப்படைந்து கலங்கி வெளிவருகிறது என்றும்; கொலை நேரிடுவதை அறிந்து உடம்பு நடுங்கியும்,

பதைத்தும், வியர்த்தும், தடதடத்தும், தள்ளாடியும், கால்கள் சோர்ந்தும், கண்கள் கலங்கியும் இருள் அடைந்தும், காதுகள் கும்மென அடைபட்டும், நாசி துவண்டும், வாய்நீருலர்ந்தும், நாக்குழியும், வயிறு பகீரென திகிலடைந்தும், மனம் திகைத்துப் பறையடித்தாற்போல் பதபதவென அடித்துத் துடித்துத் துக்கமும் சோர்வும் கொண்டு மயங்கவும்-பாய்மரச் சுற்றில் அகப்பட்ட காக்கை போலவும்-நீர்ச்சுழியில் அகப்பட்ட வண்டு போலவும்-உயிர் சுழன்று அடையும் துன்பங்கள் பற்றி கல்நெஞ்சமும் கரையுமாறு எடுத்துரைக்கிறார்கள். உயிர்க்கொலையும் புலைப்பொசிப்பும் உடையவர் எல்லாம் உறவினத்தார் அல்லர், அவர் புறவினத்தார்" என்று வள்ளற்பெருமானின் 'அருள்விளக்க மாலை' அறிவிக்கிறது. எனவே வள்ளற்பெருமான் விளக்கும் சன்மார்க்க நெறியினை-சாகாக்கலையினை-பயிலுவதற்குரிய முதல்படி உயிர்க்கொலையையும் புலால் உண்ணுதலையும் நீக்குவதே என்று திண்ணமாக அறிய வேண்டும்.

**"தன்னூண் பெருக்கற்குத் தான்பிறிதூண் உண்பான்**
**எங்ஙனம் ஆளும் அருள்"**

என்று கூறி, புலால் உண்போருக்கு அருள் கிட்டாது என்று திருவள்ளுவரும் எடுத்துக் காட்டுகின்றார்.

**"கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்**
**செல்லாது உயிர்உண்ணும் கூற்று"**

என்ற குறலில் கொல்லாநெறி உடையோருக்கே சாகாக்கலையில் வெற்றி கிட்டும் என்ற பொருளும் பொருந்தி நிற்பது கவனிக்கத்தக்கது.

பசியினால் ஏற்படும் துன்பங்கள் பற்றி கூறுங்கால், "சீவ அறிவு விளக்கம் இல்லாமல் மயங்குகின்றது; அதனால் கடவுள்விளக்கம் மறைபடுகிறது; புருட தத்துவம் சோர்கின்றது; பிரகிருதி தத்துவம் மழுங்குகிறது; குணங்கள் எல்லாம் பேதப்படுகின்றன; மனம் தடுமாறிச் சிதறுகின்றது; புத்தி கெடுகின்றது; சித்தம் கலங்குகின்றது; அகங்காரம் அழிகின்றது; புத்தி கெடுகின்றது; சித்தம் கலங்குகின்றது; அகங்காரம் அழிகின்றது; பிராணன் சுழல்கின்றது; கண் பஞ்சடைந்து குழிகின்றது; காது கும்மென செவிடு படுகின்றது; நா உலர்ந்து வறளுகின்றது. தோல் மெலிந்து ஸ்மரனை கெடுகின்றது; பற்கள் தளருகின்றன; மலசல வழி வெதும்புகின்றது; மேனி கருகுகின்றது; எலும்புகள் கருகி பூட்டுகள் நெக்கு விடுகின்றன; ஈரல் கரைகின்றது; இரத்தமும் சலமும் கவறுகின்றன; மாமிசம் குழைந்து தன்மை கெடுகின்றது; வயிறு பகீரென எரிகின்றது; தாபசோபங்கள் மேன்மேலும் உண்டாகின்றன; உயிரிழந்து விடுவதற்கு மிகவும் சமீபித்த அடையாளங்களும் அனுபவங்களும் மேன்மேலும் தோன்றுகின்றன என்று வள்ளற்பெருமான் விளக்கி இருக்கின்றார்கள்.

பசியினாலும், கொலையினாலும், தாங்கொணாத் துன்பங்களை உயிர் அடைவதால், பசிநீக்குதலும் கொலைநீக்குதலும் ஜீவகாருணியத்திற்கு முக்கிய லட்சியம் என்று வள்ளற்பெருமான் வலியுறுத்திக் கூறுகிறார்கள்.

ஜீவகாருணிய ஒழுக்கத்திற்கு உணவு அளித்தல் முக்கிய குறிக்கோள். ஆதலால் தடைபடாமல் உணவு வழங்கப்படும் ஏற்பாட்டினை வடலூர் சத்திய

தருமச்சாலையில் நிலைபெற்று விளங்குமாறு வள்ளற்பெருமான் செய்திருக்கிறார்கள்.

பசி நீக்குதலாகிய ஜீவகாருணிய ஒழுக்கம் இல்லறத்தார் பின்பற்றுவதற்கு எளிதானது-பெரும்பாலும் அவர்களுக்கே உரியது. சாகாக்கலையை ஜீவகாருணியத்துடன் வள்ளற்பெருமான் இணைத்திருப்பது பற்றி முன்னரே கண்டோம். வள்ளற்பெருமான் பசி நீக்குதலாகிய ஜீவகாருணியத்தை இல்லறத்தாரும் கடைப்பிடிக்குமாறு செய்து-அதன் வழியே-சாகாக்கலைப் பயிற்சியை இல்லறத்தாருக்கும் உரியதாக்கி இருக்கிறார்கள் என்றும் கொள்ளலாம்-இல்லறத்தாருகே உரியதாக்கி இருக்கிறார்கள் என்றும் சொல்லலாம்.

## 2.இல்லறத்தாருக்கு உரிய நித்திய ஒழுக்கப் பயிற்சி

ஜீவகாருணியத்திற்குரிய பசி ஆற்றுவித்தல் பிணிநீக்குதல் முதலிய அறங்களில் ஈடுபட பொருள் தேவை; பொருள் தேடும் முயற்சிக்கும்-ஜீவகாருணிய பணிகளில் ஈடுபடுவதற்கும்-சாகாக்கலைக்குரிய தியானம் முதலான பயிற்சிகளில் பழகுவதற்கும்-நோயற்ற உடம்பு தேவை. இவ்வாறு உலகியலுக்கும் அருளியலுக்கும் நோயற்ற-வலிமை உள்ள-உடம்பு இன்றியமையாது இருப்பதால், 'உடம்பைப் பொன்போல் காப்பாற்ற வேண்டும்' என்று வள்ளற்பெருமான் அறிவுறுத்தி இருக்கிறார்கள்.

**"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்**
**உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்**
**உடம்புளே உத்தமன்கோயில் கொண்டான் என்று**
**உடம்பினை யானிருந்து ஓம்புகின் றேனே"**

**"உடம்பார் அழியில் உயிரார் அழிவார்**
**திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"**

என்று திருமூலரும் கூறுகின்றார்.

அதனால், வள்ளற்பெருமான் இல்லறத்தாருக்கென்றே வரைந்துள்ள 'நித்திய கரும விதி' யில், உடம்பை வளர்க்கும் உபாயங்கள் பலவற்றை கூறியிருக்கிறார்கள். 'நித்திய கரும விதி' யில் கரிசாலையைப் பயன்படுத்தி வாதநீர் பித்தநீர் கபநீர் ஆகியவற்றை வெளியேற்றுதல் தொடங்கி பல செய்திகளை கூறி இருக்கிறார்கள். அவற்றை ஒவ்வொன்றாக காண்போம்.

### 2.1. கரிசாலையைப் பயன்படுத்துதல்

காலையில் கரிசாலை (கரிசலாங்கண்ணி) இலைகளை மென்று, அவற்றால் பற்களைத் துலக்கியபின், கரிசாலைச் சாற்றை அண்ணாக்கில் தோயச்செய்து, நடுவிரலால் அண்ணாக்கைத் தேய்க்குமாறு வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். இதனால் வாதநீர் பித்தநீர் கபநீர் ஆகியவை வெளிவந்து கண்ணொளி பிரகாசமாய் விளங்கும் என்று தெரிவிக்கிறார்கள். இந்த ஒரு பழக்கத்தின் மூலமே நோயற்ற வாழ்வில் வாழ நமக்கு இன்றியமையாத அடிப்படை ஒன்றை வள்ளற்பெருமான் உருவாக்கித் தந்திருக்கிறார்கள்.

**"மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**
**வளிமுதலாய் எண்ணிய மூன்று"**

என்ற குறளில் நோய்க்கு காரணமாக திருவள்ளுவர் கூறும் வாதம் பித்தம் கபம்-ஆகிய மூன்றின் மிகுதியையும் நீக்கும் முறையை வள்ளற்பெருமான் மிக எளிதாக கற்பித்திருக்கிறார்கள்.

'திருவள்ளுவர் கற்பம் 300' என்ற நூலில் கரிசாலைச்சாறு ஆவின்நெய் ஆகியவற்றைச் சேர்த்து காய்ச்சி வைத்துக்கொண்டு, அதனை நாள்தோறும் அண்ணாக்கில் தடவி வந்தால், 'மேல்வாசல் திறக்கும்' என்று கூறப்பட்டுள்ளதும் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. மேல்வாசல் திறக்கும் என்று கூறப்படுவது 'நெற்றிக்கண் திறத்தல்' என்ற சாகாக்கலை தொடர்பான அனுபவத்துடன் தொடர்புடையதாக இருக்க வேண்டும். 'திருவள்ளுவர் கற்பம் 300' கூறும் முறையை எளிமைப்படுத்தி, பல் துலக்கும்போது பின்பற்றும் எளிய பழக்கமாக இதனை வள்ளற்பெருமான் அமைத்திருப்பது கவனிக்கத்தக்கது. சாகாக்கலையினை அனைவரும் எளிமையாக பின்பற்ற வேண்டும் என்ற அவர்களது அருள் உள்ளத்தையும் இதனால் நாம் அறிய முடிகிறது.

## 2.1.1. கரிசாலையை உண்ணுதல்

வள்ளற்பெருமான் கரிசாலையை-கரிசலாங்கண்ணியை-பச்சையாகவாவது - சமையல் முதலிய வகைகளிலாவது-தினமும் உண்டு வந்தால், அசக்தம் (சக்தி இன்மை) நீங்கும் என்றும், உடம்பு நெடுநாள் இருந்து முக்தியடைவதற்கு உதவியாய் இருக்கும் என்றும், நெடுங்காலம் மகான்களிடத்தில் காத்திருந்தாலும் கரிசாலையின் உண்மையையும் பயனையும் அனுபவத்தையும் வெளியிடமாட்டார்கள் என்றும் கூறுகிறார்கள்.

**"தின்றகரிசாலை தேகந் திரை போக்கும்**
**தின்றகரிசாலை சிறந்த நரைபோக்கும்**
**தின்றகரிசாலை தேகம் சிறுபிள்ளை**
**தின்றகரிசாலை சிதையாது இவ்வாக்கையே"**

என்று திருமூலர் கூறுவதும் இங்கு நினைவுகூரத்தக்கது.

இத்தகைய அரிய உயர்ந்த பொருளை வெளிப்படுத்தி, அதனை இல்லறத்தார் உட்பட அனைவரும் எளிமையாக பயன்படுத்தும் முறையினையும் ஒளிவுமறைவு இன்றி பேரிரக்கத்துடன் உபதேசித்தமைக்காக, வள்ளற்பெருமானுக்கு உலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

கரிசாலை தூதுளை முசுமுசுக்கை சீரகம் ஆகியவற்றைத் தூளாக்கி வைத்துக்கொண்டு-பசும்பாலுடன் சேர்த்து காய்ச்சி சர்க்கரை கலந்து அருந்துமாறும் வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். ஆயுளை நீட்டித்துக் கொள்ள உதவும் கற்ப முறைகளில் இதைவிட எளியமுறை ஒன்று இருப்பதாக தெரியவில்லை.

இனி, மேற்கூறப்பட்ட மூலிகைகளின் பயன்கள் பற்றி 'குணபாடம்' என்னும் சித்த மருத்துவநூல் கூறும் செய்திகளைக் காண்போம்.

| | | |
|---|---|---|
| கரிசாலை | - | பாண்டு, குரல்கம்மல், காமாலை, குட்டம் முதலான பல நோய்களை நீக்கும். |
| தூதுளை | - | காசம், தாதுநட்டம், முத்தோடம் ஆகியவற்றை நீக்கும் |
| முசுமுசுக்கை | - | இருமல், புகைச்சல், கோழை, இரைப்பு மூக்கில் நீர்பாய்தல் ஆகியவற்றை நீக்கும். |
| சீரகம்- | - | பித்தம், வயிற்றுவலி, வாயு நோய்கள் ஆகியவற்றை நீக்கும்; உடலுக்கு வலிமை உண்டாக்கும்; கண்ணுக்குக் குளிர்ச்சி தரும். |

இந்தப் பொருள்களைப் பயன்படுத்துவதால் மேற்கூறப்பட்ட நோய்கள் நீங்குவதன்றியும், ஆயுள் வளர்ந்து சாகாக்கலையைப் பயிலுவதற்கும் அவை துணைசெய்யும் என்பதில் ஐயம் இல்லை.

இதுபோலவே பொற்றலைக் கையாந்தகரை, புளியாரை முதலானவற்றை தூள் செய்து சர்க்கரை சேர்த்து அல்லது பாலில் கலந்து கொள்ளலாம் என்றும் வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். இவற்றைப் பற்றி வள்ளற்பெருமான் வெளியிட்டிருக்கும் மூலிகை குண அட்டவணை கூறும் செய்திகளைக் காண்போம்.

| | | |
|---|---|---|
| **வில்வம்** | **-** | **சத்தியமர்த்தனி (வாந்தி நீக்கி)** |
| **சர்க்கரை** | **-** | **தாகம், மயக்கம் போக்கி** |
| **பொற்றாலை** | **-** | **காயசித்தி** |

**கையாந்தகரை**

**பொன்னாங்கண்ணி - கண் ஒளி உண்டாக்கி**

**வல்லாரை - உடல் தேற்றி, காமம் போக்கி**

**நன்னாரி - தேகசித்தி**

சாகாக்கலையில் பயில்வோர் நோய்வந்தால் அவற்றை நீக்கிக் கொள்ள உதவும் மூலிகைகளையும் வள்ளற்பெருமான் குறிப்பிட்டு இருக்கிறார்கள். அவற்றில் சில பின்வருமாறு:-

**ஆடாதோடை - சுராரி (சுரம்நீக்கி)**

**வேம்பு - பித்தாரி (பித்தம்நீக்கி)**

**கோவை - சலக்கழிச்சல் ஆற்றி**

**கரும்பு - கல்லடைப்பு போக்கி**

**கீழாநெல்லி - காமாலை போக்கி**

**முருங்கை - கண்விரணம் போக்கி**

**வாழை - பெரும்பாடு போக்கி**

**தாமரை - கண்குளிர்ச்சி**

இவை எல்லாருக்கும் தெரிந்த எளிய மூலிகைகள், இவற்றைப் பயன்படுத்தும் முறைகளும் பெரும்பாலான சித்த மருத்துவர்களுக்கு தெரிந்தே இருக்கும்.

## 2.2. புருவமையத்தியானம் பழகுதல்

புருவமத்தியில், ஆன்ம அறிவு என்ற கற்பூரத்தில், கடவுள் அருள் என்கிற தீபம் விளங்குவதாக பாவித்து, கடவுளிடத்தே உண்மையாகிய அன்பையும், ஜீவர்களிடத்தே உண்மையாகிய காருணியத்தையும் வைத்துப் பழக வேண்டும் என்று வள்ளற்பெருமான் அறிவுறுத்துகிறார்கள். இவை எல்லாம் படிப்படியாக இல்லற்றத்தாரை சாகாக்கலையில் உயர்த்துவதற்கே என்பது தெளிவு.

**"நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்**
**வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை"**

என்று கூறப்படும் சாகாக்கலைக்குரிய அனுபவங்களை பெறும் பயிற்சியாகவே இதனை வள்ளற்பெருமான் அமைத்திருக்கிறார்கள். புருவ நடுவின் ஆழத்தில்-

மூளையின் நடுப்பகுதியில் 'ஹைப்போ தாலமஸ்' என்னும் சுரப்பி அமைந்துள்ளது. இதுவே நாளமிலாப் சுரப்பிகள், அனிச்சை செயல்கள், உடலில் வெப்பநிலை, பால் உணர்வு, தூக்கம் விழிப்பு சினம் அச்சம் கவலை களிப்பு போன்ற உணர்ச்சிகள் ஆகியவற்றைக் கட்டுப்படுத்துகிறது என்று மருத்துவநூல்கள் கூறுகின்றன. புருவ நடுத்தியானப் பயிற்சியால் மேற்கூறப்பட்ட உணர்வுகள் உணர்ச்சிகள் ஆகியவற்றில் சிறந்த கட்டுப்பாடுகள் உருவாகி, ஆயுள் நீடிப்பு விளையும் என்று கருதலாம்.

## 2.3. சுவாசம் செலவாகுதலைத் தவிர்த்தல்

சிவயோகசாரம் என்ற நூல் நமது சுவாசம் பன்னிரண்டு அங்குலம் வெளியே செல்கிறது-பத்து அங்குலம் உள்ளே வருகின்றது என்றும், ஒவ்வொரு சுவாசத்திலும் இரண்டு அங்குலம் நட்டமாகிறது என்றும், இவ்வாறு ஒவ்வொரு சுவாசத்திலும் இரண்டு அங்குல சுவாசம் செலவாவதால் ஆயுள் குறைந்து கொண்டே வருகிறது என்றும் புலப்படுத்துகிறது. பன்னிரண்டு அங்குலம் வெளியே சென்று எட்டு அங்குலம் உள்ளே வந்து ஒவ்வொரு சுவாசத்திலும் நான்கு அங்குலம் குறைகிறது என்றும் கூறப்படுகிறது. சுவாசம் செலவாவதால் ஆயுள் குறைவது பற்றி உரோமரிஷி என்ற சித்தரும் பின்வருமாறு கூறுகிறார்.

**"ஓமென்ற கெட்டபுத்தி மாணா கேளே**
**உலகத்தில் மானிடர்க்கும்ஆம் ஆண்டு நூறே**
**ஆமென்ற இருபத்தோ ராயிரத்தோடு**
**அறுநூறுசுவாசமல்லோ ஒருநாளைக்குப்**
**போம்என்று போனதனால் நாள்கு றைந்து**
**போச்சுது போகாவிட்டால் போவது இல்லை"**

**"வாயு வழக்கம் அறிந்து செறிந்து அடங்கில்**
**ஆயுள் பெருக்கம் உண்டாம்"**

என்ற ஔவைக் குறளும் இங்கு எண்ணிப் பார்க்கத்தக்கது. எந்தவிதத்திலும் பிராணவாயு செலவாகாதபடி விழிப்பாய் இருக்க வேண்டும் என்று வள்ளற்பெருமானும் கூறுகிறார்கள். சுவாசம் அதிகம் வீணாகும் நிலையை உருவாக்கும் உரத்துப்பேசுதல் வழக்கிடல் சண்டையிடல் முதலான பழக்கங்களை முற்றிலும் தவிர்க்க வேண்டும் என்று அவர்கள் வலியுறுத்துகிறார்கள். தன்னை மறந்து உணர்வின்றி தூங்குவதில் சுவாசம் அதிகமாக வெளியே சென்று ஆயுள் குறையும் என்று கூறப்படுகிறது. மெல்லென உணர்வோடு உறங்கவேண்டும் என்றும், அதற்காக இடது பக்கமாக படுக்க வேண்டும் என்றும் கூறுகிறார்கள். இடது பக்கமாக படுத்தால் சுவாசம் வலது பக்கமாக நடக்கும். வலது பக்கத்திற்குரிய சூரியகலை சுவாசம் நடந்தால் நினைவு-உணர்வு-அதிகரிக்கும். அதனால் உணர்வோடு தூங்கமுடியும். அப்போது சுவாசம் அதிகமாக வெளியே ஓடாது-ஆயுள் குறையாது-என்று கருதலாம்.

## 2.4. இணை விழைச்சினை அளவுபடுத்தல்

நீண்ட ஆயுளைப் பெறுவதற்கு உணவு இணைவிழைச்சு உறக்கம் ஆகியவற்றை அளவுபடுத்த வேண்டும் என்று வள்ளற்பெருமான் வலியுறுத்துகிறார்கள்; அச்சத்தை முழுவதும் தவிர்க்க வேண்டும் என்றும் அறிவுறுத்துகிறார்கள். உடம்பை

தீபத்தோடு ஒப்பிட்டு, ஆயுள் நீடிப்பதற்கு இணைவிழைச்சு தொடர்பாக நடுநிலையான கட்டுப்பாடு ஒன்றினை வள்ளற்பெருமான் விளக்கியிருக்கிறார்கள்.

**அகல் - உடல்**

**எண்ணெய் - இரத்தம்**

**திரி - சுக்கிலம்**

**தீபம் - உயிர்**

என்று ஒப்பிட்டுக் கூறி, திரியை அதிகமாக தூண்டி-எண்ணெய் வற்றி, தீபம் அணைந்து விடுவது போல்-சுக்கிலத்தை அதிகமாக செலவிட்டால் இரத்தம் குறைந்து உடம்பு போய்விடும் என்றும்; திரியில் உண்டாகி இருக்கும் கசட்டினை நீக்காவிட்டாலும் தீபப்பிரகாசம் குறைவதுபோல் உருவாகிவிட்ட சுக்கிலத்தைப் பதினைந்து நாள்களுக்கு ஒருமுறை போகம் செய்து நீக்காவிட்டாலும் ஆயுள் குறையும் என்று கூறியிருக்கிறார்கள். மேலும் இது தொடர்பாக ஊற்றுக்கேணியை உவமையாக்கியும் வள்ளற்பெருமான் விளக்கம் ஒன்றினை தந்து இருக்கிறார்கள். ஊற்றுக்கேணியை இடைவிடாது இறைத்தால் நீரின் வருவாய் குறைந்து வற்றிவிடும். அதுபோல் இடைவிடாது போகம் செய்வதால் சுக்கிலம் வற்றி உடம்பு அழிந்து விடும். ஊற்றுக்கேணியை இறைக்காமலேயே விட்டுவிட்டாலும் அழுக்கேறி நீரின் வருவாய் தடைப்பட்டு இருக்கின்ற நீரும் சூரிய வெப்பத்தால் ஆவி ஆகிவிடும். அதுபோல் போகம் செய்யாமலேயே இருந்துவிட்டாலும் சுக்கிலத்தின் வருவாய் தடைப்பட்டு இருக்கின்ற சுக்கிலமும் வெப்பத்தால் வற்றிவிடும்; உடம்பு உடனே போய்விடும் என்பது அவர்களது உபதேசம். அளவான இணைவிழைச்சு ஆயுள் நீடிப்புக்குத் துணை செய்யும் என்பதுவே வள்ளற்பெருமானின் கருத்து.

ஒரு சன்மார்க்க பயிற்சியாளன் இல்லற வாழ்வை நடத்தும்போது, மேற்கண்ட கட்டுப்பாடுகளைக் கடைப்பிடிக்க வேண்டும். சிலருக்கு சன்மார்க்கநெறி பயிலும் பக்குவம் இல்லாத துணை அமைவது உண்டு. அவர் போகத்தை அதிகமாக விரும்புகின்றவராக இருக்கலாம். அவர் மீது கட்டுப்பாட்டைத் திணிப்பது தீய விளைவுகளைத்தான் உண்டாக்கும். இப்படிக் கட்டுப்பாடுகளை ஈவு இரக்கம் இன்றி விதிப்பது ஜீவகாருணிய நெறியில் பயிலுவோருக்கு தகுதியான செயலும் அன்று. அதனால் போகத்தில் ஈடுபட்டாலும் சுக்கிலம் வீணாகாமல் இருக்கும் முறையையும் வள்ளற்பெருமான் எடுத்துக்கூறி இருக்கிறார்கள். 'பிராணவாயுவை நடுவே உலாவச் செய்தால் சுக்கிலம் வீணாகாது' என்று அவர்கள் தெளிவாக்கி இருக்கிறார்கள்.

**"விந்தான குருவதனைக் காணுதற்கு**
**விளக்கொன்று தலைக்குநேர் இலக்கு வைத்து**
**அந்தமுள்ள விளக்கின்முன் அணங்கை வைத்து**
**அவள்மோகம் குருதீபம் புருவந்தாக்கி**
**சந்தமுள்ள அறிவதனை விளக்கில் சேர்க்கச்**
**சற்குருவும் விந்ததனைப் பிடித்துக்கொள்வார்**
**அந்தவிந்து போகத்தில் நழுவிடாது**
**சற்குருவை மதித்துநீ தனித்துப் பாரே!"**

**சேர்த்துநீ ரேசக பூரக கும்பத்தில்**
**சேற்கண்ணார் போகம் எண்ணிலிசெய் தாலும்**
**வார்த்தான இந்திரியம் நழுவிடாது"**

என்று சற்குரு சுவாமிகள் என்ற சித்தர் கூறுகிறார். 'பரியங்க யோகம்' என்ற தலைப்பில் சுக்கிலம் வெளிப்படாமல் போகத்தில் ஈடுபடும் நெறி குறித்து திருமூலரும் கூறுகிறார். ஆனால் இவையெல்லாம் தகுந்த குருவின் வழிகாட்டுதலைப் பெற்ற பயிற்சியாளர்களுக்கே உரியவை. ஆனால் வள்ளற்பெருமான் உரைத்திருக்கும் முறை எவரும் எளிதில் பின்பற்றுதற்குரியதாய் அமைந்துள்ளது.

இதுவரையில் சன்மார்க்க பயிற்சியை-சாகாக்கலையை தொடக்க நிலையில் கடைப்பிடிப்பவர்களுக்குரிய வழிமுறைகளை வள்ளற்பெருமான் கூறி இருப்பது பற்றிக் கண்டோம். இனி தீவர பயிற்சியாளர்களுக்குரிய நெறிமுறைகள் பற்றிய அவர்களது உபதேசங்களைக் காண்போம்.

## 2.5. காமத்தை முழுமையாக வெல்லும் வழி

"கடவுளிடத்தில் இலட்சியமும், ஜீவர்களிடத்தில் தயவும் உடையவனுக்கு சுக்கில ஆபாசம் நேரிடாது. தேகம் நீடிக்கும்" என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். ஆதலால் தீவிர சன்மார்க்க பயிற்சியாளர்களுக்கு தீபம் ஊற்றுக்கேணி முதலியவற்றை உவமையாக்கி கூறப்பட்ட கருத்துக்கள் பொருந்தாது என்பது தெளிவு.

## 2.6. நெற்றிக்கண் திறத்தல்

**"மூக்குநுனியில் கண்மூடாமல் தான் நோக்கி**
**காக்கு மனது கலங்காமல் நெற்றியை**
**ஆக்கும்மனதை அசையாமல் தான் ஊன்றித்**
**தீர்க்கமாய் நெற்றிக் கண்ணுந் திறந்திடே!"**

என்று நெற்றிக்கண் திறக்கின்ற மார்க்கத்தை திருமூலர் கூறுகிறார்.

திபெத்திய யோகமுறையில், பௌத்த நெறியைப் பின்பற்றும் துறவிகள், மெல்லிய உலோக இழையை புருவநடுவில் செலுத்தி நெற்றிக் கண்ணைத் திறக்கும் முறையை கையாளுகின்றனர்.

இவை போன்ற கடினமான முறைகள் அனைத்தையும் தவிர்த்து, 'தயவே வடிவானால் நெற்றிக்கண் திறக்கும்' என்றுக் கூறி ஒரு புதிய வழியை-இயல்பான வழியை-துன்பம் இல்லாத வழியை-எளிய வழியை வள்ளற்பெருமான் உபதேசிக்கிறார்கள்.

"நெற்றிக்கண்ணை திறந்து கொண்டால் எல்லாம் பட்டப் பகல்போல தெரியும்"என்றும், "நெற்றிக்கண்ணைத் திறந்து கொண்டவன் தயவோடு ஒரு பிரதேத்தை பார்த்த மாத்திரத்தில் அது உயிர்பெற்று எழும்" என்று அவர்கள்

உபதேசிக்கிறார்கள். நெற்றிக் கண்ணை திறந்துகொள்ள ஒருவன் தயவே வடிவாகும் அளவுக்கு தீவிர ஜீவகாருணிய உணர்வு உடையனாய் மாற வேண்டும் என்பதையே அவர்களது மேற்கண்ட உபதேசம் உணர்த்துகிறது.

## இ. சாகாக்கலைப் பயிற்சியின் மையம் உயிர் இரக்கமே

வள்ளற்பெருமான், "சாதனங்கள் ஒன்றும் வேண்டாம். ஏதாவது ஒரு சாதனம் சொல்லக்கேட்டு அதன்படி நடந்தால் சிறு ஒளி உண்டாகும்; அதைக்கண்டு பல்லிளித்து இறுமாந்து கெட நேரிடும். அதனால் காலம் தாழ்த்தாது எல்லா உயிரையும் தன்னுயிரைப் போல் பார்க்கின்ற பாவனையை வரவழைத்துக் கொள்ளுதல் வேண்டும்; இதுவே சாதனம். இந்தக் குணம் வந்தவன் எவனோ அவனே இறந்தவரை எழுப்புகிறவன். அவனே ஆண்டவனும் ஆவான்". என்று கூறி உயிர் இரக்கமே சாகாக்கலையில் வெற்றிபெற உதவும் சிறந்த பயிற்சி என்று புலப்படுத்தி இருக்கிறார்கள். அவர்கள் சாகாக்கலைத் தொடர்பாக வழங்கியுள்ள அனைத்து உபதேசங்களையும் அடக்கி சுருக்கமாக-ஆனால் அளவு கடந்த ஒளி விளங்கும் உபதேசமாக-இதனை வழங்கி இருக்கிறார்கள் என்று கருதலாம்.

வள்ளற்பெருமான் சாகாக்கலைக்குரிய பயிற்சிகள் தொடர்பான செய்திகள் பலவற்றை பாடல்கள், உரைநடைகள், உபதேச மொழிகள் ஆகியவற்றில் ஆங்காங்கே தெரிவித்திருக்கிறார்கள். அவற்றைத் தொகுத்து முறைப்படுத்தித் தொடர்புபடுத்திப் பார்த்தால் சாகாக்கலைப்பற்றிய அவர்களது உபதேசங்கள் அனைத்தும் படித்தரமாகவும்-தொடர்பாகவும்-முன்னுக்குப்பின் சிறிதும் முரண்பாடு இன்றியும் அமைந்திருப்பதை நாம் உணர முடிகிறது. அவர்கள் விளக்கும் சாகாக்கலைக்குரிய பயிற்சிகள் அனைத்திலும் உயிர் இரக்கமே உயிர் நிலையாக அமைந்துள்ளது என்பதையும் 'மலை இலக்காக' காண முடிகின்றது.

### 1. திருஅருட்பா பாடல்களில் உயிர் இரக்கத் திருநெறி

உலகியல் செல்வங்களிலும், சரியை கிரியை முதலான சாதனங்கள் செய்வதிலும், விசித்திரங்களைச் செய்வதிலும், புகழ் பெற்று வாழ்வதிலும் தமக்கு ஓர் அணு அளவும் ஆசை இல்லை என்றும்; முத்தி பெறுவதிலும் தமக்கு விருப்பம் இல்லை என்றும் வள்ளற்பெருமான் தெரிவிக்கிறார்கள். கருணையே வடிவாய் பிறர்களுக்கு அடுத்த கடும் துயர் முதலியவற்றை நீக்கவும், கொலைபுலை இரண்டும் ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க உளுற்றவும் தமக்கு விருப்பம் என்றும்-இவையலால் வேறு எதிலும் தமக்கு விருப்பம் இல்லை என்றும் அவர்கள் தெரிவிக்கிறார்கள்.

'கருணையும், சிவமே பொருள் எனக் காணும் காட்சியும் பெறும் மற்றவையெல்லாம் மருள் நெறி' என்பதே அவர்கள் கடைபிடித்த பெருநெறி.

**"கொல்லா நெறியே குருஅருள் நெறியெனப்**
**பல்கால் எனக்குப் பகர்ந்தமெய்ச் சிவமே!"**

**"ஈரமும் அன்பும்கொண்டு இன்னருள் பெற்றேன்"**

**"கற்றேன் சிற்றம்பலக் கல்வியை! கற்று,**

**கருணைநெறி உற்றேன்; எக்காலமும்சாகாமல்**
**ஓங்கும் ஒளிவடிவம் பெற்றேன்!"**

**"வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம்**
**வாடினேன்"**

என்பன போன்ற திருஅருட்பாக்கள் வள்ளற்பெருமான் உயிர் இரக்கத் திருநெறியையே பின்பற்றினார்கள் என்பதை தெளிவாகக் காட்டுகின்றன. மரணமிலாப் பெருவாழ்வை பெறுதற்கு உரிய நெறி உயிர் இரக்கமே என்று அவர்கள் தேர்ந்து, உயிர் இரக்கமே வடிவாக இயங்கி, மரணத்தை வென்று, அதனையே நமக்கும் வலியுறுத்தி உபதேசிக்கிறார்கள் என்று கொள்ள வேண்டும்.

## 2. உரைநடை நூல்களில் உயிர்இரக்கத் திருநெறி

சன்மார்க்கநெறியை விளக்குவதற்காக வள்ளற்பெருமான் வரைந்துள்ள நூல் 'ஜீவகாருணிய ஒழுக்கம்' இதனை அவர்கள் வினாவிடை அமைப்பில், காரண காரியத்துடன் எளிய இனிய உரைநடையில் அமைத்து ஜீவகாருணிய நெறியை விளக்கியிருக்கிறார்கள்.

கடவுளின் அருளை கடவுள் காட்டும் தயவு என்றும், ஜீவகாருணியத்தை ஜீவர்காட்டும் தயவு என்றும், சிறு நெருப்பைக் கொண்டு பெரிய நெருப்பைப் பெறுவது போல-சிறிய தயவாகிய ஜீவகாருணியத்தைக் கொண்டு பெரிய தயவாகிய கடவுள் அருளைப் பெறலாம் என்றும் தெளிவாகவும் எல்லாருக்கும் விளங்கும் வகையிலும் கூறியிருக்கிறார்கள்.

மேலும், கடவுள் அருளால் மட்டுமே பேரின்ப லாபத்தைப் பெற முடியும் என்றும், பேரின்ப லாபத்தைப் பெற்றவர்களே அசுத்த உடம்பை மாற்றி சுத்ததேகம் முதலான சாகாஉடம்புகளுடன் வாழும் பெருமை உடையவர்கள் என்றும் அவர்கள் விளக்குகிறார்கள்.

எல்லா உயிர்களையும் பொதுமையில் நோக்கி-எல்லா உயிர்களும் இன்பம் அடைதல் வேண்டும் என்னும் கருணை நன் முயற்சியை மேற்கொண்டு, சுத்த சன்மார்க்கத் தனிநெறி ஒன்றையே கடைப்பிடித்து, தாம் எக்காலத்தும் நாசமடையாமல் விளங்கும் சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் முதலான சாகாக்கலை அனுபவதேகங்களைப் பெற்றதாகவும் வள்ளற்பெருமான் தெரிவிக்கிறார்கள். சுத்தசன்மார்க்கத்தின் முக்கிய லட்சியம் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையே என்று கூறுகிறார்கள்.

உயிர்இரக்கத்தின் முக்கிய லட்சியம் பசியாற்றுவித்தலே என்று சன்மார்க்க சங்கத்தாருக்கு-சாகாக்கலை பழகுநர்களுக்கு எடுத்துக்காட்டும் வகையில் சத்திய தருமச்சாலையை அமைத்திருக்கிறார்கள்; பெருந்தயவு மயமான பேரறிவே அருட்பெருஞ்ஜோதி ஆண்டவன் என்ற உண்மையை சத்திய ஞான சபையில் விளக்கம் செய்திருக்கிறார்கள்; என்னை ஏறாநிலைமிசை ஏற்றியது யாதெனில் தயவு; தயவு என்னும் கருணைதான் என்னைத் தூக்கிவிட்டது" என்று சித்திவளாகத்தில் அறிவித்திருக்கிறார்கள்.

உயிர் இரக்கத்தால் தாம் சாகாக்கலையில் வெற்றிபெற்ற அனுபவத்தின் அடிப்படையில்தான் தயவே வடிவானால் காமக் நீங்கும் என்றும், நெற்றிக்கண் எளிதில் திறக்கும் என்றும், தயவே வடிவானால் இறந்தாரையும் எழுப்ப முடியும் என்றும், சன்மார்க்க அன்பர்களுக்கு அவர்கள் வலியுறுத்தி உபதேசித்திருக்கிறார்கள். இவற்றையெல்லாம் எண்ணிப்பார்த்தால் வள்ளற்பெருமான் கூறும் சாகாக்கலைப் பயிற்சியின் உயிர்நிலையாக திகழ்வது உயிர் இரக்கமே ஜீவகாருணிய ஒழுக்கமே-என்பது ‘உள்ளங்கை நெல்லி’ என விளங்கும்.

## ஈ. சாகாக்கலைப் பயிற்சி- மேலும் சில சிந்தனைகள்

### 1.பஞ்சாட்சர தியானம்

“புருவ மத்தியில் வெண்தாமரை மலர் மலர்ந்திருப்பதாகவும்-அதன் மத்தியில் ஓங்கார பீடம் இருப்பதாகவும்-அதில் அசையாது விளங்குகின்ற ஒரு தீபம் இருப்பதாகவும்-அதன் நடுவில் கடவுள் இருப்பதாகவும் பாவனை செய்துகொண்டு, ‘சிவாயநம’ என நாவசையாமல் நினைக்க வேண்டும். சுத்த சன்மார்க்க யோகமாதி சித்தி எல்லாம் கிடைக்கும்” என்று வள்ளற்பெருமான் தமது மாணாக்கர் தொழுவூர் வேலாயுதனாருக்கு உபதேசம் செய்திருக்கிறார்கள். சுத்த சன்மார்க்க யோகமாதி சித்திகள் என்று வள்ளற்பெருமான் கூறுவதில் மரணத்தை வெல்லுதலும் இடம் பெற்றிருக்க வேண்டும் என்பதில் ஐயம் இல்லை.

பஞ்சாட்சா ரத்தில் ‘சிவனை வணங்குகிறேன்’ என்பன போன்ற பொருள் அடங்கி இருந்தாலும் உடம்பினை அழியாமல் நிலைக்கவைக்கும் உயர்ந்த நெறியினையும் அது தன்னகத்தே கொண்டுள்ளது என்று வள்ளற்பெருமான் விளக்குகிறார்கள். பஞ்சாட்சரத்தில் உள்ள ஐந்து எழுத்துகளும் ஐந்து பூதங்களின் அடிப்படையாக விளங்குகின்றன என்று கூறப்படுகிறது. புருவமத்தியில் ஒளியை பாவனை செய்து-ஐந்து பூதங்களின் அடிப்படையாக விளங்குகின்றன என்று கூறப்படுகிறது. புருவமத்தியில் ஒளியை பாவனை செய்து-ஐந்து பூதங்களின் அடிப்படையாக விளங்கும் ஐந்தெழுத்தாகிய பஞ்சாட்சர ஜெபத்துடன் செய்யப்படும் தியானம், ஐந்து பூதங்களையும் ஒளியாக்கி மரணத்தை வெல்ல வேண்டும் என்ற கொள்கையை விளக்குவதாகவும் நினைவூட்டுவதாகவும் அமைந்து உள்ளது. புருவ மையத்தில் ஒளி அனுபவத்தைப் பெற்றால் உடம்பு அழியாது என்று பின்வரும் ஔவைக் குறளும் கூறுகிறது.

**“நெற்றிக்கு நேரே நிறைந்தஒளி காணில்**
**முற்றும் அழியாது உடம்பு”**

மேலும் புருவமையத்தில்-கண் மூக்கு மத்தியிலே-மனதை நிலைநாட்டி செய்யப்படும் தியானம். நிலைத்தால் உடம்பு அழியாது என்று கூர்மானந்தர் என்ற சித்தரும் கூறுகிறார்.

**“கடினமென்று தள்ளாதே மரண யோகம்**
**கண்மூக்கு மத்தியிலே கருதிப்பாரு**
**துடிமிகுந்த சுழிமுனையின் ஊடுதாக்கு**
**சூரியனும் சந்திரனும் ஒன்றாய்ப் போகும்**

**குடியிருப்பு சாக்கரத்தின் கோட்டையாச்சு**
**கோடிகற்ப காலயுகம் வாழலாச்சு"**

சூரிய கலையாகிய வலது மூக்கு சுவாசமும் சந்திர கலையாகிய இடது மூக்கு சுவாசமும் நடைபெறுவதால் ஆயுள் குறைந்து கொண்டே வருகிறது என்பது சித்தர்களின் கோட்பாடு. புருவ மையத்தில் நடுநாடியாகிய சுழிமுனை நாடியில் சூரிய கலையும் சந்திரகலையும் ஒடுங்கும்போது சுவாசம் நடைபெறாது. சுவாசம் நடைபெறாத நிலையில் ஆயுள் குறையாது. புருவமையத் தியானத்தால் மரணத்தைத் தவிர்க்க இயலும் என்பதை நினைவூட்டுவதற்காகவே நெற்றியில் திலகமிடுதல் திருநீறு அணிதல் திருமண் அணிதல் முதலான மரபுகள் ஏற்படுத்தப்பட்டு உள்ளன என்றும் கொள்ளலாம்.

## 2. <u>ஒளி அனுபவங்கள் அருளப்படும் நிலை</u>

தியானப் பயிற்சியாளர்கள் ஒளி அனுபவங்களைக் குண்டலினி என்னும் ஆற்றலில் இருந்தே பெறுகிறார்கள் என்று கருதப்படுகிறது. குண்டலினி மின்னல் ஒளி போன்ற வடிவம் உடையது என்றே யோக நூல்கள் கூறுகின்றன.

குண்டலினி சக்தி விழிப்படைந்ததும் தியானத்தில் சிவப்புநிற ஒளி, வெண்ணிற ஒளி, கருமைநிற ஒளி, நீலநிற ஒளி முதலிய அனுபவமாவது பற்றி சுவாமி முக்தானந்தா விரிவாக விளக்கி இருக்கிறார். முதுகுத் தண்டிற்கு கீழே மூலாதாரத்தில் குண்டலினி சக்தி இருப்பதாக பொதுவாக யோகநூல்கள் கூறினாலும், தலைக்கு மேலே இருந்து குண்டலினி இறங்கும் நிலை பற்றியும் கூறப்படுகிறது. தலைக்கு மேலே இருந்து புறப்பட்டு உச்சிக்குள் இறங்கி-உடல் மனம் ஆகியவற்றில் அருளியல் வேதி மாற்றங்களை உருவாக்கும் ஆற்றல் பற்றி அரவிந்தரும் குறிப்பிடுகிறார். இந்த ஆற்றலையே 'சித்குண்டலினி' என்று விஞ்ஞான பைரவம் என்ற நூல் குறிப்பிடுகிறது.

சுத்தசன்மார்க்க அனுபவங்கள் கண்டத்திற்குமேல் உண்டாவதாக வள்ளற்பெருமான் கூறுகின்றார்கள். மேலும் அவர்கள்,

**1.படிகமேடை**
**2.ஆயிரத்தெட்டு கமல இதழ்**
**3.ஓங்காரபீடம்**
**4.குண்டலி வட்டம்**
**5.ஜோதிஸ்தம்பம்**
**6.சுத்த நடனம்**

ஆகியவற்றை 'நிராதாரம்' என்ற நிலையோடு தொடர்புபடுத்தி பேசுகிறார்கள். யோக நூல்கள் கூறும் ஆதாரங்களும் உடம்பில் அமைந்துள்ளன. முதல் ஆதாரமாகிய மூலாதாரம் முதுகுத் தண்டின் அடிப்பகுதியிலும் ஆறாவது ஆதாரமாகிய ஆக்ஞை புருவமத்தியிலும் அமைந்துள்ளது. வள்ளற்பெருமான் கூறும் நிராதாரங்களில் சகஸ்ராரம் -ஆயிரத்தெட்டு இதழ் கமலம்-உச்சியிலும் மற்ற ஆதாரங்கள் உச்சிக்கு மேலேயும் அமைந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. அதனால் வள்ளற்பெருமான் நிராதாரத்தில் இருப்பதாகக் கூறும் குண்டலினி-உச்சிக்கு மேலே-தலைக்கு மேலே-இருந்து இறங்கி ஒளி அனுபவங்களைத்

தருவதாகக் கொள்ள வேண்டும். இந்த குண்டலினி மூலாதாரத்தில் உள்ள குண்டலினியினின்றும் வேறுபட்டது என்பதையும் அறிய வேண்டும்.

மூலாதாரத்தில் உள்ள குண்டலினி விழித்தெழுந்து சகஸ்ராரத்தை நோக்கி வரும்போது ஒவ்வொரு ஆதாரத்திலும் நின்றுநின்று இறுதியில் சகஸ்ராரத்தை அடையும் என்று கூறப்படுகிறது. ‘சித் குண்டலினி’ குருவின் அருளால் விழிப்படையும் போது, முதலில் புருவமையத்தில் உள்ள ஆக்ஞை சக்கரம் விழிப்படையும் என்றும்; பிறகு முன்புறமாக கீழிறங்கி மூலாதாரத்தை அடைந்து, முதுகுத்தண்டு வழியே பின்புறமாக சென்று உச்சியை அடையும் என்றும் கூறப்படுகிறது.

வள்ளற்பெருமான் நிராதாரத்தில் இருப்பதாக கூறும் குண்டலினி, சித்குண்டலினியாகவோ அல்லது அது போன்ற ஓர் ஆற்றலாகவோ இருக்கலாம். இந்த ஆற்றல் தலைக்கு மேலே இருந்து இறங்கும் போது உச்சியைத் தொட்டு-புருவமத்தியை அடைந்து-ஒளி அனுபவத்தை உண்டாக்கும் என்ற முடிவுக்கு நாம் வரலாம். அதனால்தான் வள்ளற்பெருமான் புருவமையத்தில் ஒரு தீபம் விளங்குவதாக பாவனை செய்து தியானம் செய்ய வேண்டும் என்று வலியுறுத்துகிறார்கள்.

‘சித் குண்டலினி’ பற்றி ‘விஞ்ஞான பைரவம்’ என்ற நூல் குறிப்பிடுவது. அரவிந்தர் தலைக்கு மேலே உள்ள ஆற்றல் இறங்கி உடம்புக்குள் வருவது பற்றி கூறுவது, நிராதாரத்தில் உள்ள குண்டலினி பற்றி வள்ளற்பெருமான் கூறுவது, சித்குண்டலினியின் ஆற்றலால் முதலில் புருவ நடுவில் உள்ள ஆக்ஞா சக்கரம் விழிப்படையும் நிலை, வள்ளற்பெருமான் புருவமையத்தில் தீபம் விளங்குவதாக பாவனை செய்து தியானம் பழகுமாறு வலியுறுத்துவது சுத்த சன்மார்க்க அனுபவங்களைக் கழுத்துக்கு மேல் உள்ளதாக அவர்கள் கூறுவது-ஆகியவற்றைத் தொடர்புபடுத்தி சிந்தித்தால், வள்ளற்பெருமான் காட்டும் தியான நெறிக்கே உரிய அற்புதமான கோட்பாடுகள் சில புலப்படுகின்றன. அவை பின்வருமாறு:-

1. மூலாதாரத்தில் உள்ள குண்டலினி விழித்து மேல் நோக்கிச் சென்று உண்டாகும் ஒளி அனுபவங்கள் வள்ளற்பெருமான் விளக்கும் சாகாக்கலையில் இடம் பெறவில்லை.
2.தலைக்குமேலே ஒரு குண்டலினி உள்ளது.
3. இந்த ஆற்றல் இறங்கி தலைக்குள் இறங்கும்போது ஒளி அனுபவங்கள் உண்டாகின்றன.

## 2.1. <u>ஒளி அனுபவங்கள் உண்டாகும் நெறி</u>

நெற்றியில் இருக்கும் நடுக்கண்ணுக்கு ஒரு கதவும் பூட்டும் இருப்பதாக வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். அந்தப் பூட்டை அருள் என்கிற திறவு கோலினாலேயே திறக்க முடியும் என்றும், அருளைப் பெறுவதற்கு நாம் தயவே வடிவாக வேண்டும் என்றும் கூறுகிறார்கள்.

கடவுள் அருட்பெருஞ்ஜோதி வடிவில் எல்லா உயிர்களும் இன்பமடையும் பொருட்டாகவே திருநடனம் இயற்றுவதாக வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். நிராதாரங்களைப் பற்றிக் குறிப்பிடும்போது அவர்கள் ஜோதி ஸ்தம்பம் பற்றிக் கூறி

அதற்கு மேல் சுத்த நடனம் என்ற நிலையினைத் தெரிவிக்கிறார்கள். நிராதார நிலைகள் மேலிருந்து கீழாக அமைந்துள்ள நிலையினைப் பின்வருமாறு குறிக்கலாம்.

**சுத்த நடனம்**

↓

ஜோதிஸ்தம்பம்

↓

குண்டலி வட்டம்
(மேல் நிலைக்குண்டலினி)

↓

ஓங்காரபீடம்

↓

ஆயிரத்தெட்டு கமல இதழ்
(உச்சி)

↓

படிக மேடை
(நெற்**றி)**

உயிர் இரக்கமே வடிவாகி ஒருவன் தொண்டுசெய்யும்போது எல்லா உயிர்களும் இன்பமுற திருநடனம் செய்யும் இறைவனின் அருள் சுத்த நடனம் செய்யும் இறைவனின் அருள்-ஜோதி ஸ்தம்பத்தின் வழியே இறங்கி மேல்நிலைக் குண்டலினியைத் தூண்ட, அந்த ஆற்றல் ஓங்காரபீடத்தின் வழியே இறங்கி, உச்சியின் மேலே உள்ள ஆயிரத்து எட்டு இதழ் கமலமாகிய சகஸ்ராரத்தை மலரச் செய்து, அதற்கு கீழே உள்ள படிகமேடை எனப்படும் நெற்றியை அடைந்து ஒளி அனுபவத்தை உண்டாக்கி-மரணத்தை வெல்லுதல் இறந்தவர்களை எழுப்புதல் முதலான சித்திகளை விளைவிக்கிறது. இதுவே தயாவடிவாகி அருளைப்பெற்று நெற்றிக்கண் திறக்கப்பெற்று மரணத்தை வெல்லமுடியும் என்று வள்ளற்பெருமான் கூறுவதற்கான விளக்கமாக இருக்க முடியும்.

மேற்கூறப்பட்ட செய்திகள் அனைத்தையும் வள்ளற்பெருமான் ஒரே இடத்தில் கூறவில்லை. இவற்றை வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு செய்திகளை விளக்கும்போது கூறி இருக்கிறார்கள். ஆனால் அவற்றை இணைத்துப் பார்த்தால் அவை எவ்வித முரண்பாடும் இல்லாது அமைந்து இருப்பது எல்லை இல்லா வியப்பை அளிக்கிறது.

## 3.சாகாக்கலையினைப் பயிலுங்கால் அனுபவமாகும் நிற ஒளிகள்

சாகாநிலையினைப் பெறும் குறிக்கோளுடன் உயிர் இரக்கத் திருநெறியில் பயிலுங்கால் பல்வேறு நிற ஒளிகள் அனுபவமாகும் என்பதை விளக்கவே, வடலூரில் ஞானசபையில் அருட்பெருஞ்ஜோதியை தரிசிப்பதற்கு முன்னால் பல்வேறு வண்ணங்கள் உள்ள திரைகள் நீக்கப்படும் அமைப்பினை வள்ளற்பெருமான் உருவாக்க இருக்கிறார்கள்.

ஞானசபையில் முதலில் கறுப்புத்திரையும் அடுத்தடுத்து நீலத்திரை பச்சைத்திரை சிவப்புத்திரை பொன்மைத்திரை வெண்மைத்திரை கலப்பு வண்ணத்திரை ஆகியவை அமைக்கப் பெற்றுள்ளன. இவை அனைத்திலும் ஓரத்தில்

வெள்ளி நிறத்தில் பளபளப்பான தடித்த கோடுகள் அமைக்கப்பட்டு உள்ளன. திரைகள் அனைத்தும் ஒளிகளே என்பதை உணர்த்தவே இந்தக் கோடுகள் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| **கறுப்புத்திரை** | **-** | **மாயாசத்தி** |
| **நீலத்திரை** | **-** | **கிரியாசத்தி** |
| **பச்சைத்திரை** | **-** | **பராசத்தி** |
| **சிவப்புத்திரை** | **-** | **இச்சாசக்தி** |
| **பொன்மைத்திரை** | **-** | **ஞானசத்தி** |
| **வெண்மைத்திரை** | **-** | **ஆதிசத்தி** |
| **கலப்புத்திரை** | **-** | **சிற்சத்தி** |

என்று திரைகள் குறிக்கும் பொருள்களை வள்ளற்பெருமான் உபதேசித் திருக்கிறார்கள். ஒளியாக அகக்காட்சியில் அனுபவமாகும் இத்திரைகள் எவ்வெவற்றை மறைக்கின்றன என்பதையும் வள்ளற்பெருமான் விளக்கி இருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| கறுப்புத்திரை | - | அரைசது மறைக்கும் |
| நீலத்திரை | - | ஆருயிரை மறைக்கும் |
| பச்சைத்திரை | - | பரவெளியை மறைக்கும் |
| சிவப்புத்திரை | - | சித்துறு வெளியை-ஆன்மா இருக்கும் வெளியை மறைக்கும் |
| பொன்மைத்திரை | - | மெய்ப்பொருளாகிய உணர்வை மறைக்கும் |
| வெண்மைத்திரை | - | மெய்ப்பதியாகிய அருட்பெருஞ்ஜோதி இறைவன் இருக்கும் வெளியை மறைக்கும். |
| கலப்புத்திரை | - | சமரச சுத்த சன்மார்க்க அனுபவங்களை மறைக்கும் |

தியானத்தில் அனுபவமாகும் பல்வேறு நிற ஒளிகள் குறிக்கும் ஆற்றல்களை அரவிந்தர் பின்வருமாறு விளக்குகின்றார்:-

| | | |
|---|---|---|
| **வெண்ணிற ஒளி** | **-** | **தெய்வீக ஞானத்தின் ஆற்றல்** |
| **பொன்னிற ஒளி** | **-** | **ஆன்மீக ஆற்றல்** |
| **நீலநிற ஒளி** | **-** | **ஆன்மீக உணர்வு** |
| **பச்சை நிற ஒளி** | **-** | **தெய்வீக ஞானத்தின் செயல் ஆற்றல்** |

சுவாமி முக்தானந்தாவும் குண்டலினி சக்தி விழித்தெழுந்தபின் கறுப்புநிற ஒளி வெண்ணிற ஒளி நீலநிற ஒளி முதலான ஒளிகளை அனுபவித்ததாகக் கூறுகிறார்.

இவ்வொளிகள் அனைத்தும் மாயையின் ஆற்றல்கள். இவை அனைத்தையும் கடந்து ஆன்மானுபவம் கடவுளனுபவம் ஆகியவை அமைந்துள்ளன என்பது

வள்ளற்பெருமானாரின் கருத்து. திரைகள் அமைந்துள்ள நிலைகள்-அவற்றை நீக்கும் முறைகள் ஆகியவை பற்றி அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்:-

1. நமது ஆன்ம அறிவை விளக்கமின்றி கணக்கற்ற திரைகள் மூடிக் கொண்டிருக்கின்றன. அவற்றுள் பச்சைத்திரை மிகவும் அழுத்தமான திரை.
2. நம்முடைய நிலை எப்படிப்பட்டது நம்மை நடத்துகின்ற தெய்வத்தின் நிலை எப்படிப்பட்டது என்றும்-நம்முடைய குறைகள் யாவை என்றும் சிந்திப்பதாலும்; ஆன்ம உருக்கத்துடன் கடவுளை வழிபடுவதாலும் ஒரு வெப்பம் உண்டாகும். இந்த வெப்பத்தால் முன் சொன்ன அழுத்தம் மிகுந்த பச்சைத்திரை நீங்கும்.

3. பச்சைத்திரை நீங்கிவிட்டால் மற்றத் திரைகள் விரைவில் நீங்கிவிடும். திரைகள் நீங்கிவிட்டால் படைத்தல் முதலான ஐந்தொழிலையும் செய்யும் ஆற்றல் உண்டாகும்.

வள்ளற்பெருமான் கூறும் ஏழுதிரைகளையும் ஒளிகளாகக் கண்டு, இவ்வொளிகள் அனைத்தையும் கடந்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவனின் அருட்பேர் ஒளியைக் காணும் அனுபவத்தைப் பெறும்போதுதான் மரணம் நீங்கும்.அதற்கு இடையில் அனுபவமாகும் ஒளிகளையே ‘அருட்பேர் ஒளி’ என நினைத்து சாகாக்கலை பயில்வோர் ஏமாந்துவிடக்கூடாது என்பதற்காகவே திரைகள் பற்றிய விளக்கங்களை வள்ளற்பெருமான் அருளி இருக்கிறார்கள். மாயையின் தொடர்பான ஒளி அனுபவங்களையே முடிவான அனுபவமாகி எண்ணி ஏமாந்துவிடாமல் இருப்பதற்கு இறைவனை நினைந்து மனம் உருகி வழிபடுவதே சிறந்தவழி என்று அவர்கள் உரைக்கிறார்கள். அதற்காகவே அடியிற் காணும் பாடல்களை போன்ற உள்ளத்தை உருக்கும் பாடல்கள் பலவற்றை அவர்கள் அருளி இருக்கிறார்கள்.

**“களக்கம்அறப் பொதுநடம் நான் கண்டுகொண்ட தருணம்**
**கடைச்சிறியேன் உளம்பூத்து காய்த்ததொரு காய்தான்**
**விளக்கமுறப் பழுத்திடுமோ வெம்பி உதிர்ந்திடுமோ**
**வெம்பாது பழுக்கினும் என் கரத்தில் அகப்படுமோ**
**கொளக்கருதும் மலமாயைக் குரங்கு கவர்ந்திடுமோ**
**குரங்குவராது எனது குறிப்பில் அகப்படினும்**
**துளக்கம்அற உண்ணுவனோ தொண்டைவிக்கிக் கொளுமோ**
**ஜோதி திரு உளம் எதுவோ ஏதும் அறிந்திலனே”**

**“கரணமெலாம் கரைந்த தனிக் கரைகாண்பது உளதோ**
**கரைகண்ட பொழுது எனையும் கண்டு தெளிவேனோ**
**அரணமெலாம் கடந்த அருள்வெளி நேர்படுமோ**
**அவ்வெளிக்கண் ஆனந்த அனுபவம்தான் உறுமோ**
**மரணமெலாம் தவிர்த்து சிவமயமாகி நிறைதல்**
**வாய்த்திடுமோ மூலமல வாதனையும் போமோ**
**சரணமெலாம் தரமண்றில் திருநடஞ்செய் பெருமான்**
**தனது திருவுளம் எதுவோ சற்றும் அறிந்திலனே”**

இதுவரை சாகாக்கலைப் பயிற்சியில் அனுபவமாகும் ஒளிகளை, நிறத்தை அடிப்படையாக்கொண்டு ஆராய்ந்தோம். இனி இப்பயிற்சியில் அனுபவமாகும் ஒளிகளைப் பற்றி அவற்றின் நுண்தன்மையினை அடிப்படையாகக்கொண்டு ஆராய்வோம்.

## <u>3.சாகாக்கலைப் பயிற்சியில் அனுபவமாகும் நுண் ஒளிகள்</u>

வள்ளற்பெருமான் உலகத்தையும் உடம்பையும் ஒப்பிட்டு அற்புதமான கோட்பாடு ஒன்றினை அருளி இருக்கிறார்கள். உலகத்திலும் உடம்பிலும் உள்ளவற்றை அகம் அகப்புறம் புறம் புறப்புறாம் என்ற நான்கு நிலைகளில் வகைப்படுத்துகின்றார்கள். நுண்மை தன்மையினை அடிப்படையாகக் கொண்டு இந்தப் பாகுபாட்டினை அவர்கள் செய்திருக்கிறார்கள். அதனைப் பின்வருமாறு கூறலாம்.

| | | |
|---|---|---|
| **புறப்புறம்** | **-** | **பருமை** |
| **புறம்** | **-** | **நுண்மை** |
| **அகப்புறம்** | **-** | **மீநுண்மை** |
| **அகம்** | **-** | **அதிமீநுண்மை** |

அண்டத்தையும் (உலகையும்) பிண்டத்தையும் (உடம்பையும்) ஒப்பிட்டு அவர்கள் விளக்குவதைப் பின்வருமாறு கூறலாம்:-

| <u>நிலை</u> | <u>பிண்டத்தில்</u> | <u>அண்டத்தில்</u> |
|---|---|---|
| **புறப்புறம்** | **இந்திரியங்கள்** | **நட்சத்திரங்கள்** |
| **புறம்** | **மனம்** | **சந்திரன்** |
| **அகப்புறம்** | **ஜீவன்** | **சூரியன்** |
| **அகம்** | **ஆன்மா** | **அக்கினி** |

இதன் அடிப்படையில் அண்டத்தில் காணப்படும் ஒளிகளையும் பிண்டத்தில் காணப்படும் ஒளிகளையும் பின்வருமாறு பொருத்தி ஒப்பிட்டு அறியலாம்:-

| **பிண்ட ஒளி** | | **அண்ட ஒளி** |
|---|---|---|
| **இந்திரிய ஒளி** | **-** | **நட்சத்திர ஒளி** |
| **மன ஒளி** | **-** | **சந்திர ஒளி** |
| **ஜீவ ஒளி** | **-** | **சூரிய ஒளி** |
| **ஆன்ம ஒளி** | **-** | **அக்கினி ஒளி** |

இவ்விடங்களில் எல்லாம் கடவுள் பிரகாசம் உள்ளது என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். ஆதலால், உயிர் இரக்கத் திருநெறியில் நின்று, புருவமையத் தியானம் செய்வோருக்கு, கடவுள் அருள் கிடைக்கும் போது,

இந்திரியங்கள் மனம் ஜீவன் ஆன்மா முதலானவை ஒளிபெற்று, அவற்றின் ஒளிகள்-ஒன்றைக் காட்டிலும் ஒன்று நுண்மை வாய்ந்த ஒளிகளாகவே அனுபவமாகும் என்று கொள்ளலாம்.

தியானத்தில் கண்கள் முதலிய புலன்களின் ஒளி நட்சத்திர பிரகாசம் போல அனுபவமாகும். மனதின் ஒளி சந்திரனின் ஒளிபோல் அனுபவமாகும். மனநோய்கள் சந்திரன் முழுமையாக விளங்கும் முழுநிலவு நாளில் அதிகரிப்பது அனைவருக்கும் தெரிந்த செய்தி. இதிலிருந்து மனதையும் சந்திரனையும் இணைத்து வள்ளற்பெருமான் கூறுவது பொருத்தமானதே என்று அறியலாம்.

ஜீவ ஒளி-சந்திர ஒளியைப் பார்க்கிலும் நுண்மையும் பிரகாசமும் உடையதாய்-சூரியனின் ஒளி போல் தியானத்தில் அனுபவமாகும்.

ஆன்ம ஒளி சூரிய ஒளியினும் நுண்மையதாய், ஒண்மையதாய் பிரகாசமாய் தியானத்தில் அனுபவமாகும். வள்ளற்பெருமான் ஆன்மா புருவமையத்தில் கோடி சூரியப் பிரகாசம் உடையதாய் விளங்குவதாகக் கூறுகிறார்கள்.

ஆன்மஒளியே கோடி சூரியப் பிரகாசம் உடையது எனில், ஆன்மாவுக்கு ஆதாரமாக விளங்கும் கடவுளின் ஒளியை எவ்வாறு அளவிட முடியும்? எண்கடந்த மதி கதிர் சுடர் அனைத்தும் கூடி ஒன்றானாலும் அது கடவுளின் ஒளிக்கு ஒப்பாகாது என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள்.

**"..........அவர் மேனி விளக்கமது என்கடந்த**
**மதிக்கதிர் செங்கனல் கூடிற்று என்னினும் சாலாதே!"**

**"செம்பவளத் திருமலையோ! மாணிக்க விளக்கோ!**
**தெய்வமரகதத்திரளோ! செழுநீலப் பொருப்போ!**
**பம்புமணி ஒளியோ! நற் பசும்பொன்னின் சுடரோ!**
**படிகவண்ணப் பெருங்காட்சிதானோ என்று உணர்ந்தோர்**
**எம்பரமன் றெம்பெருமான் புறவண்ணம் யாதோ**
**என்பாரேல் அகவண்ணம் யார் உரைக்கவல்லார்**
**தம்பரம் என்றென்னை அன்று மணம்புரிந்தார் ஞான**
**சபைத்தலைவர் அவர்வண்ணம் சாற்றுவதென் தோழி"**

அகத்தே அனுபவமாகும் இத்தகைய தூய ஒளி, முன்பு விவரிக்கப்பட்ட பல்வேறு நிறமுடைய மாயையின் தொடர்புடைய ஒளிகளைச் சார்ந்தது அன்று என்பது தெளிவு. அளவுகடந்த மீஒண்மையும் மீநுண்மையும் வாய்ந்த இவ்வொளி, உடம்பை ஒளியாக்கி மரணமிலாப் பெருவாழ்வை வழங்க வல்லது என்பதில் ஐயமில்லை.

## 4.சாகாக்கலையினைப் பயில சாதி சமயம் மதம் முதலிய வேற்றுமை உணர்வுகளே முக்கியத் தடைகள்

உயிர் இரக்கமே சாகாக்கலைக்கு உரிய சிறந்த பயிற்சி என வள்ளற்பெருமான் கருதுகிறார்கள் என்பதை முன்னரே கண்டோம். உயிர் இரக்கத்திற்கு ஆன்மநேய ஒருமைப்பாடும் உரிமைப்பாடும் மிகவும்

இன்றியமையாதன. ஆன்மநேய ஒருமைப்பாட்டிற்க்கு முக்கியத் தடைகள் சாதி சமய மத ஆசார சங்கற்ப விகற்பங்களே என்று வள்ளற்பெருமான் கருதுகின்றார்கள்.

"தத்துவ ஒழுக்கங்கள் பற்றி சமயங்கள் ஏற்படுத்தப்பட்டு இருக்கின்றன; தொழில் ஒழுக்கம் பற்றி ஜாதிகள் ஏற்படுத்தப்பட்டு இருக்கின்றன; தயவை விருத்தி செய்வதற்கு தடையாக இருப்பவை ஜாதி ஏற்பாடு சமய ஏற்பாடு முதலிய கட்டுப்பாட்டு ஆசாரங்கள். இவை ஒழிந்து சுத்தசிவ சன்மார்க்க சத்திய ஞான ஆசாரத்தை வழங்கிப் பொது நோக்கம் வந்தால், காருணியம் விருத்தியாகிக் கடவுள் அருளைப் பெற்று அனந்த சித்தி முக்திகளைப் பெறக்கூடுமே அல்லது இல்லாவிடில் கூடாது" என்றும்.,

"சுத்த சன்மார்க்கத்துக்கு முக்கியத் தடையாகிய சமயம் மதம் முதலிய மார்க்கங்களை முற்றும் பற்றற கைவிட்டவர்களும், காமக் குரோதம் முதலியவற்றை ஞான அறிவினால் தடுத்துக் கொள்பவர்களும், கொலை புலை முதலியவற்றைத் தவிர்த்தவர்களும், ஆகிய இவர்கள்தான் சுத்த சன்மார்க்கத்துக்கு உரியவர்கள் ஆவார்கள். மரணம் பிணி மூப்பு பயம் துன்பம் முதலியவற்றைத் தவிர்த்துக் கொள்வார்கள்" என்றும்,

அவர்கள் கூறுவதில் இருந்து சாகாக்கலையினைப் பயில-சாதி சமய வேறுபாடுகளே முக்கியத்தடை என்ற அவர்களது கருத்து நமக்குப் புலப்படும்.

மேற்கூறப்பட்ட செய்திகள் அனைத்தையும் தொகுத்து, திருஅருட்பா விளக்கும் சாகாக்கலைப் பயிற்சியினை பின்வருமாறு வகுத்தும் தொகுத்தும் கூறலாம்:-

1. உணவு இணைவிழைச்சு தூக்கம் ஆகியவற்றை அளவுபடுத்திக் கொள்ள வேண்டும். அச்சத்தை தவிர்க்க வேண்டும். இதனால் நீண்ட ஆயுள் உண்டாகும்.

2. கரிசலாங்கண்ணி மூலிகையை நாள்தோறும் உண்ண வேண்டும். இதனால் உடம்பு வலிமையுடன் நீண்ட காலம் இருக்கும்.

3. பொறிகள் புலன்கள் மனம் முதலான கருவிகள் ஆகியவற்றை தீயநெறிகளில் செல்லாமல் தடுத்தல்-உயிர்களுக்கு உதவும் நெறியில் பழக்குதல் ஆகிய இந்திரிய கரண ஒழுக்கத்தில் பழகுதல் வேண்டும்; மனிதர்கள் அனைவரையும் சமமாகக் கருதி அன்பு காட்டும் ஜீவ ஒழுக்கத்தையும்; ஒவ்வொரு உயிரையும் சபையாகவும் அதன் உள்ளொளியே கடவுளாகவும் பாவித்து நிற்கும் ஆன்ம ஒழுக்கத்தையும் கடைப்பிடிக்க வேண்டும். இதனால் சாகாக்கல்வி கற்றல் முதலான பேறுகள் கிட்டும்.

4. எப்போதும் கடவுளிடத்து அன்பும்-உயிர்களிடத்து 'தயவும் உடையவனை காமம் சாராது.-அவனது உடம்பு நீண்ட ஆயுளுடன் விளங்கும்.

5. தயவே வடிவாகி விளங்கினால் அருள் என்னும் திறவுகோல் கிடைக்கும். இதனால் புருவமையப் பூட்டும் கதவும் திறந்து, நெற்றிக்கண் திறந்து, எல்லாவற்றையும் பட்டப்பகல் போல் காண முடியும்; இறந்தவர்களை எழுப்ப முடியும்.

6. தேகத்தாலும் வாக்காலும் திரவியத்தாலும் உதவி செய்தல் பரோபகாரம். ஆண்டவனின் புகழையும் ஆன்மாவின் உண்மையையும் விசாரித்தல் சத்விசாரம். பரோபகாரம் சத்விசாரம் என்னும் இரண்டு கருவிகளால்தான் சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் ஆகியவற்றைப் பெற்று மரணத்தை வென்று வாழ முடியும்.

7. தயவே வடிவானால் இறந்தோரை எழுப்பும் வல்லமையும் கடவுளாகவே விளங்கும் பெருநிலையும் கிட்டும்.

8. தயவுக்கு ஜாதி சமய மத வேறுபாட்டு உணர்ச்சிகளே முக்கியத்தடைகள். அதனால் இவற்றை முற்றிலும் பற்றற கைவிட வேண்டும்.

மேற்கண்டவாறு திருஅருட்பா விளக்கும் சாகாக்கலைப் பயிற்சிகள் படிமுறையாகவும் தொடர்பாகவும் முரண்பாடு இல்லாமலும் முழுமையாகவும் அமைந்துள்ளன.

பல சிறப்புகள் திருஅருட்பா விளக்கும் சாகாக்கலைப் பயிற்சியில் இடம் பெற்றிருந்தாலும்-சிறப்பில் சிறப்பாக-ஒப்புமை கூற முடியாத சிறப்பாக-அதில் காணப்படுவது உயிர் இரக்கம் இறை அன்பு ஆகியவற்றில் பழகி மரணத்தை வெல்லும் பயிற்சி முறையே ஆகும். “இறை எண்ணத்தால் நிறைந்த உயிர் இரக்கப் பேரொழுக்கத்தின் முன் - நரை திரை பிணி மூப்பு சாக்காடு ஆகியவை நிலையுறா என்பதே வள்ளற்பெருமானின் கருத்து” என்றும், ‘அவர்களது தேர்ந்த முடிவான அனுபவம் தயாவடிவான சாகாக்கலை அனுபவதேகம்’ என்றும் திருஅருட்பா சுத்தப்பதிப்பு ஆசிரியர் திரு ஆ.பாலகிருஷ்ணப்பிள்ளை அவர்கள் கூறுவதும் இங்கு நினைவுகூரத்தக்கது.

சாகாக்கலையினைப் பயிலுவதில் முதல்படி ஆசிரியரின் திருவடியை மறவாமல் இருப்பதே என்று வள்ளற்பெருமான் அறிவுறுத்துகின்றார்கள். அவர்கள் ஆசிரியர் என்று குறிப்பிடுவது சாகாக்கலையில் தேர்ந்து விளங்கும் ஆசிரியரையே ஆகும். சாகாக்கலையினைக் கற்பிக்கும் ஆசிரியர்களில் தலைசிறந்து விளங்கும் வள்ளற்பெருமானை மறவாமல் இருப்பதே சாகாக்கலையினைப் பயிலுவதற்குரிய முதல்படி என்று நாம் கொள்ள வேண்டும்.

## அடிக்குறிப்புகள்

1. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 458
2. மேலது, பக்கம் 443
3. மேலது, பக்கம் 315-316
4. மேலது, பக்கம் 314
5. மேலது, பக்கம் 316
6. மேலது, பக்கம் 77

7. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 71
8. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4615 (வரிகள் 963-964)
9. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 57-58
10. மேலது, பக்கம் 34
11. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4160
12. திருக்குறள், புலால் மறுத்தல், பாடல் 1
13. திருக்குறள், கொல்லாமை, பாடல்2
14. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 67-68
15. மேலது, பக்கம் 296
16. திருமந்திரம் மூவாயிரம், பாடல் 705
17. மேலது, பாடல் 704
18. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 307
19. திருக்குறள், மருந்து, பாடல் 1
20. திருவள்ளுவ நாயனார் கற்பம் 300., பக்கம் 14-15
21. திருஅருட்பா உரைநடைப் பகுதி பக்கம் 327
22. திருமூலர் வைத்தியம், பாடல் 145
23. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 239
24. க.ச.முருகேச முதலியார், பொருட்பண்பு நூல், பயிர் வகுப்பு, குணபாடம் பக்கம் 173
25. மேலது, பக்கம் 399
26. மேலது, பக்கம் 561
27. மேலது, பக்கம் 344-345
28. திருஅருட்பா உரைநடைப் பகுதி, பக்கம் 246
29. மேலது, பக்கம் 219 (மூலிகை எண் 24)
30. மேலது, பக்கம் 220 (மூலிகை எண் 64)
31. மேலது, பக்கம் 221 (மூலிகை எண் 90)
32. மேலது, பக்கம் 223 (மூலிகை எண் 151)
33. மேலது, பக்கம் 224 (மூலிகை எண் 202)
34. மேலது, பக்கம் 226 (மூலிகை எண் 296)
35. மேலது, பக்கம் 219 (மூலிகை எண் 30)
36. மேலது, பக்கம் 219 (மூலிகை எண் 57)
37. மேலது, பக்கம் 219 (மூலிகை எண் 8)
38. மேலது, பக்கம் 220 (மூலிகை எண் 37)
39. மேலது, பக்கம் 220 (மூலிகை எண் 65)
40. மேலது, பக்கம் 221 (மூலிகை எண் 82)
41. மேலது, பக்கம் 221 (மூலிகை எண் 100)
42. மேலது, பக்கம் 222 (மூலிகை எண் 129)
43. மேலது, பக்கம் 223 (மூலிகை எண் 152)
44. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 152
45. திருமந்திரம் மூவாயிரம், பாடல் பகுதி, பக்கம் 244
46. B.D. Chaurasia, Human Anatomu, pp.263-265
47. பதினெண்சித்தர் பெரிய ஞானக்கோவை, சிவயோகசாரம், பக்கம் 282
48. மேலது, உரோமரிஷி பாடல், பாடல் 13
49. ஔவைக்குறள், பாடல் 49
50. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 243
51. மேலது, பக்கம் 243

52. மேலது, பக்கம் 243
53. மேலது, பக்கம் 238
54. மேலது, பக்கம் 289
55. மேலது, பக்கம் 318-321
56. மேலது, பக்கம் 243
57. ஸ்ரீசற்குரு சுவாமிகள் திருப்பாடல் திரட்டு, சிவராஜயோகம், பாடல் 3
58. மேலது, பாடல் 4
59. திருஅருட்பா மூவாயிரம், பாடல் 806, 807
60. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 319
61. வைத்திய வாதயோக ஞான சாஸ்திரத்திரட்டு முதற்பாகம், திருமூலர் ஞானக்குறி 30, பாடல் 15
62. T.Lobsang Rampa,the Find Eye, pp. 99-105
63. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 317
64. மேலது, பக்கம் 315
65. மேலது, பக்கம் 312
66. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல்கள் 3395-3400
67. மேலது, பாடல்கள், 3407, 3409
68. மேலது, பாடல் 3503
69. மேலது, பாடல் 4615 (வரிகள் 967-968)
70. மேலது, பாடல் 4960
71. மேலது, பாடல் 4745
72. மேலது, பாடல் 3401
73. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 80
74. மேலது, பக்கம் 77
75. மேலது, பக்கம் 453
76. மேலது பக்க 444. 445
77. மேலது, பக்கம் 57-58
78. மேலது, பக்கம் 356
79. மேலது, பக்கம் 319
80. மேலது, பக்கம் 316-317
81. மேலது, பக்கம் 312
82. திருஅருட்பா ஆறாவது திருமுறை, சமரச சுத்த சன்மார்க்கத் திருநெறி குறிப்புகள், பக்கம் 75
83. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 284-285
84. ஔவைக்குறள், பாடல் 238
85. வைத்திய வாதயோக ஞான சாஸ்திரத் திரட்டு, நான்காம் புத்தகம் கூர்மானந்தர் ஞானசூத்திரம் 50, பாடல் 10.
86. Sir John Woodroffe, The Serpent Power, page 346
87. Swami Muktananda, The Play of Consciousness, pp. 183-184
88. Arjan Dass Malik, Kundalini and Meditation, p.34
89. Ibid., 35
90. Ibid, p.44
91. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 332
92. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 332
93. Arjan Dass Malik, op-cit., p.44
94. திருஅருட்பா உரைநடைப் பகுதி, பக்கம் 316-317
95. மேலது, பக்கம் 445

96. மேலது, பக்கம் 329
97. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4615, வரிகள் 813-816
98. T.R.Thulasiram, Arutperum Jothi and Deathless Body, volume 1 p.399
99. Swami Muktananda, op.cit.,pp.183-187
100.திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 351-357
101.திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 3380
102.மேலது, பாடல் 3377
103.திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 248
104.மேலது, பக்கம் 249
105.மேலது, பக்கம் 329
106.திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5737
107.மேலது, பாடல் 5749
108.திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 313
109.மேலது, பக்கம் 307
110.ஆ.பாலகிருஷ்ண பிள்ளை, திருஅருட்பா திருமுகப்பகுதி, பாயிரம், பக்கம் 30
111.ஆ.பாலகிருஷ்ணபிள்ளை, திருஅருட்பா உபதேசப்பகுதி, பாயிரம், பக்கம் 27
112. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 307

# இயல் எட்டு

## வள்ளற்பெருமானின் மரணமிலாப் பெருவாழ்வும்-புதிய உலகம் உருவாதலும்

சாகாக்கலையில் தேர்ச்சிபெற்ற நிலையில்-தமது உடம்பு சுத்ததேகம் பிரணவதேகம் ஞானதேகம் ஆகியவையாக மாறி அமைந்தது பற்றி வள்ளற்பெருமான் பாடல்கள் வாயிலாகவும் உரைநடைகள் வாயிலாகவும் மிக விரிவாக விளக்கி இருக்கிறார்கள். இதுவரையில் மரணமிலா வாழ்வு பெற்ற பெரியோர்கள் உலகியல் வாழ்வைக் கருதாது அருளில் கரைந்து விட்டார்கள் என்றும், வள்ளற்பெருமான் அருள் உடம்பு பெற்று அருள்நெறியினை உலகியல் வாழ்வில் விளக்கம் செய்தவாறு மரணமில்லாமல் வாழ்ந்துகொண்டு இருக்கிறார்கள் என்றும் சுவாமி சரவணானந்தா கூறுவது சிந்திக்க வேண்டிய ஒன்றாக விளங்குகின்றது.

அசுத்தபூத உடம்பை சுத்தபூத உடம்பாக மாற்றுவது போல், அசுத்த உலகியலை சுத்த உலகியலாக-அருளியல் உலகியலாக-மரணமிலாப் பெருவாழ்வு பெறுவதற்குரிய உலகியலாக-மாற்றுதற்குரிய முயற்சியின்றி இதுவரை மரணமிலாப் பெருவாழ்வு பெற்ற பெரியோர்கள் அருளில் கரைந்துவிட்டார்கள். ஆனால் வள்ளற்பெருமான் தாம் மரணமில்லாமல் வாழ்ந்துகொண்டே உலகியல் வாழ்வை மாற்றி அமைத்து அனைத்து உயிர்களும் சன்மார்க்க நெறியில் நிலைபெறச் செய்யும் பணியை செய்து கொண்டிருக்கிறார்கள் என்றே கருத வேண்டும்.

சாகாக்கலையை பின்பற்றி வள்ளற்பெருமான் பெற்ற அற்புதமான தனிப்பேரனுபவங்களில் மிகச் சிறப்பாக விளங்குவது மரணத்தை வென்று வாழ்ந்துகொண்டே உலகத்தையும் மாற்றி அமைக்கும் ஆற்றலை தாம் பெற்றிருப்பதாக அவர்கள் மிக மிக உறுதியாக ஆணையிட்டு அறிவித்திருப்பதே ஆகும்.

வள்ளற்பெருமான் உயிர் இரக்கமே வடிவாகி, -வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடியமை, வீடுதோறும் இரந்தும் பசியறாது அயர்ந்த வெற்றாரைக் கண்டு உளம் பதைத்தமை, நீடிய பிணியால் வருந்தி நின்றாரைக் கண்டு உளம் துடித்தமை, ஈடின் மானிகளாய் ஏழைகளாய் நெஞ்சு இளைத்தவர்தமைக்கண்டு இளைத்தமை, சிறுதெய்வ வெங்கோயில்களில் நடைபெற்ற உயிர்ப்பலியினைக் கண்டு நொந்து உளம் நடுக்குற்றமை, துண்ணெனக் கொடியோர் பிற உயிர் கொல்லத் தொடங்கியபோதெல்லாம் பயந்தமை, வலையும் தூண்டிலும் கண்ணிவகைகளும் கண்டபோதெல்லாம் நடுங்கியமை, வன்புலால் உண்ணும் மனிதரைக் கண்டபோதெல்லாம் மயங்கி உள் நடுங்கி ஆற்றாமல் என்பெலாம் கருக இளைத்தமை, பசிப்பிணியால் பரதவிக்கின்றாரைக் கண்டு உளம் பகீரென நடுங்கியமை, உலகு அரசாள்வோர் வாள்கொண்டு ஒருவரோடு ஒருவர் போரிட்டு மடிந்தனர் என்ற செய்தி கேட்டு பெரும் துயர் அடைந்தமை முதலான செய்திகளை அவர்களது 'பிள்ளைப் பெருவிண்ணப்பம்' தெரிவிக்கின்றது.

### <u>அ. வள்ளற்பெருமானின் சித்திநிலையும் உலகில் நிகழ்ந்துவரும் மாற்றங்களும்</u>

கருணையே வடிவாய் பிறர்களுக்கு அடுத்த கடுந்துயர் அச்சம் ஆதிகளைத் தவிர்த்து, அவர்க்கு இன்பம் தரவும், வன்புலை கொலை இரண்டும் ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க உஞற்றவும், மண்ணுலகதிலே வாழும் உயிர்கள் வருந்தும் வருத்தங்களைத் தவிர்க்கவும் ஆற்றலை இறைவனிடம் இருந்து பெற்றிடவும் வள்ளற்பெருமான் கொண்டிருந்த பெருவிருப்பத்தை அவர்களது 'பிள்ளைச் சிறுவிண்ணப்பம்' தெரிவிக்கின்றது.

**"புரைசேரும் கொலைநெறியும் புலைநெறியும் சிறிதும்**
**பொருந்தாமல் எவ்வுயிரும் புரிந்து உவத்தல் வேண்டும்"**

என்பதே வள்ளற்பெருமான் இறைவன்பால் தொடர்ந்து செய்துவந்த விண்ணப்பம் ஆகும்.

ஆனால், ஓர் உயிர் மற்றோர் உயிரை உணவு முதலியவற்றுக்காக அழிக்கும் நிலையினைத் தவிர்க்கமுடியாத வகையில் படைப்பு அமைந்துள்ளது. அதனால்,

**"அறிவாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்**
**ஐந்தொழில்நான் புரிந்துலகில் அருள்விளக்கல் வேண்டும்"**

**"படிவானும் படைத்தல்முதல் ஐந்தொழிலும் ஞானம்**
**படைத்தல்முதல் ஐந்தொழிலும் நான்புரிதல் வேண்டும்"**

என்று வள்ளற்பெருமான் வேண்டிநின்றார்கள். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களை தாமே இயற்றுவதன் மூலமே, உலக அமைப்பை மாற்றி, அருள்நெறியை விளங்கச் செய்ய இயலும் என்று கருதி மேற்கண்ட விண்ணப்பங்களை அவர்கள் செய்திருக்க வேண்டும்.

படைத்தல் முதல் ஐந்தொழில்களைச் செய்து, உலகத்தை மாற்றி அமைத்து அருள்நெறியை-சன்மார்க்கநெறியை-புலைகொலை நீங்கிய புனிதநெறியை விளங்கச்செய்யும் பேராற்றலை இறைவன் தமக்குத் தந்தருளினான் என்பதை,

**"உலகுயிர்த்திரள் எலாம் ஒளிநெறி பெற்றிட**
**இலகும் ஐந்தொழிலையும் யான் செயத் தந்தனை"**

என்ற அவர்களது அருட்பெருஞ்ஜோதி அகவல் அடிகளால் அறியலாம்.

உலகம் படைத்தல் முதல் ஐந்தொழில் இயற்றும் ஆற்றல் தமக்கு கிடைத்ததால் வருங்காலத்தில் பற்பல அதிசயங்களை தாம் உண்டாக்க இருப்பதாக தெரிவிக்கிறார்கள். இதனை,

**"..........எந்தப் பதத்தலைவராலும் படைக்கவொணாச்**
**சித்தியை நான் படைக்கவைத்த பதியே"**

**"................................**
**பாரிடை வானிடைப் பற்பலகாலம்**
**விதிசெயப் பெற்றனன் இன்றுதொட்டு என்றும்**
**மெய்யருட் ஜோதியால் விளைவிப்பன் நீஅவ்**
**வதிசயம் பார்க்கலாம் ஆடேடி பந்து"**

என்பன போன்ற அவர்களது அருட்பாக்களால் அறியலாம். சமரச சுத்த சன்மார்க்க ஞானிகள் பெறும் சித்திகளில் ஒன்றாக 'காலசித்தி' என்ற சித்திநிலை பற்றி வள்ளற்பெருமான் குறிப்பிடுகிறார்கள். காலசித்தி என்பதை காலத்தை மாற்றி அமைக்கும் சித்தி என்று கருதலாம்.

இனிமேல் வரஇருப்பது ஞானசித்தருடைய காலம் என்றும், இனி உலகில் பொதுநெறியே விளங்கும் என்றும் வள்ளற்பெருமான் தெரிவித்திருக்கிறார்கள். பொதுநெறி விளங்கும் காலம் 1900 முதல் தொடங்குவதாகவும் அறிவித்திருக்கிரார்கள். மதமார்க்கம் யாவும் இறந்தனவே' என்றும், 'மதித்த சமய மத வழக்கெல்லாம் மாய்ந்தது' என்றும் அவர்களது திருஅருட்பா பறைசாற்றுகின்றது.

இனிவரப்போவது ஞானசித்தருடைய காலம் என்றும், சாதி சமய பேதங்கள் அறவே நீங்கி தடையற்ற பெருநெறி உலகில் விளங்கும் என்றும்-அவர்கள் கூறுவதில், 'ஞானசித்தன்' என்று அவர்கள் யாரைக் குறிப்பிடுகிறார்கள் என்பதைச் சிந்திக்க வேண்டும்.

கர்மசித்தி யோகசித்தி ஞானசித்தி முதலான சித்திகள் அனைத்தையும் இறைவன் தமக்கு அருளியதாக வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். ‘அதனால் அவர்களையே ‘ஞானசித்தன்’ என்று நாம் கருதவேண்டும்.

“அறுபத்து நாலாயிரம் சத்திகளையும் தனது சுதந்திரத்தால் நடத்துவது, அறுநூற்று நாற்பத்து ஏழுகோடி பேதமாகிய மகாசித்திகளையும் தன்னிட்டம் போல் நடத்துவது, காலம் கடந்தது, அடிநிலை முடிநிலை சுத்தகர்ம சுத்தயோக சுத்தஞான சித்தி வல்லபங்களை தன் சுதந்திரத்தால் நடத்துவது,” என்று ஞானசித்தி பற்றி அற்புதமான ஆழங்காண முடியாத ஒரு விளக்கத்தையும் வள்ளற்பெருமான் அருளி இருக்கிறார்கள்.

அருட்பெருஞ்ஜோதியை வள்ளற்பெருமான் அனுபவிக்கும்போது, அது அவர்களின் தனிப்பட்ட அனுபவமாக மட்டும் அல்லாமல், அவ்வனுபவத்தால் உலகில் “தீம்பலா வாழை மா தென்னை” முதலியன சிறக்கும் என்றும், “மடம் பெற்ற மனிதர்கள் மதிபெற்று” வாழ்ந்திடுவர் என்றும் கூறுகிறார்கள்.

இத்தகைய அரிய பெரிய அற்புதத்தை நிகழ்த்துவதற்காக அவர்கள் எல்லா உயிர்களின் உடம்புகளிலும் புகுந்து, அருளியல் வேதிமாற்றத்தை உண்டாக்க விரும்பினார்கள் போலும்! அதனால்தான் 1873 ஆம் ஆண்டு “இப்போது இந்த உடம்பில் இருக்கிறேன். இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன்” என்ற அறிவிப்பை அவர்கள் வெளியிட்டார்கள். சாகாக்கலையில் கிட்டும் ஞானதேகம்- “எங்கும் பூரணமாக விளங்கும்” என்று அவர்கள் கூறுவதால், தம்பால் விளங்கும் ஞானதேகத்தினால் எல்லா உடம்பிலும் அவர்கள் புகுந்து சன்மார்க்கநெறியை உலகத்தில் விளங்கச்செய்ய முனைந்து இருக்கிறார்கள் என்பது தெளிவு.

வள்ளற்பெருமானின் தலைமாணாக்கர் தொழுவூர் வேலாயுதனார், வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்டபோது-தாம் திரும்பி வருவதாகவும், அதுவரையில் அனைத்து உயிர்களின் சகோதரத்துவத்தை வளர்க்கும் வகையில் உலகை மாற்றி அமைக்கும் பணியில் ஈடுபடப் போவதாகவும் தெரிவித்ததாகக் கூறுகிறார்.

வள்ளற்பெருமான் கூறியிருப்பது உண்மையானால், அவர்களுடைய அற்புதமான அருள் ஆற்றல் வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்ட காலமாகிய 1874 ஆம் ஆண்டு முதல், உலக வரலாற்றில் அந்தக் காலக்கட்டம் வரை காணப்படாத சன்மார்க்க நெறிக்குரிய புதுமையான நிகழ்ச்சிகள் பல நடைபெறத் தொடங்கி இருக்க வேண்டும்; அதாவது வள்ளற்பெருமான் ‘சன்மார்க்க காலம்’ என்று அறிவித்த 1900 ஆம் ஆண்டு முதல் மேற்கண்ட நிகழ்ச்சிகள் மிக வேகமாக நடைபெறத் தொடங்கி இருக்க வேண்டும்.

1874ஆம் ஆண்டுக்குப்பின் உயிர்களுக்குப் பலவகையான நலங்கள் பெருகுதல், போர்கள் விலக்கப்படுதல், ஒருமைப்பாடு வளர்தல், ‘ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும் ஒருமையுளராகி உலகியலை நடத்துதல்’ முதலான சன்மார்க்கநெறியின் கூறுகள் வளர்ந்து வருகின்றனவா என்பதனை இனி ஆராய்வோம்.

## 1. <u>மக்களுக்குப் பெரும் பயந்தரும் புதிய அறிவியல் கண்டுபிடிப்புகள்</u>

இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகளுக்கு முன் அறிவியல் யுகம் தொடங்கியதாகக் கருதலாம். இந்தக் காலக்கட்டத்தில்தான் அரிஸ்டாடில், ஆர்க்கிமிடிஸ், ஹிப்பாக்ரடீஸ் போன்றவர்கள் வாழ்ந்து அரிய கண்டுபிடிப்புக்களை உலகிற்கு வழங்கத் தொடங்கினர். அறிவியல் வரலாற்றை கவனித்தால், பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை புதிய கண்டுபிடிப்புக்களின் எண்ணிக்கை குறைந்த அளவில் ஒரு நூற்றாண்டில் ஐந்து ஆறு கண்டுபிடிப்புக்கள், என்று மிகக் குறைந்த அளவில் -மிகக் குறைந்த வேகத்தில்-நிகழ்ந்து உள்ளன என்பதை அறியலாம். ஆனால் வள்ளற்பெருமான் சன்மார்க்க காலம் தொடங்குவதாக அறிவித்த 1900க்குப் பின் அறிவியலில் புதிய புதிய கண்டுபிடிப்புக்கள் வெகு வேகமாக நிகழ்ந்துவருகின்றன.

1876 ஆம் ஆண்டு கிரகாம் பெல் தொலைபேசி கருவியைக் கண்டுபிடித்தார். 1879 ஆம் ஆண்டில் எடிசன் மின்விளக்கைக் கண்டுபிடித்தார். இதனால் உலகம் ஒளிமயமாகி வருகிறது. கிராமபோன் பேசும்படக் கருவி (சினிமா) முதலியவற்றையும் இந்தக் காலக்கட்டத்தில்தான் எடிசன் கண்டுபிடித்தார்.

1883 ஆம் ஆண்டு இராபர்ட்கோக் காலரா காசநோய் முதலியவற்றை உண்டாக்கு நுண்ணுயிர்களையும் புண்களை அழுகச் செய்யும் நுண்ணுயிர்களையும் கண்டுபிடித்தார். நோய்த்தடுப்பு முறைகளையும் உருவாக்கினார்.

1888 ஆம் ஆண்டு ஹென்றி ஹெர்ட்ஸ் வானொலிக் கருவியைக் கண்டுபிடித்தார். இந்தக் கருவியின் அடிப்படைத் தத்துவமே தொலைக்காட்சியிலும் பயன்படுகிறது.

1895ஆம் ஆண்டு இராண்ட்ஜன் எக்ஸ்-கதிர்களைக் கண்டுபிடித்தார். எலும்புமுறிவு மருத்துவத்தில் எக்ஸ் கதிர்களின் உயர்வான பயனை அறியாதார் இலர்.

1897 ஆம் ஆண்டு ரூடால்ஃப் டீசல் என்ற அறிஞர் டீசல் எந்திரத்தை கண்டுபிடித்தார். இதை அடிப்படையாகக் கொண்டுதான் போக்குவரத்துத் துறையில் மாபெரும் புரட்சி நிகழ்ந்துள்ளது.

1898 ஆம் ஆண்டு ரூதர்ஃபோர்டு என்னும் அறிவியல் அறிஞர் கதிர் இயக்கக் கதிர்களை கண்டறிந்ததுடன் அணுக்கருக் கொள்கையையும் வெளியிட்டார். கதிர் இயக்க கதிர்கள் மருத்துவம் வேளாண்மை முதலான துறைகளில் உலகம் இதுவரை கண்டிராத புதுமைகளைப் படைக்க உதவிவருகின்றன. அணுக்கரு பற்றிய கண்டுபிடிப்பு அணுஆற்றலை பயன்படுத்தவும் செயற்கைத் தனிமங்களை உருவாக்கவும் அடிப்படையை அமைத்துள்ளது.

1902 ஆம் ஆண்டினை ஒட்டிய காலக்கட்டத்தில் ஜகதீச சந்திரபோஸ் தாவரங்களுக்கும் உயிர் உண்டு என்று மெய்ப்பித்துக் காட்டினார். 'வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்' என்ற பாடலில் வள்ளற்பெருமான் வெளிப்படுத்தி இருக்கும் உயிர்நேயக் கோட்பாட்டிற்கு இந்தக் கண்டுபிடிப்பின் மூலம் அறிவியல் வழிப்பட்ட சான்று கிடைத்துள்ளது.

1903ஆம் ஆண்டு ரைட் சகோதரர்கள் வான ஊர்தியை அமைத்து பறந்து காட்டினார்கள். இதனால் மிக நீண்ட தொலைவையும் சில மணி நேரங்களில் கடக்கும் வாய்ப்பு கிட்டியது.

1905ஆம் ஆண்டு ஐன்ஸ்டீன் சார்பியல் கொள்கையை வெளியிட்டார். இதனால் சடப்பொருள்கள் ஆற்றலாக மாறும்போது, மிகப்பெரிய ஆற்றல் கிட்டும் என்ற உண்மையை அறிவியல் உலகம் உணர்ந்தது. அணு ஆற்றலை வெளிப்படுத்த இந்தக் கோட்பாடுதான் அடிப்படையாக அமைந்தது.

1910ஆம் ஆண்டு மேரி கியூரி ரேடியத்தைக் கண்டுபிடித்தார். இது புற்றுநோய் சிகிச்சைக்கு உதவுவதுடன் தொழில் துறையிலும் நல்ல முன்னேற்றங்களை உருவாக்கி வருகிறது.

1926ஆம் ஆண்டு பேயர்டு தொலைக் காட்சி கருவியை அமைத்து ஒளிபரப்பு யுகத்தை தொடங்கி வைத்தார். இந்தக் கருவி நாடு மொழி இனம் ஆகியவற்றைக் கடந்து உலகத்தை ஒரு குடும்பமாக இன்று இணைத்து வருகிறது.

1928ஆம் ஆண்டு அலெக்சாண்டர் ஃபிளமிங் பெனிசிலின் என்னும் மருந்தைக் கண்டுபிடித்து மருத்துவக் கலையில் புதுமையை உண்டாக்கினார். இந்தக் கண்டுபிடிப்பினால் புண்கள் எளிதில் ஆறவும் காய்ச்சல் முதலியன எளிதில் குணம் ஆகவும் வாய்ப்பு உருவாகி மக்கள் பெரும்பயன் பெற்றுவருகின்றனர்.

1938ஆம் ஆண்டு என்ரிகோ ஃபெர்மி நியூட்ரான் துகள்களால் அணுக்கருவைப் பிளக்கும் முறையைக் கண்டுபிடித்தார். இந்தக் கண்டுபிடிப்புதான் அணு ஆற்றலைப் பெறுவதற்கு அடிப்படையாக அமைந்தது.

டி.என்.ஏ. மூலக்கூறுகள் கண்டுபிடிக்கப்பட்டு விரும்பத்தகுந்த தேவையான மரபுப்பண்புகளை உருவாக்க முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

மருத்துவத்துறையில் வலி இல்லாமல்-தழும்பு இல்லாமல்-அறுவை சிகிச்சை நடைபெறும் முறைகள் உருவாக்கப்பட்டுள்ளன.

வேதியியல் துறையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள பிளாஸ்டிக் பாலிதீன் போன்ற பொருள்களால் உலகம் பெற்றுவரும் பயன் குறைவானது அன்று.

கணினிகள் (கம்ப்யூட்டர்கள்) போன்ற புதிய கருவிகள் உருவாக்கப்பட்டு வருகின்றன. இவற்றால் மக்கள் முன்பு அனுபவித்தறியாத நலங்கள் பலவற்றை பெற்றுவருகிறார்கள்.

வியப்பூட்டும் இவ்வறிவியல் கண்டுபிடிப்புகள் முந்தைய நூற்றாண்டுகளில் ஆமை வேகத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நிகழ்ந்து வந்தன. ஆனால் 1874ஆம் ஆண்டிற்குப் பிறகு, மேலே எடுத்துரைக்கப்பட்டது போன்ற உலகத்தையே மாற்றி அமைக்கும் அற்புதமான கண்டுபிடிப்புக்கள் அடுத்தடுத்து விரைவாக நிகழ்ந்துள்ளன.

இத்தகைய மாற்றங்கள் பற்றி வேதங்கள் புராணங்கள் முதலியவற்றிலும், ஞானிகளின் தீர்க்கதரிசன மொழிகளிலும் எவ்விதக் குறிப்பும் இடம்பெற்றிருப்பதாகத் தெரியவில்லை. ஆயினும், 'பாரிடை வானிடை பற்பலகாலம் விதிசெயப் பெற்றனன்; அவ்வதிசயம் பார்க்கலாம்' என்றும், 'எந்தப் பதத்தலைவராலும் படைக்கவொணாச் சித்தியை' தாம் படைக்க இருப்பதாகவும், வள்ளற்பெருமான் அறிவித்திருக்கிறார்கள். ஆதலால் மேற்கூறப்பட்ட அற்புதமான அறிவியல் கண்டுபிடிப்பு நிகழ்ச்சிகள் 1874ஆம் ஆண்டு தொடங்கி அதிக அளவிலும் விரைவாகவும் நிகழ்வதன் பின்னணியில் வள்ளற்பெருமானின் அருள் ஆற்றல் செயல்பட்டிருக்கிறது என்று உறுதியாக துணிவாக தெளிவாக முடிவு செய்யலாம்.

## 2.உலக ஒருமைப்பாடு உருவாதல்

வெறும் அறிவியல் வளர்ச்சியும் அதனால் வசதிகள் பெருகுவதும் மட்டுமே உலகிற்கு நல்வாழ்வைத் தந்துவிடாது. போர்கள் முதலான கொடுமைகள் நீங்கி ஒருமைப்பாட்டு உணர்வு நிலவினால்தான் மேற்கூறப்பட்ட வசதிகளை மக்கள் நிம்மதியாக அனுபவிக்க முடியும்.

போர்கள் இல்லாத 'ஓருலக அமைப்பை' உருவாக்குவதிலும் வள்ளற்பெருமானின் அருள் ஆற்றல் முனைப்பாக இருந்திருக்கிறது என்பதற்கு சான்று காட்ட இயலும்.

"சாதி சமய வேறுபாடுகள் நீங்கி தடையற்ற பெருநெறி ஒழுக்கம் இனி விளங்கும்" என்று வள்ளற்பெருமான் அறிவித்திருக்கிறார்கள். 1872ஆம் ஆண்டு அவர்கள் இந்த அறிவிப்பை வெளியிட்டு இருக்கிறார்கள். 1900 முதல் 'சன்மார்க்க காலம்' தொடங்குவதாக அவர்கள் அறிவித்திருக்கிறார்கள். இந்தக் காலக்கட்டத்தில்தான் வரலாற்றின் தொடக்க காலம் முதல் இனம் மதம் முதலான வேறுபாடுகள் அடிப்படையாகக் கொண்டு நடைபெற்றுவரும் போர்களை முடிவுக்குக் கொண்டுவந்து உலக ஒருமைப்பாட்டை உருவாக்க பலர் முயற்சி செய்யத் தொடங்கினர்.

1891ஆம் ஆண்டு பிரஞ்சு அறிஞர் பிரடெரிக் பாசி அவர்களின் முயற்சியால் நாடுகளுக்கு இடையே போரைத் தவிர்த்து சமாதானத்தையும் ஒருமைப்பாட்டையும் வளர்க்க சர்வதேச சமாதான சங்கம் அமைக்கப்பட்டது. இதே காலகட்டத்தில்தான் பாசியுடன் இணைந்து பிரிட்டிஷ் பாராளுமன்ற உறுப்பினர் வில்லியம் ரண்டால் கிரிமர் சர்வதேச பாராளுமன்றத்தை உருவாக்கினார். இது 'உலக அரசு' அமைவதற்கான தொடக்க நிகழ்ச்சி என்று நாம் கருதலாம்.

1890 ஆம் ஆண்டு ஜெனிவாவில் அமைக்கப்பட்ட 'சர்வதேச சங்கம்' போர்களைத் தவிர்க்க பெருமுயற்சி செய்தது.

அதன்பிறகு 1945ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட ஐக்கியநாட்டு சபையை உலக பாராளுமன்றத்தின் முன்மாதிரி அல்லது உலக அரசின் முன்மாதிரி என்று கொள்ளலாம். ஐக்கிய நாட்டு சபை முழுமையாக போரை விலக்குதல் போன்ற குறிக்கோள்களை இன்னும் எட்டவில்லை. ஆயினும் அதன் அங்கங்களான உலக மருத்துவக்கழகம் முதலானவை ஆற்றிவரும் பணிகள் உலகம் இதுவரை கண்டிராத புதுமைகள் அல்லவா? இந்த நிகழ்ச்சிகள் யாவும் வள்ளற்பெருமான் சன்மார்க்க

காலமாக அறிவித்த 1900க்குப் பின் நடைபெற்றுள்ளதால், இவை உருவாவதிலும் வள்ளற்பெருமானின் 'அருள் ஆற்றல் முதன்மையான காரணமாக இருந்திருக்க வேண்டும் என்பதை எளிதில் உய்த்துணரலாம்.

## 3.அமைதி வழியில் இந்தியாவின் விடுதலை-ஒருமைப்பாடு

படைவலிமை மிக்க ஆங்கில அரசை எதிர்த்து-அமைதி வழியில்-காந்தி அடிகள் போராடி 1947ஆம் ஆண்டு நமது நாடு விடுதலை பெற்றது; இது அரசியல் உலகம் காணாத புதுமை!

விடுதலைக்குமுன் இந்தியா பல சிற்றரசுகளாக பிரிந்து, தமக்குள் போரிட்டுக் கொண்டு, மக்கள் நலம் கருதாத அரசுகளாகவே பெரும்பாலும் அவை இருந்துவந்தன. விடுதலைக்குப்பின் சிற்றரசுகள் அனைத்தும் இணைக்கப்பட்டு மைய அரசு உருவாக்கப்பட்டது. இதனால் காலங்காலமாக சிற்றரசுகளுக்கிடையே நடைபெற்று வந்த போர்கள் ஓய்ந்தன; இப்போது அமைந்துள்ள மைய அரசும், மாநில அரசுகளும் பல்வேறு நல்வாழ்வுத் திட்டங்களை வகுத்து நிறைவேற்றி வருகின்றன.அதனால் பலநூறு ஆண்டுகளாக பெற்றறியாத நலங்கள் பலவற்றை இப்போது மக்கள் பெற்று வருகின்றனர்.

பெரியம்மை முதலியவற்றை தெய்வக்குற்றமாக எண்ணிய அறியாமை நீங்கி, முறையான தடுப்பு மருந்துகளால் இவை அடியோடு ஒழிக்கப்பட்டுவிட்டன. சாதி மத வேறுபாடுகள் முன்பு இருந்தது போன்ற வெறிஉணர்வுடன் இப்போது காணப்படவில்லை. பொருளாதார சலுகைகளை பெறுவதற்காகவே சாதி மத அமைப்புகள் இயங்கி வருகின்றன. எல்லாருக்கும் எல்லாமும் கிடைக்கும் நிலை இப்போது வளர்ந்துவருவதால் சாதி சமய மத அமைப்புகள் காலப்போக்கில் மறைவதற்குரிய வாய்ப்புகளே அதிகமாக உள்ளன. பல நூற்றாண்டுகளாக நமது நாட்டில் நிலவி வந்த தீண்டாமை என்னும் கொடிய வழக்கம் இன்று சட்டப்படி குற்றமாக்கப்பட்டுள்ளது.

நமது நாட்டில் இமயம் முதல் குமரி வரை ஒரு மைய அரசு அமைந்து, சிற்றரசுகளுக்குள் நிலவிவந்த போர்கள் ஓய்ந்து, தீண்டாமை மதச்சார்பின்மை முதலியன சட்டத்தில் இடம்பெற்று, இரத்தம் சிந்தாத ஆட்சி மாற்றங்கள் நிகழ்ந்து, அனைத்து மக்களும் கல்வி மருத்துவம் முதலான வசதிகளைப் பெற்றுவரும் நிலையை-கடந்த பல நூற்றாண்டுகளாக காணப்படாத நிலையை-இன்று மட்டுமே நாம் காண முடிகிறது. 'சாதி சமய வேறுபாடுகள் நீங்கி இனி சன்மார்க்கப் பெருநெறி விளங்கும்'. என்ற வள்ளற்பெருமானின் அறிவிப்பின்படியே, நமது நாட்டில் மேற்கண்ட மாற்றங்கள் நிகழ்ந்து 'சன்மார்க்க காலம்' அரும்பி வருகிறது என்ற முடிவுதான் நமது நாட்டின் வரலாற்றைத் தொடர்ச்சியாக நோக்கும்போது நமக்குக் கிட்டுகிறது.

## 4.விலங்குகளுக்கு பாதுகாப்பு

வள்ளற்பெருமான் விளக்கும் சன்மார்க்கநெறியின் அடிப்படைக் கோட்பாடு அனைத்து உயிர்களின் சகோதரத்துவம். அதனால் உயிர்க்கொலையையும் புலால் புசிப்பையும் நீக்குமாறு அவர்கள் மிக அதிக அளவுக்கு வலியுறுத்துகிறார்கள்.

ஆங்கிலேயர்கள் ஆட்சி காலமாகிய 1890 ஆம் ஆண்டிலேயே விலங்குகள் பாதுகாப்புச் சட்டம் இயற்றப்பட்டது. இதில் உள்ள குறைபாடுகளைக் களைந்து திருமதி.ருக்குமணி அருண்டேல் அவர்களின் முயற்சியினால் 1960 ஆம் ஆண்டு புதிய சட்டம் இயற்றப்பட்டது. இதனால் மதச்சடங்குகளுக்காக பலி இடுதல் முதலாக விலங்குகளுக்கு இழைக்கப்படும் அனைத்துக் கொடுமைகளும் தடைசெய்யப்பட்டுள்ளன. இந்தச் சட்டத்தின்படி 1962 ஆம் ஆண்டு ‘விலங்குகள் நலவாரியம்’ அமைக்கப்பட்டது.

விலங்குகள் நலவாரியம் விலங்குகள் நலம் காக்க பல கிளை அமைப்புக்களை உருவாக்கி பல பணிகளையும் செய்து வருவதுடன் ‘விலங்கு குடிமகன்’ என்னும் இதழினையும் நடத்தி வருகிறது. இத்தகைய ‘பணிகள் 1874ஆம் ஆண்டிற்கு முன் நடைபெற்றதில்லை. 1874ஆம் ஆண்டிற்குப் பின்னால்-வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்டதற்குப் பின்னால்-வள்ளற்பெருமான் ‘**சன்மார்க்க காலம்’** என்று அறிவித்த 1900க்குப் பின்னால்-இப்பணிகள் மிகவும் புதுமையான முறையில் நிகழ்ந்து வருவதால்-இவற்றின் பின்னணியில் வள்ளற்பெருமான் அவர்களின் அருள் ஆற்றல் செயல்பட்டிருக்க வேண்டும் என்பது உறுதி.

## 4.1.புலால் மறுப்புக் கொள்கைக்கு ஆதரவு

வள்ளற்பெருமான் வலியுறுத்தும் முக்கிய ஒழுக்கமான புலால்மறுப்பு மேலைநாடுகளில் வேகமாக பரவி வருகின்றது. அமெரிக்கா முதலான மேலைநாடுகளில் ‘ஹரே ராமா ஹரே கிருஷ்ணா’ இயக்கம் பரவி உள்ளது. இதில் இலட்சக்கணக்கானோர் சேர்ந்துள்ளனர். இவர்கள் அனைவரும் புலால் மறுப்பை மேற்கொண்டு வாழ்ந்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இதேபோல் அமெரிக்க நாட்டில் வர்ஜீனியாவில் வடலூர் ஞானசபை போன்ற சமரச கோயில் அமைக்கப்பட்டு பலரும் ஒளிவழிபாட்டினை பின்பற்றி புலால் மறுப்பை மேற்கொண்டு வாழ்ந்துவருகின்றனர்.

ஆஸ்திரேலியா பிரிட்டன் போன்ற நாடுகளில் புலால் உணவை நீக்கி தாவர உணவு உண்போரின் எண்ணிக்கை பெருகிவருகிறது. நோபல் பரிசினைப் பெற்ற மருத்துவ வல்லுநர்கள் உட்பட பல புகழ்பெற்ற மருத்துவர்கள்-புலால் உணவு சிறந்த உணவு அன்று என்றும், புற்றுநோய் மாரடைப்பு போன்ற கொடிய நோய்களை உண்டாக்கும் தன்மை வாய்ந்தது என்றும் பல ஆய்வுகளுக்குப்பின் அறிவித்து வருகிறார்கள்.

பல்கலைக்கழகங்கள் புலால் உணவு பற்றிய ஆய்வுகள் பலவற்றை மேற்கொண்டு புலால் உணவின் தீமையை மெய்ப்பித்துக் காட்டி வருகின்றன. புலால் உணவில் இருப்பதைக் காட்டிலும் தாவர உணவுகளில் அதிக அளவு சத்துக்கள் இருப்பதை பல ஆய்வுக்கழகங்கள் மெய்ப்பித்து வருகின்றன.

இவையெல்லாம் வள்ளற்பெருமானுக்கு கிடைத்துவரும் வெற்றிகள் என்று கருதுதல் தவறு ஆகாது.

## 5.ஆன்மீகத் தலைவர்களின் பணிகளில் வள்ளற்பெருமானின் செல்வாக்கு

### 5.1.தியாசபிகல் சங்கம்

வள்ளற்பெருமான் வலியுறுத்தும் அனைத்து உயிர்களின் சகோதரத்துவத்தை மையமாகக் கொண்டு இயங்கும் தியாசபிகல் சங்கத்தின் தலைமை இடம் சென்னை அடையாற்றில் 1882 ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது. இச்சங்கத்தினர் தாவரங்கள் முதல் அனைத்து உயிர்களையும் சகோதரர்களாகக் கருதுகின்றனர்.

ஐரோப்பா அமெரிக்கா முதலான நாடுகளில் உள்ள தகுதிவாய்ந்த மனிதர்களின் மனதினை இயக்கி உலக சகோதரத்துவத்தை நிலைநாட்டும் பணியை தாம் செய்ய இருப்பதாகவும்-இரஷ்யா அமெரிக்கா முதலான வெளிநாட்டினர் இந்தியாவிற்கு வந்து அனைத்து உயிர்களின் சகோதரத்துவத்தைப் போதிப்பார்கள் என்றும்-1873ஆம் ஆண்டின் பிற்பகுதியில் வள்ளற்பெருமான் அறிவித்தார்கள். இச்செய்திகள் யாவும் வள்ளற்பெருமானின் தலைமாணக்கர் தொழுவூர் வேலாயுதனார் தியாசபிகல் சங்கத்தாருக்கு அளித்த வாக்குமூலத்தில் காணப்படுகிறது. அனைத்து உயிர்களின் சகோதரத்துவத்தை குறிக்கோளாகக் கொண்ட தியாசபிகல் சங்கம் அமைப்பதற்கான முயற்சி 1873ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது என்றும், தியாசபிகல் சங்கம் தொடங்கப்படுவதற்கும்-அதன் தலைமைச் சங்கம் இந்தியாவில் சென்னையில் நிறுவப்படுவதற்கும்-கட்டளையிட்ட மகாத்மாக்களில் வள்ளற்பெருமானும் ஒருவர் என்றும், தியாசபிகல் சங்க நிறுவனர்களில் ஒருவரான திருமதி பிளவட்ஸ்கி அம்மையார் கூறுகிறார். இவர் ரஷ்ய நாட்டைச் சார்ந்தவர் என்பதும், இவருடன் சேர்ந்து தியாசபிகல் சங்கத்தை நிறுவ தொண்டாற்றிய திரு.ஆல்காட் அவர்கள் அமெரிக்க நாட்டைச் சார்ந்தவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

டாக்டர்.எஸ்.என்.சுப்பிரமணிய ஐயர், சர்.சதாசிவ ஐயர் அன்னிபெசண்ட் முதலியோர் கூடி இருந்த தியாசபிகல் சங்கப் பேரவையில் பேசிய துறவி ஒருவர், தாம் வள்ளற்பெருமானை இமயமலைச் சாரலில் கண்டதாகக் கூறியிருக்கிறார். தியாசபிகல் சங்கத்தின் உறுப்பினரான திரு.கேசவப்பிள்ளை தியாசபிகல் சங்கத்தை நிறுவிய பெரியார் ஒருவரை கனவில் கண்டதாகவும், அக்கனவில் வள்ளற்பெருமானின் திருஅருட்பாவை அவர் தமக்குத் தந்ததாகவும் கூறியிருக்கிறார். வள்ளற்பெருமானின் திருஅருட்பாவை பயின்ற பிறகே தியாசபிகல் சங்கத்துக்குரிய தத்துவயியலில் பல நுணுக்கமான செய்திகளை தாம் புரிந்து கொள்ள முடிந்ததாகவும் அவர் தெரிவித்திருக்கிறார். இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்தால் தியாசபிகல் சங்கம் உருவாக்கப்படுவதிலும் அதன் தலைமைச் சங்கம் சென்னையில் அமைவதிலும் வள்ளற்பெருமான் உதவியிருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

### 5.2. அரவிந்தர்

1872ஆம் ஆண்டில் வங்கத்தில் தோன்றிய அரவிந்தர் மேல்நாட்டில் கல்வி கற்று, தாயகம் திரும்பியபின் விடுதலைப் போராட்டத்தில் கலந்துகொண்டு ஆங்கிலேய அரசால் தண்டிக்கப்பட்டு ஓர் ஆண்டு சிறையில் இருந்தார். மீண்டும் ஆங்கிலேய அரசு தொல்லை கொடுக்கக்கூடிய நிலை உருவானதால், பிரஞ்சு ஆதிக்கத்தில் இருந்த புதுவைக்கு 1910ஆம் ஆண்டில் வந்துசேர்ந்தார். அங்கு தியான வாழ்வில் ஈடுபட்டார். அப்போது மனிதகுலம் முழுவதையும் தெய்வீக நிலைக்கு உயர்த்தக்கூடிய புதுமையான தவநெறி ஒன்றினை உள்ளுணர்வில் உணர்த்தப்பெற்றார். மேலும், தெய்வீகவுணர்வு சடமான உடலிலும் இறங்கி அதுவும் வேதிக்கப்பட்டால்தான் பரிணாமவளர்ச்சி முழுமை அடையும் என்ற உணர்வையும் பெற்றார். தெய்வீகவொளி உடம்பில் கலப்பதற்குரிய தியானநெறியில் அரவிந்தர் ஈடுபடத் தொடங்கினார். சில ஆண்டுகளில் அவரது உடலில் மாற்றங்கள் உண்டாயின. அவர் மகாசமாதி அடைந்தபோது ஐந்து நாள்கள் வரை அவரது உடலில் பொன் ஒளி ஒன்று தங்கி இருந்ததைப் பலரும் கண்கூடாகக் கண்டனர். அரவிந்தரின் கருத்துகளிலும் ஆன்மீகப் பயிற்சிகளிலும் அனுபவங்களிலும் வள்ளற்பெருமான் வலியுறுத்தும் சன்மார்க்க நெறியின் செல்வாக்கு இடம்பெற்றிருப்பதை அவரது நூல்களைப் பயிலும் எவரும் உள்ளங்கை நெல்லியென அறிய இயலும்.

அரவிந்தரின் வாரிசாகத் திகழ்ந்த அன்னை, சாதி மத இன வேறுபாடு இன்றி பல நாட்டினரும் இணைந்து ஒரே குடும்பமாக வாழ 'ஆரோவில்' என்ற சர்வதேச நகரத்தை உருவாக்க முயற்சி செய்தார். அவரது முயற்சிகள் 'எவ்வுலகும் சன்மார்க்கப் பொது அடைதல் வேண்டும்' என்ற வள்ளற்பெருமானின் கருத்துக்கு செயல்வடிவம் கொடுக்கும் நிலையில் அமைந்திருப்பதைக் காண்கிறோம்.

## 5.3. சுவாமி விவேகானந்தர்

உலகில் சன்மார்க்கநெறி பரவ வேண்டுமாயின், உலக மக்களுக்குத் தொண்டு செய்வோரின் உள்ளத்தில் முதலில் அந்த நெறி இடம்பெற வேண்டும். சன்மார்க்கநெறியின் முக்கிய கோட்பாடு உயிர் இரக்கம். இதற்குத் தடையாக இருப்பவை தீண்டாமை போன்ற அநீதிகளும், சாதி சமயம் முதலியன பற்றிய வேறுபாட்டு வெறி உணர்ச்சிகளுமே ஆகும். வள்ளற்பெருமான் திருக்காப்பிட்டுக் கொண்ட காலமாகிய 1874 ஆம் ஆண்டிற்குப் பிறகு தோன்றிய சுவாமி விவேகானந்தர் காந்தி அடிகள் முதலான ஆன்மீகத் தலைவர்கள் அரசியல் தலைவர்கள் கவிஞர்கள் முதலான அனைவருடைய சிந்தனைகளிலும் சாதி சமய வேறுபாடுகள் ஒழிக்கப்பட வேண்டும் என்ற வள்ளற்பெருமானின் கருத்து எதிரொலிப்பதை நாம் காண முடியும்.

> **"சாதிப்பிளவு இந்தியாவின் முன்னேற்றத்திற்குத் தடுப்புச்சுவராக குறுக்கே நிற்கிறது. அது மனதைக் குறுகச் செய்கிறது. பிளவை ஏற்படுத்தி எல்லை அமைக்கிறது"**
>
> **"சாதிப்பிரிவு வேதாந்தத்திற்கு முரண் ஆனது"**
>
> **"பக்குவம் இல்லாதவர்களின் பயிற்சிக் கூடமே சாதி உணர்வு"**

என்று சுவாமி விவேகானந்தர் முழங்குகின்றார்.

## 5.4.காந்தி அடிகள்

> **"தீண்டாமையை மதம் அனுமதிக்கவில்லை.**
> **அது சைத்தானின் தந்திரம்"**
>
> **"தீண்டாமை கடவுளுக்கும் மனிதருக்கும்**
> **விரோதமான குற்றம். இதை உணர்ந்து**
> **அதற்காக வெட்கப்பட வேண்டும்"**
>
> **"ஒரே ஒரு ஹரிஜனுக்குக் காசி கோவில்**
> **கதவுகள் மூடப்பட்டிருந்தால்கூட அந்தக்**
> **கோவிலில் காசி விசுவநாதர் (கடவுள்)**
> **குடி கொண்டிருக்கமாட்டார்"**

என்று காந்தி அடிகள் எடுத்துக் காட்டுகின்றார்.

'சாதிகள் இல்லையடி பாப்பா' என்று பாரதியும், 'சாதி இருக்கின்றது என்பவனும் இருக்கின்றானே' என்று பாரதிதாசனும்-இவர்களைப் போன்ற கவிஞர்கள் பலரும்-ஆற்றியத் தொண்டினால் சாதி உணர்வு குறைந்து வருகிறது. பெரியார் இராஜாஜி போன்ற தலைவர்கள் செய்த அரிய பணிகளால் பல நூற்றாண்டுகளாக புரையோடி இருந்த தீண்டாமை என்னும் தீமை இன்று நமது நாட்டை விட்டு விலகிவிட்டது. சாதி வேற்றுமைகளும் முன்பு இருந்த நிலையில் இப்போது இல்லை. இவற்றையெல்லாம் வள்ளற்பெருமானின் அருள் ஆற்றலுக்கு-சன்மார்க்க காலத்திற்குக் கிடைத்த வெற்றி என்று கருதலாம்.

மேற்கண்ட மாற்றங்களை உருவாக்க வள்ளற்பெருமானின் அருள் ஒலிக்கு ஆற்றல் உண்டு என்பதை விளக்கும் வகையில் அறிவியலில் இருந்து ஒரு சான்றினைக் காட்ட இயலும். குறிப்பிட்ட எடை உள்ள பொருளுக்கும் ஆற்றலுக்கும் இடையே உள்ள தொடர்பை ஐன்ஸ்டீன் என்ற அறிஞரின் e = mc2 என்ற சமன்பாடு தெரிவிக்கிறது. ஒரு கிராம் எடையுள்ள பொருள் ஆற்றலாக மாறினால் பத்து இலட்சம் வீடுகளுக்கு நாள்தோறும் ஏழுமணிநேரம் விளக்கு எளிய மின்சாரம் ஒரு வாரத்திற்குக் கிடைக்கும் என்பதே மேற்கூறப்பட்ட சமன்பாட்டிற்குப் பொருள் என்று கூறுலாம். சடப்பொருள் ஆற்றலாக மாறும்போது இந்த நிலை என்றால், வள்ளற்பெருமானின் உடம்பு அருள் ஒளியாக மாறி கோடி கோடி பங்கு ஆற்றலுடன் விளங்கி உலகில் அற்புதமான மாற்றங்களை உருவாக்கவல்லதாக திகழ்கிறது என்று உறுதியாக நம்பலாம்.

சோ கோக் சீ என்ற பிலிப்பைன்ஸ் நாட்டு அறிஞர் பிராண சக்தியைப் பயன்படுத்தி ஒரே சமயத்தில் பலருக்கும் நோய்களைக் குணமாக்குதல்-தொலைவில் உள்ளோர்க்கும் நோய்களைக் குணமாக்குதல்-முதலான அரிய கலைகளை அறிவியல் முறையில் பலருக்கும் கற்பித்து வருகிறார். பிராணசக்தியை விட எல்லா வகையிலும் பன்மடங்கு உயர்ந்த அருளாற்றலால் உயிர்களுக்கு நன்மைகள்

பலவற்றை வள்ளற்பெருமான் இயற்றுவது சாத்தியமாகக் கூடியதே என்று நம்புவதற்கு இதை ஒரு சான்றாகக் கருதலாம்.

வள்ளற்பெருமான் 'சன்மார்க்க காலம்' தொடங்குவதாக அறிவித்துள்ள 1900க்குப் பிறகு மேற்கூறப்பட்டவாறு வரலாறு காணாத நல்ல பல மாற்றங்கள் உலகில் வருகின்றான. ஆயினும் இம்மாற்றங்களால் எதிர்பாராத வகையில் சில தீமைகளும் விளைந்திருக்கின்றன என்பதை மறுப்பதற்கில்லை. இதற்குக் காரணம் 'சன்மார்க்க காலம்' இப்போது அரும்பு நிலையில் இருப்பதுதான் என்று கொள்ளலாம். அது மலர்ந்து மணம் வீசும்போது தீமைகள் இல்லாத-முற்றிலும் நன்மைகள் நிறைந்த-புதிய உலகம்-ஆன்மநேயம் விளங்கும் இன்ப அன்பு உலகம்-சாகாக்கலையைக் குறிக்கோளாகக் கொண்டு இயங்கும் அருள் உலகம் - உருவாகிவிடும் என்று உறுதியாக நம்பலாம்.

உலகில் உள்ள கலைகள் அனைத்திலும் சிறந்து விளங்குகின்ற கலை சாகாக்கலையாகத்தான் இருக்க முடியும். இவ்வரிய கலை தெளிவாகவும் முழுமையாகவும் படித்தரமாகவும் திருஅருட்பாவில் மட்டுமே கூறப்பட்டுள்ளது. இது தமிழ்மக்களாகிய நமக்குக் கிடைத்துள்ள மிக உயர்ந்த பேறு.

ஆனால் நம் தமிழகம் திருஅருட்பாவைப் பயின்று பயன்பெறாது இன்றுவரை இருந்துவரும் நிலையை எண்ணிப் பார்த்தால் ஏழ்கடலினும் பெரிய துயரம் எவருக்கும் உண்டாகும்.

சாகாக்கலையினை நமக்கு அளித்துள்ள வள்ளற்பெருமானின் பெயரால், சாகாக்கலையினை ஆய்வுசெய்யும் பயிலவும் பழகவும் ஒரு பல்கலைக்கழகம் நம் தமிழகத்தில் அமைக்கப்படவேண்டும். அங்குப் பன்னாட்டவரும் ஆன்மநேயத்தை மையமாகக்கொண்ட சாகாக்கலையினை வள்ளற்பெருமானின் சிந்தனைகளின் அடிப்படையில் பயிலுதல் வேண்டும். சாதி மத இன மொழி வேறுபாட்டு உணர்வுகளைக் கைவிட்டு ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையைக் கடைப்பிடித்து ஒளி உடம்பு பெற்று மரணத்தை வெல்லும் நிலையினை எய்தமுடியும் என்ற கோட்பாடு இப்பல்கலைக்கலைக்கழகத்தின் வழியே உலகில் பரவுதல் வேண்டும். அப்படிப் பரவினால் ஆயுதப் போட்டியும் வன்முறையும் உலகைவிட்டு நீங்கி இன்ப உலகம் எதிர்காலத்தில் உருவாகும் என்பதில் ஐயம் இல்லை.

வள்ளற்பெருமான் வலியுறுத்தும் சாகாக்கலைப் பயிற்சி ஆன்மநேயத்தைப் அடிப்படையாகக் கொண்டுள்ளது. இந்தப் பயிற்சியில் மக்கள் சமுதாயம் ஈடுபட்டால்-சாகாநிலை அடைதல் என்ற இலக்கு தொலைவில் இருந்தாலும்-அமைதியான அன்பு நிறைந்த உலகியல் வாழ்வு அமையும் என்பது உறுதி.

இன்று உலகில் பல நாடுகளிலும் பயங்கரவாத இயக்கங்கள் பரவி வருகின்றன. பயங்கரவாத இயக்கங்களில் வேலை இல்லாத இளைஞர்களே சேருகின்றனர். பயங்கரவாத இயக்கத்தலைவர்கள் இவ்விளைஞர்களின் உள்ளத்தில் சாதி, மத, இன, மொழி, வெறி உணர்வுகளை வளர்த்து அவர்களுக்கு 'மூளைச் சலவை' செய்து கொலை வெறிச் செயல்களில் ஈடுபடச் செய்கின்றனர்.

வள்ளற்பெருமான் கூறும் 'ஒத்தாரும் தாழ்ந்தாரும் உயர்ந்தாரும் ஒருமையுளராகி' வாழும் சன்மார்க்கப்பொது நெறியினை அரசியல் தலைவர்களும்

தொழில் அதிபர்களும் ஏற்றுக் கொள்ள வேண்டும். அதனால் வேலை இல்லாத் திண்டாட்டம் ஒழியும். இளைஞர்கள் மனம் விபரீத வழிகளை நாடும் வாய்ப்பு இருக்காது.

மனித உடம்பு அரியது-சாகாக்கலைக்கு உரியது என்ற சன்மார்க்க நெறியின் அடிப்படையில் பாடத்திட்டம் உலக நாடுகள் அனைத்திலும் உள்ள கல்விக்கூடங்களில் இடம்பெற வேண்டும். இத்தகைய கல்வியை பயின்றால்தான் எதிர்கால சந்ததியினர் சாதி சமய மத வெறி உணர்வு இல்லாத குடிமக்களாக வாழ்வார்கள். பயங்கரவாதமும் தலையெடுக்காது.

சடப்பொருள்களையும் ஆற்றலாக மாற்ற முடியும் என்பன போன்ற அறிவியல் கோட்பாடுகள் இன்றைய உலகில் செல்வாக்கு பெற்று வருகின்றன. உடம்பு அருள் ஒளியாக-அருள் ஆற்றலாக-மாறும். இதுவே ஆன்மீக அனுபவத்திற்குச் சிறந்த சான்று-என்று எடுத்துக்காட்டும் வள்ளற்பெருமானின் சாகாக்கலைக் கோட்பாடுகளையே எதிர்கால உலகம் ஏற்கும் என்பது உறுதி.

## அடிக்குறிப்புகள்

1. சரவணாந்தா, சாகாக்கல்வி, பக்கம் 15
2. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பிள்ளைப் பெரு விண்ணப்பம்
3. மேலது, பிள்ளைச் சிறு விண்ணப்பம்
4. மேலது, பாடல் 4083
5. மேலது, பாடல் 4087
6. மேலது, பாடல் 4084
7. மேலது, பாடல் 4615 (வரிகள் 1577-1578)
8. மேலது, பாடல் 4641
9. மேலது, பாடல் 4961
10. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 456
11. திருஅருட்பா ஆறாவது திருமுறை, வசன பாகம், பக்கம் 29
12. மேலது, பக்கம் 21
13. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5414
14. மேலது, பாடல் 4503
15. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 438
16. மேலது, பக்கம் 335
17. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 5535
18. மேலது, பாடல் 5538
19. திருஅருட்பா உரைநடைப்பகுதி, பக்கம் 438
20. மேலது, பக்கம் 335
21. ஊரன் அடிகள், இராமலிங்க அடிகள் வரலாறு, பின் இணைப்பு, பக்கம் 21
22. R.R. Butler, Scientific Discovery; மணிமேகலை பிரசுர ஆசிரியர்குழு, அறிவியல் கண்டுபிடிப்புகளும் பயன்களும் பாகம் 1, பாகம் 2
23. மணிமேகலை பிரசுர ஆசிரியர்குழு, உலகசமாதானக் காவலர்கள், பக்கம் 33
24. மேலது, பக்கம் 88
25. பிராணிநல வாரியம் (சரித்திரமும் சாதனைகளும்), பக்கம் 2
26. மேலது, பக்கம் 3
27. Gopinath Aggarwal, Vegeterian or Non-Vegeterian, PP.18-19

28. I bid., pp 10-12
29. Geoffery A.Barborka, H.P.Blavatsky, Tibet and Tulku, pp.56-57
30. ஆ. பாலகிருஷ்ண பிள்ளை, திருஅருட்பா-திருமுகப்பகுதி பாயிரம், பக்கம் 28-29
31. Casava Pillai, Indian Chelas on the Masters, pp.26-27
32. Nirodbaran, Twelve years With Sri Aurobindo, PP.280-283
33. திருஅருட்பா ஆறாம் திருமுறை, பாடல் 4086
34. சுவாமி விவேகானந்தர், சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம், சுடர் 7 பக்கம்187
35. மேலது, பக்கம் 258
36. மேலது, பக்கம் 1251
37. காந்தி அடிகள், மகாத்மா காந்தி நூல்கள், ஏழாம் தொகுப்பு பக்கம் 42
38. மேலது, பக்கம் 117
39. மேலது, பக்கம் 208
40. M.Nelcon Advanced Level Physics, pp-903-904
41. Choa Kok Sui, Advanced Pranic Healing pp. 304-307

## மேற்கோள்நூல் பட்டியல்

### முதன்மை நூல்கள்


ஔவைக்குறள் — **சென்னை**:திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1987.

ஔவையார் தனிப்பாடல்கள் — **சென்னை**: பாரிநிலையம்,1973

கட்டளைத்திரட்டு — **சென்னை**:முத்துவடிவேல் முதலியார் பதிப்பு, 1931

ஞானேச்வரி — **பம்பாய்**:பாரதிய வித்யாபவன்,1987.

ஸ்ரீசற்குருசுவாமிகள் திருப்பாடல் திரட்டு — **குன்னூர்**: ஸ்ரீசற்குரு சர்வ சமரச சங்கம், 1986.

சித்தர் பாடல்கள் — **சென்னை**: பிரேமா பிரசுரம், 1968

சிலப்பதிகாரம் — **சென்னை**:திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1970.

சிவபோகசாரமும் சொக்கநாத வெண்பாவும் — **சென்னை**: புரோகரஸிவ் அச்சுக்கூடம் 1936

சுத்தசாதகம் — **விருத்தாசலம்**:ஶ்ரீ குமாரதேவ சுவாமிகள் மடாலாயம், 1991.

தாயுமானவர் பாடல்கள் — **திருப்பராய்த்துறை**: ஶ்ரீராமகிருஷ்ண தபோவனம், 1988.

திருஅருட்பா முதல் ஐந்து திருமுறைகள் — **சென்னை**: ஊரன் அடிகள் பதிப்பு, இராமலிங்கர் பணிமன்றம், 1981.

திருஅருட்பா ஆறாம் திருமுறை — **சென்னை**:ஊரன் அடிகள் பதிப்பு, இராமலிங்கர் பணிமன்றம், 1981.

திருஅருட்பா உரைநடைப்பகுதி — **சென்னை**:ஊரன் அடிகள் பதிப்பு, இராமலிங்கர் பணிமன்றம், 1981.

திருக்குறாள் — **சென்னை**: திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1962.

திருமந்திரம் மூவாயிரம் — **சென்னை**:திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1962.

திருமூலர் வைத்தியம் — **சென்னை**: தேவராஜ்நாயகர் பதிப்பு

திருவள்ளுவ நாயனார் கற்பம்300 — **மதுரை**:குருசாமி கோனார் பதிப்பு,1928

திருவாசகம் — **சென்னை**: திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1969.

தொல்காப்பியம் — **சென்னை**:நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், 1981.

பரிசுத்த வேதாகமம் — **திண்டிவனம்**: தமிழ்நாடு விவிலிய மறைக் கல்வி திருவழிபாட்டு நடுநிலையம், 1993

பட்டினத்தடிகள் திருப்பாடல் திரட்டு — **சென்னை**: இரத்தின நாயக்கர் &சன்ஸ், 1955.

பதினெண் சித்தர் பெரிய ஞானக் கோவை — **சென்னை**: இரத்தின நாயக்கர்&சன்ஸ் 1898.

மணிமேகலை — **சென்னை**:திருநெல்வேலி தென்னிந்திய

| | |
|---|---|
| | சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்,1971. |
| மலைவாகடம் | **மதுரை**: குருசாமிக் கோனார் பதிப்பு, 1940 |
| முத்துத்தாண்டவர் கீர்த்தனைகள் | **சென்னை:**இரத்தினநாயக்கர் & சன்ஸ், 1995. |
| வரதஞான சௌமியம் 1200 | **சென்னை**:முனுசாமி முதலியார் பதிப்பு, 1927. |
| வைத்திய வாத யோக ஞான சாஸ்திரத்திரட்டு-முதற்பாகம் | **மதுரை**: குருசாமி கோனார் பதிப்பு, 1924. |
| வைத்திய வாத யோக ஞான சாஸ்திரத்திரட்டு-மூன்றாம் பாக புஸ்தகம் | **மதுரை**:குருசாமி கோனார் பதிப்பு, 1914. |
| வைத்திய வாத யோக ஞான சாஸ்திரத்திரட்டு-நான்காம் புஸ்தகம் | **மதுரை**: குருசாமி கோனார் பதிப்பு, 1911. |
| வைத்திய வாதயோக ஞான சாஸ்திரத் திரட்டு-ஐந்தாம் புஸ்தகம். | **மதுரை**: குருசாமி கோனார் பதிப்பு, 1914. |
| வைத்திய வாத யோக ஞான சாஸ்திரத் திரட்டு-எட்டாம் புஸ்தகம் | **மதுரை**: குருசாமி கோனார் பதிப்பு, 1914. |
| வைத்திய வாத யோக ஞான சாஸ்திரத் திரட்டு-ஒன்பதாம் புஸ்தகம் | **மதுரை**: குருசாமி கோனார் பதிப்பு, 1917. |

<u>**துணை நூல்கள்**</u>


| | |
|---|---|
| அருள் குழந்தைசாமி., | சேசுவின் அர்ச்.அவில்லாதெரசாள், திண்டுக்கல்; வீரமாமுனிவர் எழுத்தாளர் கழகம், 1962. |
| அலி, எஸ்.எஸ்., | அற்புதஜோதி ஆரிஃப் நாயகம், நாகூர்; நன்னூலகம், 1994. |
| அலி, ஹைதர்., | காருண்ய ஜோதி நாகூர் பாதுஷா நாயகம். நாகூர்: நன்னூலகம், 1994. |
| அப்பாதுரை, கா., | குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு, சென்னை:திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 1984. |
| இரத்தின சபாபதி, வை., | சிதம்பரம் இராமலிங்கரின் சித்திவளாகம் சென்னை: சென்னைப் பல்கலைக் கழகம் 1983. |
| இராஜகோபாலாச்சாரியார்., | கடோபநிஷத் பொருள்விளக்கம் பம்பாய்: பாரதிய வித்யா பவன், 1962. |
| இப்பராகிம், முகமது., | இராக்கில் குடிகொண்ட இறை நேசச் செல்வர்கள், சென்னை:ஷித்தி பப்ளிஷர்ஸ்,1991. |
| உசைன் சாயிபு,முஹம்மது., | அற்புத ஜோதி ஆரிஃப் நாயகம், நாகூர்:நன்னூலகம், 1994. |
| ஊரன் அடிகள், | வள்ளலார் மறைந்தது எப்படி, வடலூர்; சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், 1980. |
| கந்தசுவாமி, துறவி., | திருஅருட்பிரகாச வள்ளல் இராமலிங்கர் |

பெற்ற இறைவடிவமும் ஐந்தொழில் ஆற்றலும், வடலூர்: திருஅருட்பிரகாச வள்ளலார் தெய்வநிலையங்கள்,1989.

கந்தையா பிள்ளை, ச., உண்மை முத்திநிலை புதுவை:நந்தி வெளியீட்டுக் கழகம், பிரபவ ஆண்டு.

கண்ணுசாமிப்பிள்ளை, கண்ணுசாமி பரம்பரை வைத்தியம், சென்னை:பி,இரத்தின நாயக்கர் & சன்ஸ், 1953.

கலியாண சுந்தரனார், திரு.வி.கா., சித்தமார்க்கம், சென்னை: சாது அச்சுக்கூடம், 1935.
இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், சென்னை: சாது அச்சுக்கூடம்,1955.

காமாட்சி சீனிவாசன்.,செல்வி., குறள் கூறும் சமயம், மதுரை: மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 1979.

காந்தி அடிகள்., மகாத்மா காந்தி நூல்கள் ஏழாம்தொகுப்பு, சென்னை:காந்தி நூல் வெளியீட்டுக் கழகம், 1961.

கிருபானந்த வாரியார்,திருமுருக., திருமுருக கிருபானந்த வாரியார் வரலாறு, சென்னை: திருப்புகழமிர்தம் காரியாலயம், 1983.

சண்முகனார், பழ., அருட்பிரகாச வள்ளலார், சிதம்பரம்:மணிவாசகர் பதிப்பகம், 1986.

சரவணானந்தா., சாகாக்கல்வி, திண்டுக்கல்:சத்திய ஞானக்கோட்டம் 1990.

சிதம்பர சுவாமிகள்,பிறையாறு., வள்ளலார் வாழ்வியல், வடலூர்: வள்ளலார் இளைஞர் மன்றம், 1987.

சீனிவாசன். கு., சுத்த சன்மார்க்க விளக்கம், திருச்சிராப்பள்ளி: இலக்கிய நிலையம் 1966.

சுப்பிரமணியப்பிள்ளை, கா., இலக்கிய வரலாறு முதல்பாகம், சென்னை: ஆசிரியர் நூல் பதிப்புக் கழகம், 1953.

சந்தானாசிரியர் வரலாறு, சென்னை: திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1953.

தமிழர் சமயம், சென்னை: திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1953.

செல்வகணபதி, இரா., கோரக்கர் சித்தர் அருள் வரலாறு, நாகப்பட்டினம்:பொதுநிலைக் கழகம், 1976.

சௌரிராஜன், மு., சரபேந்திரர் சித்த மருத்துவச் சுடர், தஞ்சை: சரசுவதி மஹால்,1973.

தமிழ்வாணன், நூறு ஆண்டுகள் வாழ்வது எப்படி, சென்னை:மணிமேகலை பிரசுரம், 1989.

நிக்கொலஸ், தூயவர்களின் வரலாறு நாகர்கோவில்: நாஞ்சில் பதிப்பகம், 1994.

பத்மாசினி கோபாலகிருஷ்ணன் &சுவாமி நித்யானந்தகிரி ஸ்ரீ ஞானானந்த தரிசனம், தபோவனம்:ஸ்ரீ ஞானானந்த நிகேதன், 1996.

பாலகிருஷ்ணப் பிள்ளை,ஆ., திருஅருட்பா உபதேசப்பகுதி, திருஅருட்பா திருமுருகப்பகுதி, சென்னை: பாரி நிலையம், 1959.

மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு அறிவியல் கண்டுபிடிப்புகளும் பயன்களும் பாகம் 1 & 2 சென்னை: மணிமேகலை பிரசுரம்,1990.

உலக சமாதான காவலர்கள்,

சென்னை: மணிமேகலை பிரசுரம்,1989.

மாணிக்கவாசகம், இரா., திருமந்திர ஆராய்ச்சி
சென்னை:அபிராமி அருள், 1982.

முருகேச முதலியார், க.ச., பொருட்பண்புநூல்- பயிர்வகுப்பு,
சென்னை.

விஜயானந்தா சுவாமி, ஸ்ரீ போதுலூரி வீரபிரம்மம்
வாழ்க்கை,
திருப்பதி:சுக்கில சிங்கையா செட்டி.

விமலானந்தம், மது.ச., தமிழ்வரலாற்றுக் களஞ்சியம்,
சென்னை:ஐந்திணைப் பதிப்பகம்,1987.

விவேகானந்தர், சுவாமி., சுவாமி விவேகானந்தர் ஞானதீபம் சுடர்
7 சென்னை: ஸ்ரீ ராமகிருஷ்ணமடம்
1986.

ஸ்ரீதரன், டாக்டர்., ஸ்ரீராகவேந்திர சுவாமிகள் வாழ்க்கை
விளக்கம்,
சென்னை: கங்கை புத்தகநிலையம்.

கழகத்தமிழ் அகராதி,
சென்னை: திருநெல்வேலி
தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம், 1980.

சித்தர்காடு ஸ்ரீ சிற்றம்பலநாடிகள்
வரலாறு, தருமை ஆதீன
வெளியீடு,
தருமபுரம்:தருமை ஆதீனம்,1987.

திருவாவடுதுறை ஆதீன குரு
பரம்பரை விளக்கம்,
திருவாவடுதுறை ஆதீன
வெளியீடு.

## <u>ஆங்கிலநூல் பட்டியல்</u>

Aaggarwal. Gopinath., Vegeterian or Non-Vegeterian, New Delhi:Jain Book Agency, 1991.

Anathamurthy, T.S., A Short Biography of Sreeman Tapaswiji. Tumkur:Sri Pandurange press.

Barborka,A.,Geoffrey., H.P.Blavatsky, Tibet and Tulku, Madras: The Theosophical Publishers House 1986.

Butler, R.R., Scientific Discovery, London: The Wicklow Press., 1947

Brodrick, James., Saint Francis Xavier, New york: The Wicklow Press,1952.

Casava Pillai., Indian Chelas on the Masters, Madras:The Theosophical society, 1992.

Chaurasia, B.D., Human Anatomy-Regional and Applied, Delhi: CBS Publishers, 1980.

Choa Kok Sui., Advanced pranic Healing, Madras:Sushma Saldhama, 1989.

Leadbeater, C.W., Man Visible and Invisible, Madras: The Theosophical Publishing House, 1974.

Lobsang Rampa, T., The Third Eye, London:Secker & Warbura Ltd., 1956.

Lulkuan yii,Upasika., Practical Buddhism, London:Rider&Company, 1971.

Malik, Arjan Das., Kundalini and Meditation, New Delhi: Manohar Publications,1991

Muktananda, Swami., The Play of Consciousness, New York:SYDA Foundation, 1978.

Narasinga Rao, N., Date of Sri Rama, Madras:International Society for Ancient Civilization, 1990.

Nelkon,M., Parker,P., — Advanced Level Physics, London:Heinmann Educational Books, 1972.

Nirodbaran., — Twelve Years with sri Aurobindo, Pondichery:Sri Aurobindo Ashram, 1995.

Paramahansa Yogananda., — Autobiography of a Yogi, Bombay: Jaico Publishing House 1995.

Thulasiram, T.R., — Aruperum Jothi and Deathless Body Madras:University of Madras,1980

Woodroffe,Sir John., — The Serpant Power, Madras:Ganesh&co., 1989.

The Catholic Encyclopaedia Volume iii, New York: The Encyclopaedia press, 1913.

The World Book Encycropaedia U volume 5, Chicago:World Book Inc., 1987.

Paramahansa Yogananda in Memorium, California: Self Realization Fellowship, 1958.

## பின்னிணைப்பு 1

## சாகாக்கலையில் தேர்ந்து விளங்குவோர்

(ஜீவசமாதியல் அமர்தல், உடம்பை சிவ லிங்கம் போன்ற உருவமாக மாற்றுதல். ஒளியாக ஆக்குதல். வெளியாக விளன்கச் செய்தல் முதலான சாகாக்கலைக்குரிய நிலைகளைப் பெற்ற பெரியோர்கள்.)

## தமிழகம்

**அகத்தியர்**

இப்பெயருடன் பலர் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. சித்தர் மரபில் கூறப்படும் அகத்தியர் அனந்தசயனத்திலும் திருக்குற்றாலத்திலும் சமாதியில் அமர்ந்ததாகக் கூறப்படுகிறது.

**அரதத்தர்**

தஞ்சை மாவட்டம் கஞ்சனூரில் வாழ்ந்தவர். உடம்புடன் பலருங்காண மறைந்தார்.

**அரவிந்தர்**

மகாசமாதி அடைந்து ஐந்து நாள் வரையில் உடம்பு அழிவின் சின்னங்கள் இன்றி ஒளியுடன் விளங்கியது.

**ஆண்டாள்**

திருவரங்கத்தில் அரங்கநாதர் விக்கிரகத்தில் உடம்புடன் கலந்தார்.

**இடைக்காடர்**

"சாகாதிருப்பதற்கு தான் கற்ற கல்வியன்றோ வாகான மெய்க்கல்வி" என்று பாடியவர். சாகாக்கலையினில் தேர்ந்து, சாகாநிலையினை பெற்றவராய் இவர் இருந்திருப்பார் என்பது உறுதி. திருவண்ணாமலையில் சமாதியில் அமர்ந்தவர்.

**உரோமரிஷி**

"சொருப முத்திக்கு அடையாளம் ஏதென்றாக்கால், சுடர்போல் காணுமடாதூவ தேகம்" என்று பாடியவர்.

**ஔவையார்**

சங்கப் புலவரில் இருந்து வேறுபட்டவர். இவர் இயற்றிய நூல் ஔவைக்குறள். இதில் கூறப்படும் சாகாக்கலை தொடர்பான கருத்துக்கள் இவர் சாகாக்கலையில் தேர்ந்தவர் என்பதைப் புலப்படுத்துகின்றன.

**கமலமுனி**

திருவாரூரில் சமாதியில் அமர்ந்ததாகக் கூறப்படுகிறது.

**குதம்பைச் சித்தர்**

“காலனை வென்ற கருத்தறிவாளர்க்கு கோலங்கள் ஏதுக்கடி என்று பாடியவர் சமாதியில் அமர்ந்த இடம் மயிலாடுதுறை.

<u>குமாரதேவர்</u>

வீரவைச மரபினர்-சமாதியில் அமர்ந்த இடம் விருத்தாசலம். இயற்றிய நூல் சுத்த சாதகம். உடம்பு வெளியாய் மாறுவதே உண்மை முக்தி என்று இந்நூ; வலியுறுத்துகிறது.

<u>குருஞான சம்பந்தர்</u>

ஜீவசமாதியில் அமர்ந்த இடம் தருமபுரம். ஜீவசமாதியில் அமர்ந்து சில நாள்கள் சென்று எழுந்துவந்து பேசி, மீண்டும் சமாதியில் அமர்ந்தவர்.

<u>ஞானசம்பந்தர்</u>

சைவ சமயக் குரவர்களில் ஒருவர். உடம்புடன் ஒளியில் கலந்தவர்.

<u>சட்டை முனி</u>

சமாதியில் அமர்ந்த இடம் திருவரங்கம். பல ஊழிக் காலங்கள் வாழ்ந்தவர் என்று கூறப்படுகிறது.

<u>சதாசிவ பிரமேந்திரர்</u>

நெரூர் என்னும் இடத்தில் ஜீவசமாதியில் அமர்ந்தவர்.

<u>சற்குரு சுவாமிகள்</u>

நரை திரை பிணி மூப்பு இன்றி திருச்சி மாவட்டம் வெள்ளனூரில் சமாதியில் இருந்தவர். அன்பர்கள் காண குற்றாலத்தில் உடம்போடு மறைந்தவர்.

<u>சிற்றம்பல நாடிகள்</u>

மயிலாடுதுறையில் காவிரிக்கரையில் மாணவர்கள் அறுபது பேருடன் சமாதியில் அமர்ந்தவர். இந்த இடமே சித்தர்காடு என்று அழைக்கப்படுகிறது.

<u>சுந்தரர்</u>

சைவ சமயக் குரவர்களில் ஒருவர். வெள்ளை யானையில் அமர்ந்து உடம்புடன் கயிலை சென்றதாகக் கூறப்படுகிறது.

<u>தன்வந்திரி</u>

வடமொழி இலக்கண நூல் வகுத்த தன்வந்தரியிலிருந்து வேறுபட்டவர் என்று கூறப்படுகிறது. சமாதியில் அமர்ந்த இடம் வைத்தீசுவரன் கோவில்.

**திருமூலர்**

சிதம்பரத்தில் சமாதியில் அமர்ந்ததாகக் கூறப்படுகிறது.

**நாராயண தீர்த்தர்**

திருவையாற்றுக்கு அருகில் திருப்பூந்துருத்தியில் சமாதியில் அமர்ந்தவர். இறந்த உயிரை எழுப்பும் ஆற்றல் உடையவர்.

**நாவுக்கரசர்**

சைவ சமயக் குரவர்களில் ஒருவர். திருப்புகலூரில் சிவலிங்கத்தில் உடம்புடன் கலந்தவர்.

**பட்டினத்தார்**

திருவொற்றியூரில் சமாதியில் அமர்ந்து உடம்பை சிவலிங்கமாக ஆக்கியவர்.

**பத்ரகிரியார்**

“தஞ்சை மாவட்டம் திருவிடை மருதூர் ஆலயத்தில் உடம்புடன் மறைந்தவர்.

**பாம்பாட்டிச் சித்தர்**

கற்பகாலம் சென்றாலும் உடம்பு அழியாது விளங்கும் நிலை பற்றி பாடியவர். சமாதியில் அமர்ந்த இடம் விருத்தாசலம் என்று கூறப்படுகிறது.

**போதேந்திரர்**

ஆடுதுறைக்கு அருகில் கோவிந்தபுரம் என்னும் ஊரில் ஜீவசமாதியில் அமர்ந்தவர்.

**மாணிக்கவாசகர்**

சைவ சமயக் குரவர்களில் ஒருவர். சிதம்பரம் சிற்சபையில் உடம்புடன் கலந்தவர்.

**முத்துத்தாண்டவர்**

“மாணிக்கவாசகர் போல பேறு தர வல்லாயோ” என்று பாடியவாறு பலரும் காண சிதம்பர சிற்சபையில் உடம்புடன் மறைந்தவர்.

**<u>ஸ்ரீதர சுவாமிகள்</u>**

தஞ்சை மாவட்டம் திருவிசைநல்லூரில் வாழ்ந்தவர். திருவிடைமருதூர் ஆலயச் சந்நிதியில் உடம்புடன் மறைந்ததாகக் கருதப்படுகிறது.

## <u>நோபாளம்</u>

**<u>மச்சேந்திரநாதர்</u>**

நோபாளத் தலைநகர் காட்மாண்டுக்கு அருகில் பாக்மதி என்ற இடத்தில் இவருக்கு ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது. இவர் மரணமின்றி வாழ்ந்துகொண்டிருப்பதாக இங்குள்ள மக்கள் நம்புகின்றனர்.

## <u>உத்திரப்பிரதேசம்</u>

**<u>கோரக்கர்</u>**

உத்திரப்பிரதேசத்தில் கோரக்பூர் என்னும் இடத்தில் கோரக்கர் சமாதியில் அமர்ந்ததாகக் கூறப்படுகிறது. இவ்விடத்திற்கு இதனாலேயே இப்பெயர் ஏற்பட்டதாகக் கருதலாம்.

**<u>பாபாஜி நாகராசர்</u>**

தமிழகத்தில் தற்போது பரங்கிப்பேட்டை என்று அழைக்கப்படும் இடத்தில் கி.பி.203ஆம் ஆண்டில் பிறந்தவர். 'சொருபமுத்தி' என்னும் அனுபவத்தைப் பெற்றதனால் உடம்பு ஒளியாகி நிழல் இன்றி அடிச்சுவடு இன்றி விளங்கும் நிலையில் வாழ்பவர். இமயமலையில் பத்ரிநாத் மலையில் நரநாராயணன் குகை என்னும் இடத்திற்கு மேலே கௌரி சங்கர்பீடம் என்னும் ஆசிரமம் அமைத்து அங்கு தங்கி இருப்பதாகக் கூறப்படுகிறது. 1861 ஆம் ஆண்டு இலாகிரி மகாசயர் என்பவரும், 1894ஆம் ஆண்டு யுக்தேசுவரரும், 1920 ஆம் ஆண்டு யோகானந்த பரமஹம்சரும் இவரைச் சந்தித்திருக்கின்றனர்.

## <u>மகாராட்டிரம்</u>

**<u>ஞானேசுவரர்</u>**

இருபத்து இரண்டாவது வயதில், தேவளாஆலந்து என்னும் இடத்தில் ஜீவசமாதியில் அமர்ந்தவர்.

**<u>துக்காராம்</u>**

அன்பர்களுடன் இறைவனின் புகழைப்பாடியவாறு வீதியில் நடந்து செல்லும்போதே பலரும் காண உடம்புடன் மறைந்தவர். இவர் உடம்பு மறைந்த இடம் புனாவுக்கு அருகில் உள்ளது. இங்கு ஓர் ஆலயம். அமைக்கப்பட்டு நாள்தோறும் வழிபாடு நடைபெற்று வருகிறது.

## ஆந்திரம்

### இராமதாசர்

பத்ராசலம் என்னும் இடத்தில் இராமனுக்கு ஆலயம் அமைத்து பல சோதனைகளைச் சந்தித்தவர். விமானத்தில் ஏறி உடம்புடன் வான்வெளியில் மறைந்தார் என்று கூறப்படுகிறது.

### இராகவேந்திரர்

ஜீவசமாதியில் அமர இருக்கும் நாளை ஓராண்டுக்கு முன்பே அறிவித்து, குறிப்பிட்ட அந்த நாளில் இன்முகத்துடன் சமாதியில் அமர்ந்தவர்.

### வீரபிரம்மம்

கந்திமல்லயப்பள்ளி என்னும் இடத்தில் ஜீவசமாதியில் அமர்ந்து பல மாதங்களுக்குப் பின் மகனுடன் பேசி மீண்டும் சமாதி அனுபவத்தில் ஆழ்ந்தவர்.

## கர்நாடகம்

### மத்வாசாரியார்

நீண்டநாள் வாழ்ந்து உடுப்பியில் உடம்புடன் மறைந்தவர்.

## பின்னிணைப்பு 2

## சாகாக்கலையும் சமயங்களும்

### இந்து

இந்து வேத ஆகமங்களில் சாகாக்கலை இடம்பெற்றிருப்பதாக வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். வேதங்களிலும் உபநிடதங்களிலும் சாகாக்கலைப் பற்றிக் கூறப்பட்டுள்ள பகுதிகள் வெளிப்படையாக வழங்கப்படவில்லை என்று கருதப்படுகிறது. ஆஞ்சநேயர், பரசுராமன், அசுவத்தாமன் ஆகியோர் சிரஞ்சீவிகளாக இருந்து வருகின்றனர் என்று கூறப்படுவது நம் சிந்தனையைத் தூண்டுவதாக அமைந்துள்ளது.

### சைவம்

அப்பர் சம்பந்தர் மணிவாசகர் ஆகியோர் உடம்புடன் மறைந்தனர். முத்துத்தாண்டவர் நந்தனார் பெத்தான் சாம்பான் ஆகியோரும் உடம்புடன் மறைந்தனர்.

### வைணவம்

ஆண்டாள் திருப்பாணாழ்வார் துக்காராம் மீராபாய் பத்ராசலம் இராமதாசர் மத்வாசாரியார் ஆகியோர் உடம்புடன் மறைந்தனர்.

## பௌத்தம்

கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பத்மசாம்பவர் என்ற பௌத்த நெறியாளர் வானவில் போன்று தோன்றிய ஒளியில் உடம்புடன் மறைந்தவர். கலிபோர்னியாவில் இருந்து திபெத்திய தியான நெறிக் கழகம் வெளியிடும் இதழ் ஒன்றில் இத்தகவல் கூறப்பட்டுள்ளது. இதேபோல் ஆர்வதேவர் என்ற பௌத்த நெறியாளரும் ஒளிஉடம்பு பெற்று மறைந்த செய்தியை லாஸ் ஏஞ்சல்ஸில் இருந்து வெளியிடப்படும் மெய்ப்பொருள் ஆய்வுக் கழக இதழ் தெரிவிக்கிறது.

## சீக்கியம்

பஞ்சாபில் தோன்றி இருந்து முஸ்லீம் மத நல்லிணக்கத்தை வளர்க்க சீக்கிய சமயத்தைக் கண்டவர் குருநானக். இவர் உயிர் அடங்கியபின், உடம்பு பூக்களாக மாறி இருந்தது.

## கிறித்துவம்

ஏனோக்கு என்பவர் வாழ்நாளின் இறுதியில் ‘காணப்படாது போயினார்’ என்ற செய்தியும், எலியா என்ற ஞானி ‘பொன்குதிரை பூட்டிய பொன்மயமான தேரில்’ ஒளி உடம்புடன் மறைந்த செய்தியும் பைபிள் பழைய ஏற்பாட்டில் கூறப்பட்டுள்ளது.

சிலுவையில் அறையப்பட்டபின் ஏசுநாதரின் உடம்பு கல்லறையில் வைக்கப்பட்டது. மூன்றாவது நாள் கல்லறையை அவருடைய அன்பர்கள் திறந்தபார்த்தபோது அவருடைய உடம்பு அங்கு இல்லை. சில நாள்களுக்குப்பின் சிலுவையில் அறையப்பட்ட காயங்களுடன் அன்பர்களுக்கு அவர் காட்சி அளித்ததாகக் கூறப்படுகிறது. புனித தெரசாள், பிரான்சிஸ் சேவியர் ஆகியோரின் உடம்புகள் அழியாமல் இருந்து வருகின்றன.

## இசுலாம்

சமாதியில் வைக்கப்பட்டு பல ஆண்டுகளுக்குப் பின் நபிகள் நாயகம் தன் அன்பர் ஒருவருக்காக சலாம் சொன்னதாகவும், அவர்களது கரம் சமாதியில் இருந்து வெளிப்பட்டதாகவும் கூறப்படுகிறது. நபிகள் நாயகத்தின் தோழர் சல்மான் பார்சியின் உடம்பு இன்றும் அழியாமல் இருப்பதாகக் கூறப்படுகிறது. நாகூர் ஆண்டவர் என்னும் பெரியவர் சமாதியில் அமர்ந்த மூன்றாம் நாள் சமாதியின் உள்ளே இருந்தவாறு தமது மகனிடம் பேசியதாகக் கூறப்படுகிறது.

## பின்னிணைப்பு 3

## வள்ளற்பெருமானின் ஒளிஉடம்பும் அன்பர்களின் அனுபவமும்

உண்மை ஞானிகள் அன்பர்கள் பிரார்த்திக்கும்போது ஒளிவடிவமாய்த் தோன்றி அருள்செய்வார்கள் என்று வள்ளற்பெருமான் கூறுகிறார்கள். எக்காலமும் சாகாமல் விளங்கவல்ல ஒளி உடம்பைப் பெற்ற வள்ளற்பெருமான், அன்பர்களுக்கு ஒளிஉடம்புடன் காட்சி தருகிறார்கள் என்று அன்பர்கள் பலரும் கூறுகின்றனர்.

துறவி ஒருவர், இமயமலையில் வள்ளற்பெருமானைக் காணும் பேறு பெற்றது குறித்து தியாசபிகல் சங்கப் பேரவையில் தெரிவித்து இருக்கிறார்.

பிறையாறு சிதம்பர சுவாமிகள், மேட்டுக்குப்பம் சித்திவளாகத்தில் வதிந்திருந்த காலத்தில், ஒரு நாள் அதிகாலையில், வள்ளற்பெருமானை ஒளிஉடம்புடன் தரிசித்ததாகத் தெரிவித்திருக்கிறார்.

‘அருட்பெருஞ்ஜோதியும் சாகாஉடம்பும்’என்ற நூலின் ஆசிரியரும், பாண்டிச்சேரி அரவிந்தர் ஆசிரமத்தில் இருப்பவருமான **திரு.T.R.துளசிராம் 1981** ஆம் ஆண்டு அவருடைய இல்லத்தில் வள்ளற்பெருமான் காட்சி அளித்ததாகக் கூறுகிறார். அவருடைய இல்லத்தில் வள்ளற்பெருமான் காட்சி அளித்த இடத்தில் மின்னோட்டம் போன்ற பொருள் அருள் ஆற்றலை இன்றும் அன்பர்கள் உணர்வதாகக் கூறப்படுகிறது. வள்ளற்பெருமானின் அருள் ஆற்றல் ஐக்கியநாட்டு சபை முதலான இடங்களில் பரவி இருப்பதை காந்தங்களின் துணையால் மெய்ப்பிக்க திரு.துளசிராம் முயற்சி செய்து வருகிறார். இவ்வாய்வுகளை அறிவியல் வல்லுநர்கள் மேலும் விரிவாக நடத்தினால், வள்ளற்பெருமானின் ஒளி உடம்பு பற்றிய அறிவியல் பூர்வமான சான்றுகள் மேலும் கிடைக்கும்.

**அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி**
**அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை**

**தயவு**